# எழுபதுகளில் தமிழ்ப் புனைகதைகள்

பாரதிதாசன் பல்கலைக்கழக பிஎச். டி. பட்டத்திற்காக
அளிக்கப்படும் ஆய்வேடு

மு. சிவக்கண்ணு



தமிழியல் துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
பல்கலைப்பேரூர்
திருச்சிராப்பள்ளி

ஜூன் 1990

# எழுபதுகளில் தமிழ்ப் புனைகதைகள்

பாரதிதாசன் பல்கலைக்கழக பிஎச். டி. பட்டத்திற்காக
அளிக்கப்படும் ஆய்வேடு

மு. சிவக்கண்ணாறு



தமிழியல் துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
பல்கலைப்பேரூர்
திருச்சிராப்பள்ளி
ஜூன் 1990

பாரதிதாசன் பல்கலைக்கழக பிஎச். டி. பட்டத்திற்காக
அளிக்கப்படும் ஆய்வேடு

மு. சிவக்கண்ணு



தமிழியல் துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
பல்கலைப்பேரூர்
திருச்சிராப்பள்ளி

சூன் 1990

**பாரதிதாசன் பல்கலைக் கழகம்**

**திருச்சிராப்பள்ளி**

**தமிழியல் துறை**

**பிஎச்.டி. பட்டத்திற்கான ஆய்வேடு**

**1986 - 1989**

# "எழுபதுகளில் தமிழ்ப் புனைகதைகள்"

ஆய்வு நெறியாளர்: டாக்டர். மா. இராமலிங்கம், எம்.ஏ.,பிஎச்.டி.,
(எழில் முதல்வன்)
பேராசிரியர் & தலைவர்,
தமிழியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக் கழகம்,
பல்கலைப் பேரூர்,
திருச்சிராப்பள்ளி - 620 024.

ஆய்வாளர் : திரு. மு. சிவக்கண்ணு, எம்.ஏ.,
திருச்சிராப்பள்ளி - 620 017.

# சான்றிதழ்

டாக்டர். மா. இராமலிங்கம்,
எம்.ஏ.,பிஎச்.டி.,
(எழில் முதல்வன்)
பேராசிரியர் & தலைவர்,
தமிழியல் துறை,
பாரதிதாசன் பல்கலைக் கழகம்,
பல்கலைப் பேரூர்,
திருச்சிராப்பள்ளி - 620 024.

திருச்சிராப்பள்ளி,
ஜூன் 1990.

"எழுபதுகளில் தமிழ்ப்புனைகதைகள்" என்னும் தலைப்பில் திரு.மு.சிவக்கண்ணு அவர்கள் செய்துள்ள இவ் ஆய்வு பாரதிதாசன் பல்கலைக் கழகத் தமிழியல் துறையில் அவர் பிஎச்.டி., ஆய்வு செய்த காலத்தில் உருவானது என்றும் இவ்வாய்விற்காக ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் இதுவரை அளிக்கப்பெறவில்லை என்றும் சான்று அளிக்கின்றேன்.

29/6

(மா. இராமலிங்கம்)
பேராசிரியர், துறைத்தலைவர்
தமிழியல் துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி - 620 024.

# உறுதி மொழி

மு. சிவக்கண்ணு, எம்.ஏ.,
திருச்சிராப்பள்ளி-620 017.

திருச்சிராப்பள்ளி,
ஜூன் 1990.

"எழுபதுகளில் தமிழ்ப்புனைகதைகள்" என்னும் தலைப்பில் பிஎச்.டி., பட்டத்திற்கு எழுதப்பட்ட இவ் ஆய்வு என் முயற்சியில் உருவானதேயாகும். இந்நூல் இதற்கு முன் எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் கொடுக்கப்படவில்லை என்றும் உறுதியளிக்கிறேன்.

ஒப்புதல் கையொப்பம்:

(மா. இராமலிங்கம்)
பேராசிரியர், துறைத்தலைவர்
தமிழியல் துறை
பாரதிதாசன் பல்கலைக்கழகம்
திருச்சிராப்பள்ளி - 620 024.

(மு. சிவக்கண்ணு)

## நன்றியுரை

இந்த ஆய்வேடு தயாரிப்பதில் எனக்குப் பெரிதும் உதவியவர்கள் மூவர். தமிழ் இலக்கியத்தில் புனைகதைகளின் சிறப்பான இடத்தை எனக்கு எடுத்துக்கூறி, அதில் ஆய்வு செய்ய வலியுறுத்தியவர் பேராசிரியர் முனைவர் மா.இராமலிங்கம். படைப்பிலக்கியவாதியாகவும், திறனாய்வாளராகவும் இருப்பவரிடம் ஆய்வு மேற்கொள்வது ஒரு அரிய வாய்ப்பு. ஆய்வு செய்திட என்னை ஊக்குவித்து, ஆர்வமுடன் நெறிப்படுத்திய பேராசிரியர் 'எழில் முதல்வன்' அவர்கட்கு நான் என்றும் நன்றியுடையவனாவேன். பல நூலகங்களிலிருந்து இதற்கு வேண்டிய புத்தகங்களைக் கொணர்ந்தும், குறிப்புக்களைப் படியெடுத்தும் உதவிய என்மகள் திரு.சி.பொய்யாமொழிக்கும், நல்ல முறையில் தட்டச்சு செய்து இதை உருவாக்கிய திரு.அரங்க.நாராயணன் அவர்கட்கும் எனது நன்றி உரியது.

மு. சிவக்கண்ணு.

# உள்ளுறை

## பகுதி : ஒன்று

## 1. இலக்கியமும் சமூகவியலும்

வாழ்க்கையைப் படைத்துக் காட்டுவது இலக்கியம், அந்த வாழ்க்கையைச் சித்தரிப்பது ஒரு சமூக நிகழ்ச்சி. காலத்துக்குக் காலம் சமுதாயத்திலே தோன்றும் அரசியல், பொருளியல், சமூக, கலாசார, ஆன்மீக இயக்கங்கள் இலக்கிய ஆக்கத்தைப் பாதிக்கின்றன என்பார் கைலாசபதி. வேறுபட்ட, மாறுபட்ட சமூகங்களில் உண்டாகும் மாற்றங்களின் இயல்புகளைச் சுட்டுவதும் இலக்கியமே. மற்றும், தனி மனிதர் சமுதாய மாற்றங்களுக்குத் தக்கவாறு தங்கள் உணர்வுகளை எவ்வாறு செம்மைப்படுத்திக் கொள்ளுகின்றனர் என்பதையும் இலக்கியம் புலப்படுத்தத் தவறுவதில்லை. மனிதனுடைய விருப்பங்களையும், நம்பிக்கைகளையும் இலக்கியம் எதிரொலிக்கின்றது. இவ்வியல்புகளைக் கருத்தில் கொண்டு சமூகச் சக்திகளின் தாக்கத்தால் மனிதன் எவ்வாறு செயல்படுகிறான் என்பதைக் கண்டறிய உதவும் சமுதாய அளவுகோல் என இலக்கியத்தைப் போற்றுவர்.

ஒரு குறிப்பிட்ட கால கட்டத்திலே சமுதாயம் எவ்வாறு இருந்தது என்பதை அறிவதற்குச் சிறந்த இலக்கியப் படைப்பாளர் படைத்த நூல்கள் பெரும் பயன் தருகின்றன. இலக்கியம் என்பது காலந்தோறும் மாறிவரும் மக்கள் உணர்ச்சிகளையும் மதிப்புகளையும் எடுத்துக்காட்டுவது.

இலக்கியம் என்பது சில குறிப்பிட்ட சமுதாயத்தைச் சார்ந்தே தோன்றுகின்றது. சமுதாயத்திற்குப் படைப்பாளன் ஆற்றவேண்டிய பணி ஒன்றுண்டு. படைப்பாளன் தனி ஆளாக இருப்பினும், அவன்

படைப்புப் பயன்படுவது சமுதாயத்திற்குத்தான். இதன் காரணமாக இலக்கியத்தைப் பற்றிய ஆய்வில் எழுகின்ற மிகப் பெரும்பான்மையான வினாக்கள் நேரடியாகவோ, மறைமுகமாகவோ சமுதாயத்திற்குரிய கேள்விகளாகவே அமைந்துவிடுகின்றன.

இலக்கிய நூல்கள் சமுதாய வாழ்வின் ஆவணங்கள் ஆகும்; ஏனெனில் அந்த இலக்கிய நூல்கள் சமுதாயச் சின்னங்களாக விளங்குகின்றன. இவ்வாறு ஒருகாலச் சமுதாயத்திற்கும், அச்சமுதாயத்தினை வெளிப்படுத்தும் படைப்புப் புலமைக்கும் இடையே உள்ள ஒருமைப் பண்பினைத் தெளியலாம்.

முந்திய ஒரு பொருளாதார நிலையிலிருந்து இன்னொரு பொருளாதார நிலைக்குப் போகும்பொழுது வாழ்க்கையில் மாற்றம் ஏற்படுகின்றது. விளைவு செய்யப்படும் பொருள், ஆக்கும் முறை ஆகியவற்றில் ஏற்படும் மாற்றமே சமுதாய மாற்றத்தின் அச்சாணியாக அமையும். மேலும் பொருளாதார அமைப்பின் அடித்தளத்தில் ஏற்படும் சிதைவினாலும், அதனைத் தாக்கும் புறச் சக்திகளின் வலிமையினாலும் மாற்றம் ஏற்படுகின்றது.

பொருளாதார நிலை மாறும்போது மாறும் நிலைமைக்கேற்ற புதிய வாழ்க்கை நெறிகள் எழத் தொடங்கும். புதிய நெறிகள் தோன்றும் பொழுது, பழையனவற்றுக்கும், புதியனவற்றுக்கும் உள்ள இணைப்பின்மை நன்கு தெரியும். ஐரோப்பியராட்சி தமிழ் நாட்டிலேற்பட்டதும் மேனாட்டுச் செல்வாக்கு தமிழ் நாட்டிலே தீவிரமாக இடம் பெறத் தொடங்கிற்று.

"நல்ல இலக்கியத்தைப் புரிந்து கொள்ள முடியாத யாரும் உண்மையில் சமுதாயத்தின் இயல்பை அறிந்து கொள்ள முடியாது என்பர் ரிச்சர்ட் உறாக்கார்ட்"[1] இலக்கியத்தினை அறிந்துகொள்வது அது தரும் இன்பத்திற்காக மட்டும் அன்று. இலக்கியத்தின் இன்பத்திற்காக இலக்கியம் பயில்வோருக்கு மட்டும் அல்லாது சிந்தனையாளர்கள், தத்துவாதிகள் போன்ற பலருக்கும் தேவையான செய்திகளை இலக்கியம் நல்குகிறது.

வரலாற்றுப் பேராசிரியரான கே.கே.பிள்ளை தம்முடைய 'தமிழரின் சமுதாய வரலாறு' என்ற நூலின் முன்னுரையில், "பண்டைக் காலத்தின் சமுதாய வரலாற்றினை அறிந்துகொள்ளக் கிடைத்துள்ள மூலங்கள் பெரும்பாலும், முற்றிலும் மறைமுகமானவை. உணர்ந்தோ, உணராமலோ இலக்கியத்தைப் படைத்தவர்கள் அவர்களுடைய சமுதாய அனுபவத்தைக் குறிப்புகளாக விட்டுச் சென்றிருக்கிறார்கள். வரலாற்றாளருக்கு அத்தகைய குறிப்புகள் அதன் மதிப்பைப் பொறுத்தவரை, மறைமுகமானவை என்பது மறக்க முடியாதது. மிகத் தொன்மைவாய்ந்த தமிழரின், உறுதியாக நாமறிந்த காலக்கட்டத்தைப் பொறுத்தவரை சங்க இலக்கியங்களும் முந்திய வாய்மொழிப் பாடல்களுமே தமிழரின் சமூக வரலாற்றை மீட்டுருவாக்கம் செய்ய முதன்மை வாயிலாக அமைகின்றன. உண்மையைக் கற்பனைப் படைப்பினின்றும், கட்டற்ற வருணனையினின்றும் பிரித்தெடுக்க வேண்டியுள்ளது. எனவே, அவை சமுதாய வரலாற்றாளருக்கு கணிசமான அளவில் உதவுகின்றன. அவை எச்சரிக்கையோடும் பகுத்தாய்ந்தும் பயன்படுத்தப்படவேண்டும்"[2] என்று குறிப்பிடுகின்றார்.

ஜார்ஜ் எல்.ஹார்ட் "பண்டைத் தமிழ் இலக்கியம் பரவலாக, வேறுபட்ட சமுதாயப் பிரிவுகளைப் பற்றித் துல்லியமான ஓவியத்தை நல்குவதோடு தெற்கே ஆரியர் வருகைக்கு முன்பிருந்த தமிழ் நாட்டுச் சமுதாய நிலைமை பற்றியும் மிகுதியாக விளக்குகின்றது"[3] என இலக்கியத்தின் பயனை உணர்த்துகிறார்.

இங்கிலாந்தின் சமுதாய வரலாற்றினை ஆங்கில இலக்கிய வாயிலாக நிறுவும் ஜி.எம்.டிரெவிலியன், "சமுதாய வரலாறு என்பது அரசியல் நீங்கலாக மக்களின் வரலாறே"[4] என்று குறிப்பிடுகின்றார். அரசியல், சமுதாய வரலாற்றிலிருந்து பிரிக்க இயலாதது. ஜி.எம்.டிரெவிலியன் சாசரின் இங்கிலாந்து, சேக்சுபியரின் இங்கிலாந்து, டாக்டர் ஜான்சனின் இங்கிலாந்து, என்ற அவ்வக்காலக்கட்டத்துப் படைப்பிலக்கியவாதிகளின் இலக்கியப் படைப்புகளையும், பிற சான்றுகளையும் கொண்டு அந்நாட்டுச் சமூக வரலாற்றினை நிலை நிறுத்துகின்றார்.

இலக்கியம் காலந்தோறும் உருவத்திலும் உள்ளடக்கத்திலும் மாற்றம் பெற்று வந்திருப்பதை இலக்கிய வரலாற்றினைக் கூர்ந்து நோக்குவோர் அறியலாம். ஒரு காலத்தில் செய்யுள் வழக்கிலேயே அமைந்திருந்த இலக்கியம் மக்கள் சிந்தனையிலும், வாழ்க்கைப் போக்கிலும் மாற்றம் ஏற்பட்டபோது உரைநடையைத் தக்க கருவியாகக் கொண்டது.

"ஆங்கில இலக்கியத்தின் புதிய துறையான நாவல் இலக்கியம் இந்தியப் படைப்பிலக்கியவாதிகளின் கருத்தை மிகவும் கவர்ந்ததற்குத் தலையாய

காரணம் அவ்விலக்கியம் மக்களிடையே பெற்றிருந்த போற்றுதற்குரிய வரவேற்பேயாகும். தமிழ் நாட்டின் பாரம்பரிய சமுதாய அமைப்பு நெறியிலிருந்து பிறழ்ந்து நின்ற, ஆங்கில ஆட்சியின் தாக்கத்தாலும் ஆங்கிலக் கல்வியின் செல்வாக்காலும் புது நிலையும் நோக்கும் பெற்ற மக்கட் பிரிவினரின் இலக்கியக் குரலாகவே, புனைகதை, தமிழ் இலக்கியத்தில் முதல் முதலில் இடம் பெற்றது" என்கிறார் கா. சிவத்தம்பி.[5]

"நாவலாசிரியர் படிப்போரின் மனத்தில் உண்மையான சூழலில் உண்மையான மக்கள் செய்வது போன்ற, அனுபவிப்பது போன்ற தோற்றத்தினை உருவாக்க முனைகிறார்" என்பர் ஜான்ஸ்டீபன்.[6]

<u>புனைகதைகளும் சமுதாயமும்</u>:

"தமிழில் விடுதலைப் போராட்டத்தையொட்டிய காலத்தில் போராட்டத்தை வலியுறுத்தியும் அதில் ஈடுபட்டவர்களின் வாழ்க்கையைச் சித்திரித்தும் பல நாவல்கள் தோன்றின. புகழ்பெற்ற சிந்தனையாளர்களாகவும் தலைவர்களாகவும், திகழ்ந்தவர்கள் நாவல்களுக்குக் கருத்து ஈந்துள்ளனர். திருமண வயதை உயர்த்துதல், 1929-ல் பிறப்பிக்கப்பட்ட குழந்தை மணத் தடைச்சட்டம், தேவதாசி முறை ஒழிப்பு, விதவை மறுமணம், தாழ்த்தப்பட்ட மக்களின் நிலை போன்ற மாறிக்கொண்டிருந்த ஒரு சமுதாயத்தின் கூறுகள் அந்நாளைய நாவலாசிரியர்களுக்கு மிகுதியான மூலக் கருத்துக்களை வழங்கின" என்கிறார் பெ.கோ.சுந்தரராஜன்.[7]

நாவல் என்பது வெறும் கதை கூறும் பொழுது போக்குச் சாதனமாக மட்டுமின்றிச் சமுதாயத்தில் பல மாற்றங்களை ஏற்படுத்தும் ஆற்றல் மிக்க கருவியாகவும் பயன்படுகிறது என்பதில் ஐயமில்லை. சமூகம் மாறுகிறது என்றால் மாறுகின்ற சமூகத்தால் படைக்கப்பெறும் இலக்கிய வகைகளுள் ஒன்றான நாவல்கள் தம்மை வெளிப்படுத்திய சமூகத்தையும், அது அவ்வப்போது அடைந்துவரும் மாற்றங்களையும் காட்டத் தவறுவதில்லை. எனவே, "தமிழ்ச்சமூக நாவல்கள், தமிழ்ச்சமூகத்தையும், தமிழ் மக்களிடையே காணும் மாற்றங்களையும் அறிவிக்கும் காலைச் சங்குகள்"[8] என்று கூறுகிறார் தா.வே.வீராசாமி.

சார்லஸ் டிக்கன்சின் நாவல்களில் சுட்டிக் காட்டப்பட்டுள்ள கடன் வாங்கியவர் சிறைக்கூடம், குழந்தைத் தொழிலாளர், தொழிற் கூடங்கள், இலண்டன் நகரப் போக்குவரத்து, புதிய காவல்துறைப்படை, நீதிமன்றச் சட்டங்கள், அரசாங்க அலுவலகங்கள், பாராளுமன்றத் தேர்தல், கல்வி முறை போன்ற செய்திகள், பதினொன்று முதல் பதினாறு வயதுக்குட்பட்ட குழந்தைகளின் வரலாற்றுப்[9] பாட நூலில் டிக்கன்சின் வாழ்க்கை வரலாற்றுக் குறிப்போடு இடம் பெற்றுள்ளன. ஒரு சமுதாயத்தினுடைய மாற்றத்தையும் இயக்கத்தையும் முழுமையாகச் சித்தரிக்கும் தன்மையும் வன்மையும் கொண்டது நாவல் இலக்கியம்.

சமூகப் புதினம் ஒரு கதையினை அடிப்படையாகக் கொண்டுள்ளது. உரைநடையில் அமைந்துள்ளது. இதில் ஆசிரியர் கதை மாந்தர்களையும், அவர்களின் வாழ்வினையும் குறிப்பிட்ட கால எல்லையில் வெளியிடுகின்றார். அம்மாந்தர் வாழும் சுற்றுப்புறச்சூழலுக்கு ஏற்ற முறையில் அவர்களின் செயல்கள்

விளக்கம் பெறுகின்றன; அவர்தம் நல்லிய உணர்வுகளும், தீவிர உணர்வுகளும் எடுத்துரைக்கப்படுகின்றன. ஆனாலும் ஒரு குறிப்பிட்ட காலத்தில், ஒரு குறிப்பிட்ட இடத்தில் - அமைந்த பொருளாதாரச் சமூக நிலைகளால் தனி மனித நடத்தை பெறும் மாற்றங்களைப் பற்றி அறிவிப்பனவே இவையென்பது பொருந்தும்.

சமூகப் புதினம் என்பது புதினங்களின் வகைகளுள் ஒன்று ஆகும். நிகழ்காலச் சிக்கல்களும், வாழ்க்கைச் சீர்கேடும் இலக்கியப் பொருளாக அமையப்படைக்கப்படுவனவே சமூகப் புதினங்களாகும். சமகால வாழ்வின் எண்ணத்தைச் செலுத்துவது இலக்கிய வளர்ச்சிக்கு வழி கோலுமெனவே இவ்வகைப் புதினங்களுக்கு வரவேற்பும் வாழ்வும் எஞ்ஞான்றும் உண்டு.

ஒரு புதினம் சிறப்பு அடைவதற்கு அதன் அடிப்படை ஆழமாகவும், அகலமாகவும் ஆழ்ந்த எண்ணங்களைத் தூண்டுவதாகவும், மனித சமுதாயத்தின் பொதுக் கருத்தை ஏற்பதாகவும் இருத்தல் வேண்டும்.

ஆலன்ஸ்வின்ஜ்வுட், "எல்லா எழுத்தாளருமே வரலாற்றுப் போக்கிலும், சமுதாயப் போக்கிலும் ஒரு குறிப்பிட்ட சமூகக் குழுவையோ, பிரிவையோ சார்ந்தே இருக்கின்றனர். இச்சமுதாயக் குழுவின் அல்லது பிரிவின் இயல்பையும் மனிதனுக்கு அதனோடு உள்ள தொடர்பையுமே அவர்கள் உண்மையாகப் பிரதிபலிக்கின்றனர்"[10] என்று கூறுகிறார். "சமுதாயத்தில் உள்ள குற்றங்கள், குறைகள், அழகுகள், விகாரங்கள், பெருமைகள்,

சிறுமைகள் அனைத்தையும் எந்தவிதமான தணிக்கைக்கும் இடமின்றி நுணுக்கமாக எடுத்துரைப்பதை இயல்பு நவிற்சியாளர் வரவேற்கிறார்கள்.[11] எல்பார் எமிழ் முதல்வர்; அதுவே இயற்கைத்தனமானதாகும். எனவே நாவல்கள் சமுதாய மாற்றங்களையும், சமுதாயக்கிளர்ச்சிகளையும் வெளிப்படுத்துகின்ற சமுதாய ஆவணங்கள் ஆகும்.

## அடிக்குறிப்புகள்

1. Richard Hoggart, "Literature and Society", A guide to Social Sciences, P.203.
2. K.K.Pillai, Social History of the Tamils, Part I, P.9.
3. George L.Hart, "Ancient Tamil Literature: Its Scholarly Past and Future", Essays on South India, P.42.
4. G.M., Trevelyan, English Social History, Introduction, P.VII.
5. கா.சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப.10.
6. John Stepens, Seven Approaches to the Novel as a Social Document, "Indian Literature, Vol.XXI, No.4, 1978, P.13.
7. P.G.Sundararajan, "The Tamil Novel as a Social Document," Indian Literature, Vol.XXI, No.4, 1978, P.13.

8. நா.வே.வீராசாமி, தமிழில் சமூக நாவல்கள், ப.3.

9. Humphry House, The Dicken's World, Introduction, P.8.

10. Alan Swinge Wood, The Novel and Revolution, P.12.

11. மா.இராமலிங்கம், இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம், ப.49.



## 2. ஆய்வமைப்பு

நோக்கம்:

(1) இலக்கியம் ஒரு காலம் காட்டும் கண்ணாடி என்பர். 1970 முதல் 1979 வரையான பத்தாண்டுக்காலத்தில் இந்தியாவில் அரசியலிலும் சமுதாயத்திலும் மாற்றங்கள் பல நிகழ்ந்துள்ளன. உலகில் விஞ்ஞானப் புதுமைகள் பல தோன்றியுள்ளன. இக்காலத்தில் தமிழில் சிறந்த எழுத்தாளர்கள் பலர் புனைகதைகள் பல தந்துள்ளனர். இவர்கள் இவ்வுலகியல் நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு புனைகதைகளைப் படைத்துள்ளமையை அறிதல்.

(2) தமிழ் எழுத்தாளர்களில் கட்சிச்சார்பற்ற பெரும்பாலோர் சமவுடைமை, பொதுவுடைமைக்கருத்துக்களைத் தழுவி எழுதத் தொடங்கியது 1965-ஆம் ஆண்டிற்குப் பிறகேயாகும். எழுபதுகளில் வெளிவந்த புனைகதைகளில் சமவுடைமை, பொதுவுடைமைக் கருத்துக்கள் இடம் பெறுதலையும் சமுதாய முன்னேற்றத்திற்கான வழிவகைகள் கூறுதலையும் ஆய்தல்.

(3) சமுதாயச் சிக்கல்களைத் தீர்த்திட வழிகாட்டியாகப் புனைகதைகள் இருக்க வேண்டும். தனி மனிதன் திருந்திட இவை உதவுதல் வேண்டும். இஃது எந்த அளவிற்குச் சாத்தியமாயிற்று என்று அறிதல்.

(4) புனைகதைகளுக்கென இலக்கணம், அமைப்பு, கட்டுக்கோப்பு என விதிமுறைகள் சில உள. இவை காப்பாற்றப்பட்டமையையும்,

வரம்பு மீறலையும் கண்டறிதலுடன் நல்ல உத்திகள் எழுத்தமைவையும் காணல். இந்த நான்கினையும் நோக்கங்களாகக் கொண்டது இவ்வாய்வு.

பரப்பும் எல்லையும்:

எழுபதுகளில் அரசியலிலும் சமுதாயத்திலும் ஏற்பட்ட நிகழ்வுகளைத் தேதி வாரியாகத்[1] தொகுத்து அறிதல், இதற்கு சென்னையில் உள்ள இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி நூலகம் ஆகிய நிறுவனங்கள் பெரிதும் உதவின. இந்தியா உள்ளிட்ட நிகழ்ச்சிகள் அனைத்தும் ஆங்கிலத்தில் தொகுக்கப்பட்டிருந்தன; அவற்றுள் தமிழக நிகழ்ச்சிகள் குறைவாகவே காணப்பட்டன.

1983-வரை தமிழில் 6298 புதினங்கள் வெளிவந்துள்ளன.[2] வெளியான ஆண்டு யாதென அறிய இயலாத பல நூல்களும் உள. எழுபதுகளில் மட்டும் 1414 நாவல்கள் முதற்பதிப்பாக வெளியானதாகக் கணக்கிடப்பட்டுள்ளது. முதற்பதிப்பாக நூல் வடிவில் வெளிவந்த அனைத்துப்புனைகதைகளும் ஆய்விற்கு இடம் பெறத் தகுதியுடையனவே, சிறுகதைத் தொகுப்புகளை விடச்சமூகப் புதினங்களே மிகுதியானவை. நூலகங்களிலும் புத்தக விற்பனை நிலையங்களிலும் கிடைக்கப்பெறாதன பல. அவை ஆய்வில் இடம் பெற இயலவில்லை. ஆய்வின் நோக்கத்திற்கும் முடிவிற்கும் தொடர்பில்லாதனவெனக் கருதப்பட்டவை ஒதுக்கப்பட்டுவிட்டன. பலபுதினங்கள், காலத்தையும், இடத்தையும் நிகழ்ச்சிகளையும் காட்டுவதாக இல்லை.

இவ்வாய்விற்கு அகிலன், ராஜம் கிருஷ்ணன், நா.பார்த்தசாரதி, சுஜாதா, ஜெயகாந்தன், இந்திரா பார்த்தசாரதி, எழில் முதல்வன், அசோகமித்திரன், ர.சு.நல்லபெருமாள், நீல.பத்மநாபன், டி.செல்வராஜ், கோவி.மணிசேகரன், ஜெகசிற்பியன், க.சுப்ரமணியன், சின்னப்பபாரதி, ரா.சீனிவாசன், கி.ராஜேந்திரன், தி.ஜானகிராமன், கந்தசாமி, ஐசக் அருமைராஜன், கரிச்சான் குஞ்சு, பொன்னீலன், சூடாமணி, எஸ்.ஏ.வேலாயுதம், லா.ச.ராமாமிருதம், தொ.மு.சி.ரகுநாதன் ஆகிய 26 புனைகதையாளர்கள் எழுதிய 60 நூல்கள் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன. அவை வெளியான ஆண்டுவாரியாக இங்குத்தரப்பட்டுள்ளன.

1970

| | | |
|---|---|---|
| அகிலன் | - | எரிமலை |
| க.சுப்ரமணியம் | - | வேரும்விழுதும் |
| நீல.பத்மநாபன் | - | பள்ளிகொண்டபுரம் |
| தொ.மு.சி.ரகுநாதன் | - | பஞ்சும் பசியும் |
| லா.ச.ராமாமிருதம் | - | அபிதா |
| த.ஜெயகாந்தன் | - | சிலநேரங்களில் சில மனிதர்கள் |

1971

| | | |
|---|---|---|
| இந்திரா பார்த்தசாரதி | - | ஹெலிகாப்டர்கள் கீழே இறங்கி விட்டன. |

| | | |
|---|---|---|
| சுஜாதா | - | பதினாலு நாட்கள் |
| ராஜம் கிருஷ்ணன் | - | புயலின் மையம் |
| த. ஜெயகாந்தன் | - | ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள். |

1972

| | | |
|---|---|---|
| ராஜம் கிருஷ்ணன் | - | வேருக்கு நீர் |

1973

| | | |
|---|---|---|
| அகிலன் | - | எங்கே போகிறோம்? |
| அசோகமித்திரன் | - | தண்ணீர் |
| இந்திரா பார்த்தசாரதி | - | சுதந்திர பூமி |
| எழில் முதல்வன் | - | பொம்பாள இரவுகள் |
| டி. செல்வராஜ் | - | தேனீர் |
| நா. பார்த்தசாரதி | - | சத்தியவெள்ளம் |
| கோவி. மணிசேகரன் | - | கோவியின் சிறுகதைகள் |
| த. ஜெயகாந்தன் | - | ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம் |
| ஜெகசிற்பியன் | - | ஞானக்குயில் |

1974

| | | |
|---|---|---|
| அகிலன் | - | சத்திய ஆவேசம் |
| -----, | - | பசியும் ருசியும் |

| | | |
|---|---|---|
| ஆர். சூடாமணி | - | மானிடஅம்சம் |
| நா. பார்த்தசாரதி | - | ஒப்புரவு |
| ராஜம் கிருஷ்ணன் | - | கரிப்பு மணிகள் |
| -----------, | - | முள்ளும் மலர்ந்தது |
| -----------, | - | கூடுகள் |
| என். ஏ. வேலாயுதம் | - | இருவிழிகள் |
| த. ஜெயகாந்தன் | - | இறந்தகாலங்கள் |
| -----------, | - | உண்மை சுடும் |
| -----------, | - | ஒருபிடிசோறு |
| -----------, | - | புகசந்தி |

1975
----

| | | |
|---|---|---|
| இந்திரா பார்த்தசாரதி | - | குருதிப்புனல் |
| ஐசக் அருமைராஜன் | - | கீறல்கள் |
| கு. சின்னப்பபாரதி | - | தாகம் |
| சுஜாதா | - | சொர்க்கத்தீவு |
| நீல. பத்மநாபன் | - | உறவுகள் |
| நா. பார்த்தசாரதி | - | பிரதிபிம்பம் |
| ராஜம் கிருஷ்ணன் | - | விலங்குகள் |
| தி. ஜானகிராமன் | - | மரப்பசு |
| த. ஜெயகாந்தன் | - | உன்னைப்போல் ஒருவன் |
| -----------, | - | வாழ்க்கை அழைக்கிறது. |

**1976**

| | | |
|---|---|---|
| இந்திரா பார்த்தசாரதி | - | தீவுகள் |
| நா. பார்த்தசாரதி | - | கற்சுவர்கள் |
| பொன்னீலன் | - | கரிசல் |
| தி. ஜானகிராமன் | - | அம்மா வந்தாள் |
| ர. சு. நல்லபெருமாள் | - | திருடர்கள் |

**1977**

| | | |
|---|---|---|
| அகிலன் | - | பால்மரக்காட்டினிலே |
| ----, | - | வேலியும் பயிரும் |
| ர. சு. நல்லபெருமாள் | - | போராட்டங்கள் |
| ராஜம் கிருஷ்ணன் | - | வீடு |
| கி. ராஜேந்திரன் | - | விண்ணும் மண்ணும் |

**1978**

| | | |
|---|---|---|
| சா. கந்தசாமி | - | தொலைந்து போனவர்கள் |
| கரிச்சான் குஞ்சு | - | பசித்தமானுடம் |
| ராஜம் கிருஷ்ணன் | - | அலைவாய்க்கரையில் |
| த. ஜெயகாந்தன் | - | கங்கை எங்கே போகிறாள்? |
| ----------, | - | பாவம் இவள் ஒரு பாப்பாத்தி |

1979

| | | |
|---|---|---|
| நா. சீனிவாசன் | - | அழுகை |
| பொன்னீலன் | - | கொள்ளைக்காரர்கள் |

1980

| | | |
|---|---|---|
| ராஜம் கிருஷ்ணன் | - | கூட்டுக்குஞ்சுகள் |

ஆய்விற்கு உதவியாக சில ஆய்வு நூல்களும், ஆய்வு நெறி நூல்களும், புனைகதை விமர்சன நூல்களும், திங்கள் இதழ்களும் பயன்படுத்தப்பட்டுள்ளன.

ஆங்கில சமூகவியல் வல்லுநர்களின் நூல்கள் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் ஏற்பட்டுவரும் சமுதாய மாற்றங்களை அறிந்திட உதவியாக இருந்தன.

அணுகுமுறையும் கருதுகோளும்:

ஆய்விற்கு எடுத்துக்கொண்ட புனைகதைகள் எழுபதுகளில் வெளியாகி அக்காலத்தில் நாட்டில் ஏற்பட்ட நிகழ்ச்சிகளை உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். சமுதாய வாழ்வின் பிரச்சினைகளை முன்வைத்து எழுந்ததாகவும், பிரச்சினைகளுக்குத் தீர்வுகாண வழிகாட்டுவனவாகவும்

அமைதல் வேண்டும். புனைகதைகள் பொழுதுபோக்கு இலக்கியமாக இருப்பதோடன்றிப் பயன்தரும் இலக்கியமாகவும் இருக்கின்றனவா என்பது கண்டறிதல்.

<u>அடிக்குறிப்புகள்</u>

1. Directory and Year Book Historic dates, 1900-1980, P.232-237

2. வே. சீதாலட்சுமி, தமிழ் நாவல்கள் (அகர வரிசை), முன்னுரை.

*****

## பகுதி : இரண்டு

## 3. குடும்பம்

### காதலும் திருமணமும் :

காதலும் திருமணமும் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. இப்பொழுது நடைபெறும் திருமணங்களில் பல காதல் திருமணங்களேயாகும். திருமணத்திற்கு முன்பே, ஒருவரையொருவர் நன்றாகப்புரிந்து கொள்வதற்கு காதல் வழிசெய்கின்றது. இப்பொழுது வெளிவரும் திரைப்படங்களிலும் காதற் காட்சிகள் பெருமளவில் இடம் பெறுகின்றன. திருமணம் புரிந்துகொண்டபின் வாழ்க்கையைச் செம்மையான முறையில் நடத்திச் செல்ல காதல் உதவிபுரிகிறது.

"காதல், காதல், காதல், காதல் போயின்
சாதல், சாதல், சாதல்"

என்னும் கொள்கைகளைப் பின்பற்றிவருதல் வருந்தத்தக்கது. தற்கொலைகளில் பெரும்பாலனவற்றுக்கு காரணம் காதலேயாகும்.

எழுபதுகளில் புரட்சிகர எழுத்தாளர்கள் தங்கள் புனை கதைகளில் காதல் திருமணத்தை ஊக்கப்படுத்தினர். இது சமய ஒற்றுமைக்கும், நாட்டு நலனுக்கும் வழி வகுக்கும் எனக் கருதினர். விதவைத் திருமணம், மண விலக்கு பெறுதல் ஆகிய எண்ணங்களின் மக்களின் எழுச்சிக்கு இடம் கொடுத்து அவை போற்றி வலியுறுத்தின.

அகிலன் 'காதல் இறந்த கதை'யில் தாத்தா பேரனுக்குக் கதை சொல்வது போல் பிரம்மச்சாரியாக இருக்க விரும்பும் இளைஞனுக்குத் திருமணத்தின் அவசியத்தைச் சொல்கிறார். அதில் சில மடாதிபதிகள் தாங்கள் இளமையில் துறவு பூண்பதால், பல பெண்களைக் கற்பழித்துக் கொன்று விடுகின்றனர், என்று சொல்லி, மடாதிபதிகளின் செயலைக் கண்டித்தும், மணவாழ்வின் உயர்வினை எடுத்துக் கூறும் நாட்டு நடப்பினை எடுத்துக்கூறுகின்றார். எடுத்துக்காட்டாக "சாமிகளுக்கு கவலை? கொஞ்ச நேர விளையாட்டுத்தான் அதுக்கு முக்கியம்.

"கொஞ்ச நேரம் என்னடா? விடிப் பொழுதன்னு சொல்லு"

"ஆமாண்ணே! கால் நாழித் திலவுக்கு ஒரு பச்சைக் கிளி உசிரக் குடிச்சிட்டாண்ணே............"

"ஒரு கிளியா? – டேய், மறந்து போச்சா? தம்பி வேகத்திலே எல்லாத்தையும் மறந்திட்டியா? இது எத்தனையாவது தெரியுமா?"

"மறப்பேனாண்ணே? மறக்க முடியுமா? இது ஒன்பதாவதில்லே! இந்த உசிரு கட்டையிலே இறக்கிறதுக்குள்ளே, இன்னும் இப்படி எத்தனையோ?"[1] என்று இளம் பெண்களின் உடல்களை அப்புறப்படுத்துவோர்களின் வாய்மொழியாக அக்கிரமத்தின் உச்ச நிலையை வருணிக்கின்றார்.

காதல் என்பது ஆணும் பெண்ணும் ஒருவர் மற்றவரிடம் காட்டுகிற அன்பே தவிர, ஒருவரை ஒருவர் ஆக்கிரமிப்பதாகாது என்பதை

அழுத்தமாக ரங்கா – கல்யாணி (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்) காதலின் வெளிப்படுத்துகிறார், செயகாந்தன். காதலுக்காகத் தியாகம் யார் செய்தாலும், அது அவர்களுக்காகச் செய்ததாக அமைய வேண்டுமே தவிர மற்றவர் வற்புறுத்திப் பெற்றதாக அமையக் கூடாது என்றும் உணர்த்துகிறார். மேலும் தாங்கள் கொண்ட காதலுக்காக, இருவரும் ஒன்றாகச் சாவதில் காதலின் பெருமையை உணரமுடியாது; சொல்லப்போனால் அது ஒருவகை மனநோய்; மாறாக இருவரும் ஒன்றாக வாழ்வதில்தான், வாழும் முறையில் தான் காதலின் பெருமையைக் காணமுடியும் என்ற கருத்தையும் கல்யாணி வாயிலாகத் தெளிவுபடுத்துகிறார், செயகாந்தன். ஏறத்தாழ இதே போன்ற கருத்தை அவரது "லவ் பண்ணுங்கோ ஸார்" சிறுகதையின் பாத்திரமும் கீழ்வருமாறு கூறுகிறது.

> 'லவ்வுனாலே 'லைஃபே' குட்டிச்சுவராப் போனா அது
> என்ன லவ்? யோசிச்சுப் பாருங்கோளேன் சார்'[2]

காதலுக்காக, காதலனோடு ஒரு பெண் தன் வீட்டை விட்டு ஓடிப்போவதிலும் செயகாந்தனுக்கு உடன்பாடில்லை என்பது அவர் படைத்துள்ள பாத்திரங்களைக் கூர்ந்து நோக்கும்போது தெரிகிறது. அவர் படைத்த பட்டம்மாள் (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்),

> 'எல்லோரும் சேர்ந்து என்னை அனுப்புறதன்று
> (தாயாருடன்) முடிவு பண்ணிட்டீங்களா நான்
> ஒன்னும் அதுக்காக உங்களுக்கெல்லாம் தெரியாமல்

> அவரோடே ஓடிட மாட்டேன், ஓட முடியாதது இல்லை, அப்படியெல்லாம், பாக்கறவங்க சிரிக்கும் படியா நடந்துக்கிறதில்லேன்னு நாங்க பேசி முடிவு பண்ணிக்கிட்டிருக்கோம்'.[3]

என்று கூறுகிறாள்.

கீதா,

> 'எப்பொழுது வேண்டுமானாலும் நான் சம்யுக்தையாக மாறத் தயார்; நீ பிருதிவியாக மாறுவாயா?'[4]

என்று ராஜாவிற்கு மடல் எழுதினாலும், வாழ்க்கையின் சகதிக்கு நான் பலியாக விரும்பவில்லை[5] என்று பதிலெழுதிவிடுவதால் கீதாவும் காதலுக்காக ஓடிப்போகவில்லை.

தங்கம் (வாழ்க்கை அழைக்கிறது) ஒருத்திதான் செயகாந்தனால் படைக்கப்பெற்ற, காதலுக்காக வீட்டை விட்டு ஓடிப்போன ஒரே ஒரு பெண். ஆனால் அவள் ஓடிப் போவதற்கும், சங்கரநாராயண் மீது அவள் கொண்ட காதலைவிட, அவளது தாய்மாமனிடம் இருந்து தப்ப வேண்டும் என்ற அவளது ஆர்வமே பெரும் காரணமாகும். மேலும், அக் காரணத்திற்காக ஓடிப்போனாலும் ஓடிப்போன தங்கத்தின் வாழ்வு ஒளியுடையதாக அமையவில்லை. சங்கரநாராயண் அவளை ஏமாற்றிவிட்டு ஓடிப்போய்விட்டான் எனச் செயகாந்தன் அமைப்பதைப் பார்க்கும்போது,

காதலுக்காக வீட்டை விட்டு ஒரு பெண் ஓடிப்போவதை பார்ப்போர் சிரிக்கத் தக்கது; இழி சொல்லை தேடித்தருவது; வாழ்க்கையையும் வளப்படுத்தாது என்றே அவர் கருதுகிறார் என நாம் உணரலாம்.

ஓர் ஆணும் பெண்ணும் இணைந்து வாழ, அவர்களுக்கிடையே தூய, ஆழமான காதல் இருந்தால் போதும்; திருமணம் என்ற ஒன்று கூடத் தேவையில்லை எனக் கூறும் ஒரு கொள்கையும் செயகாந்தனிடம் உண்டு. இந்த 'விடுதலைக் காதல்' கொள்கை பற்றிய செயகாந்தனின் கண்ணோட்டத்தையும் அவரது பாத்திரப் படைப்புக்கள் புரிய வைக்கின்றன.

செயகாந்தன் ஒருசார்புநிலை எழுத்தாளராக இருந்தபோது, சடங்குகள், சம்பிரதாயங்கள் தேவையற்றவை என அவர் கருதியபோது, 'விடுதலைக் காதல்' கொள்கையையும் ஆதரிக்கிறார் என்பதை அவரது தொடக்க கால நாவல்களின் பாத்திரப் படைப்புகளும் அவரது சிறுகதைகளும் உணர்த்துகின்றன.

'கானகத்தின் தனிமையிலே, சமூகத்தின் கட்டுகளற்ற, மனிதர்களின் போட்டியும், பொறாமையுமற்ற இன்ப வெளியிலே அவர்கள் முடங்கிக் கிடந்தனர். மனித வர்க்கத்தின் பொச்சரிப்பிலிருந்தும், பொறாமையிலிருந்தும், கடமை என்ற தூக்குக் கயிற்றிலிருந்தும், கட்டுப்பாடு என்ற விலங்கிலிருந்தும், விடுபட்ட தனி மனிதர்கள் அவர்கள். அவர்களுக்கிடையில் காதல் இருந்தது![6] என்று 'ஒருபிடி சோறு' எனும் புனைகதையில் செயகாந்தன் எழுதுகிறார்.

"தனி மனிதன்" என்ற சிறுகதையில் செயகாந்தன் விருதலைக் காதலைப் போற்றுவது போல் நமக்கு உணர்த்துகின்றார். மேலும் "கற்பு நிலை" என்ற சிறுகதையில் இன்னும் வெளிப்படையாகவே, இக்கொள்கையைப் பின்பற்றிய கருணா என்னும் பாத்திரத்தைப் படைத்திருக்கிறார், செயகாந்தன்.

'ஆனா அவளுக்கோ (கருணாவுக்கு) கல்யாணங்கிற வெத்துச் சடங்கு வேண்டாங்கறது கொள்கை. மனிதன் சுதந்திரமாகக் காதலிக்க வேணுமாம்'[7] என்று அவளைப் பற்றிக் குறிப்பிடுகிறார்.

இக்கருத்தைச் செயகாந்தன் ஆதரிக்கிறார் என நாம் உணரும் வகையில் அவரது முதலிரு நாவல்களிலும், காதல் கொண்டு, ஆனால் திருமணமின்றியே இணைந்து வாழும் இணைகள் பலவற்றைப் படைக்கிறார் அவர். சபாபதி – காமாட்சி (வாழ்க்கை அழைக்கிறது), ரௌாக் – ரஸியா (வாழ்க்கை அழைக்கிறது), மாணிக்கம் – தங்கம் (உன்னைப்போல் ஒருவன்) ஆகியோர் இத்தகைய இணைகளே.

திருமணம் – மணவிலக்கு இவை பற்றிய செயகாந்தனின் கண்ணோட்டங்களும் தொடக்க காலத்தில் ஒரு போக்குடையனவாக இருந்தன; பின்னால் வேறு போக்குடையனவாக மாறிவிட்டன. திருமணம் என்பது தேவைக்காக, வாழ்க்கை வசதிக்காகச் செய்துகொள்ளப்படும் ஓர் ஏற்பாடு. அது குறிப்பிட்ட இருவருக்கும் ஏற்றதாக அமையாதபோது அவர்கள் தங்கள் வாழ்க்கையைத் தங்கள் மனத்திற்கு ஏற்ப மாற்றியமைத்துக் கொள்ளலாம்

என்பது அவர் தொடக்க காலத்தில் கொண்ட கண்ணோட்டம். இதனை அவரது கூற்று தெளிவு படுத்தும்.

> கழுத்திலே கட்ன ஒரு கயித்தெ வெச்சுகிட பிரியமில்லாத
> ரெண்டு பேரும் கழுத்திலே சுருக்கிக்கிடு
> சாவறதாம்மே, என்னமோ புடிக்கலே, அவ பூட்டா,
> நாம்பளும் இன்னொருத்தியே பார்த்துக்குவோம் -
> அப்படின்னு நான் யோசிச்சேன்.[8]

இவ்வகையான திருமண வாழ்வு வாழும் பெண்களாகவே தங்கம் (வாழ்க்கை அழைக்கிறது), தங்கம் (உன்னைப்போல் ஒருவன்), அலமேலு (உன்னைப்போல் ஒருவன்) போன்றோரைப் படைத்துக் காட்டுகிறார், செயகாந்தன். இவர்களெல்லாம் திருமணம் என்ற சடங்கே இன்றிக் கூடத் தங்கள் மனம் விரும்பிய ஆணுடன் இணைந்து வாழ்வதாகச் செயகாந்தன் படைப்பதை நோக்கும்போது, திருமணத்திற்கு அவர் மிக இன்றியமையாத இடத்தைத் தம் சிந்தனையில் கொடுக்கவில்லை என்ற முடிவிற்கு வந்தால் தவறில்லை.

ஆனால் பின்னால், திருமணம் மிகப் புனிதமானது; ஒருமுறை மணந்து கொண்டால் பின்னர் அதிலிருந்து விலகவே கூடாது என்று கருதத் தொடங்கி விட்டார், செயகாந்தன் என்பதை அவரது பிந்திய நாவல்களின் பெண் பாத்திரப் படைப்புகள் புலப்படுத்துகின்றன. எந்தச் சூழலிலும் மணவிலக்குக் கூடாது என்பதைக் கல்யாணி - ரங்கா (ஒரு நடிகை

நாடகம் பார்க்கிறாள்) வாயிலாகவும் வலியுறுத்துகிறார். கணவன் மனைவி இருவரும் உயிரோடிருக்கும்போது எக்காரணம் கொண்டும், மணவிலக்குக் கூடாது எனக் கருதும் செயகாந்தன் யாரேனும் ஒருவர் இறந்துவிட்டால் மற்றவர் மறுமணம் செய்துகொள்ளுதல் பற்றிக் கருதுவது பின்வரும் புதினங்களில் வெளிப்படுகிறது. தேவகி (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்) இறந்த பிறகு கல்யாணியை மறுமணம் செய்துகொள்ளும் ரங்காவையும், அம்பிகை (இந்த நேரத்தில் இவள்) இறந்த பிறகு கோதையை மணந்து கொள்ளும் மகுடேசன் பிள்ளையையும் படைத்துக் காட்டுகிறார், செயகாந்தன். ஆனால் கணவன் இறந்த பிறகு மறுமணம் செய்துகொள்ளும் இந்து சமயப் பெண்ணாக அவர் யாரையும் படைக்கவில்லை.

இவ்வாறு இந்து சமயப் பெண்களைப் பொறுத்தவரை கணவனை இழந்த பிறகு கல்யாணம் (மறுமணம்) இல்லை என்று காட்டும் செயகாந்தன் கிறிஸ்துவ சமயப் பெண்ணாகிய தெரஸாவுக்கும் (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்) மிஸஸ் மாமுவலுக்கும் (கங்கா எங்கே போகிறாள்?) அத்தகைய வாழ்வை அமைத்துக் காட்டுகிறார்.

மணவிலக்குப் பற்றித் தொடக்க காலத்தில் புதிய புரட்சிச் சிந்தனைகள் கொண்டிருந்த செயகாந்தன் பின்னால் அவை பற்றி மரபு வழிச் சிந்தனைகளையே ஏற்றுக் கொண்டிருக்கிறார் என்ற முடிவிற்கு வரலாம்.

அமெரிக்க சமூகவியல் ஆய்வாளர் ராபர்ட் மார்ட்டன், ராபர்ட் நிஸ்பெத் எனும் இருவரும் மண முறிவு பற்றித்தெளிந்த கருத்து தருகின்றனர்.

"திருமண வாழ்க்கையில் ஏற்படும் தவிர்க்க முடியாத சிக்கல்களைத் தீர்க்க உதவும் பாதுகாப்பான வழிமுறைகளில் ஒன்று விவாகரத்து ஆகும். தற்போதைக்குப் புரிந்து கொள்வதை விட, அல்லது சேர்ந்து வாழ்வதை விட, குடும்பத்தில் ஒன்றுக்கு மேற்பட்ட மனைவிகளையும் சேர்த்துக் கொண்டு குடும்பம் விரிவடையாத, விவாகரத்தையே ஒரு குறிப்பிட்ட சமுதாயம் ஆதரிக்கிறது, என்று நாம் கூறிவிட முடியாது. எனினும் திருமண வாழ்க்கையில் ஏற்படும் பிரச்சனைகளைத் தீர்ப்பதற்கென ஏற்பட்ட ஒரு சிறந்த உபாயமாக விவாகரத்துப் பலராலும் ஒரு மனதாக ஏற்றுக்கொள்ளப் பட்டுள்ளது. மேலும் பல சமூகங்கள் அளிக்கும் தீர்வு என்னவெனில் விவாகரத்தின் பல தரப்பட்ட வகைகளேயாகும்".[9]

அவர்கள் மேலும் கூறுகையில், பெரும்பாலும் தம்பதியினரில் கணவனோ அல்லது மனைவியோ அல்லது இருவருமோ உறுதியான குண நலன்களைக் கொண்டவர்களாக இருக்கலாம். தம்பதியினரில் ஒருவரோ அல்லது இருவருமோ விவாகரத்தைத் தவிர்ப்பதற்காகக் கூறப்படும் காரணம் குழந்தைக்காகச் செய்யப்படும் தியாகம் என்பதேயாகும். சுற்றுப்புறத்தாரின் பொறுப்பு மற்றும் விவாகரத்து என்பது, நன்னடத்தை முறை என்று கூறப்படும் மதக் கோட்பாடுகளாகவும் இருக்கலாம். எனினும், இவற்றில் முதல் இரண்டு காரணங்களும் தவறானவைகளே ஆகும். ஏனெனில், குழந்தைகள் பொதுவாக அன்பிற்காக ஏங்குபவர்களாகவும், நண்பர்களைப் பார்க்க நேருகையில், தங்களுடைய பெற்றோரின் செயலை அவர்களிடம் கூற கூச்சப்படுபவர்களாகவும் இருக்கலாம். குடும்பத்தினுள் காணப்படும் குழப்பங்களை அண்டை வீட்டார்

அறிந்திருக்க வாய்ப்பு உண்டு. ஏனெனில், தம்பதியினர் மனமொத்து ஒரு சில செயல்களில் ஈடுபடுவர். மற்றும் ஒருவர் மற்றொருவரின் துணையில் மகிழ்ச்சியடைபவராகவும் இருக்கலாம். சிறப்பாகவும், ஒழுங்காகவும் காணப்படும் கணக்கற்ற குடும்பங்களிலே கூட வேறுபாடுகள் காணப்படுகின்றன.[10]

தமிழில் எச்.ஏ.வேலாயுதத்தின் 'இரு விழிகள்' எனும் நாவல் ஒன்றே கலப்புத் திருமணத்தினை வலியுறுத்துகின்றது. சிவஞானம் இஸ்மாயில் எனும் முகமதியருடன் நட்பு கொண்டான்; அவரது மகளைத் திருமணம் செய்து வாழ்ந்தான்[11] இந்த முஸ்லிம் ஒற்றுமையை வலியுறுத்தவும் காதல் திருமணத்தை ஊக்குவிக்கவும் எடுத்துக்காட்டாக அமைகின்றது.

## கற்பு

தமிழர் வாழ்க்கையில் கற்பு குறிப்பிடத்தக்க இடத்தை வகிக்கின்றது. கற்புக்குக் கண்ணகியைக் குறிப்பிடுவர். கணவனின் உயிர் அநீதியாகப் பறிக்கப்பட்டது என அறிந்தவுடன், சினங்கொண்டு அரசவைக்குச் சென்று, தம் கணவன் குற்றவாளி அல்ல என நிரூபித்ததோடு மட்டும் அல்லாது, மதுரை மாநகரையே அழித்த பெருமை கற்புக்கரசி கண்ணகிக்கே உரித்தானது. ஆடல் மகளிர் குலத்தில் வந்தபோதிலும் கோவலனையே கணவனாக வரித்த பின்பு, வேறு ஆடவரைப் பற்றிச்சிந்தையாலும் நினையாத மாதவியும் கற்புக்குச் சிறந்த உதாரணமாக விளங்குகின்றாள்.

எமனுடன் போராடி, தன் கணவனின் உயிரை மீட்டுத்தந்த சாவித்திரி, நளாயினி, தமயந்தி போன்றவர்கள் கற்பு என்பதற்குப் பொருளாக விளங்குகின்றனர். கற்பு என்பது ஆண், பெண் ஆகிய இருசாரார்க்கும் பொதுவானதே.

ஒரு நாட்டின் முன்னேற்றத்தைக் காணும் அளவுகோலாகப் பொருளாதாரத்தைக் கருதுவதா அல்லது கலாச்சாரத்தைக் கொள்வதா என்றால் கலாச்சாரத்தைத்தான் என்று விடையளிக்க வேண்டும். தமிழ்ப் புனை கதையாளர்கள் தமிழகத்தின் உயிர்ப்பண்பாய கற்பினை முன் வைத்துக் கதை புனைவர்; அதைக் காத்திடல் அவசியம் என்றும் வலியுறுத்துவர்.

'அது (கற்பு என்பது) உடம்பையில்லை, உள்ளத்தையும் உயிரையும் சார்ந்த ஒரு பண்பு - ஒருவனுடைய பலாத்காரச் செயலால் ஒரு பெண் அதை இழந்து விட்டாள்னு சொன்னால் கற்பு என்கிற உயர்ந்த பொருளை ரொம்ப மலிவான மட்டச் சரக்காகத் தாழ்த்திவிட்ட மாதிரி தான்' என்ற புதிய வெளிச்சம் தெரிகிறது. என்றும், பாவத்தைப் பற்றியே முதலில் கருதாத பெண்ணுள்ளம், பிறகு தான் பாவம் செய்து-விட்டதாகக் கருதி கடலில் விழ நினைக்கும் எண்ண அலைகளைச் சாரதா மனத்திலிருந்து வரிசை வரிசையாகத் தீட்டிக் காட்டுகிறார், சூடாமணி.[12]

பின்னர் ஆறுதல் கிடைக்கும் நிலை உண்டாகிறது. அதன் விளைவாக எண்ண உலகில் புதிய மாற்றம் ஏற்படுகிறது. அதற்கு முன்னர் நடந்த செயல்களைத் தன் வாழ்வில் நடக்கவில்லை என எண்ணும் எதிர்

மறை என்னும் எழுகின்ற எதிர் ஓட்டம் நிகழ்கிறது. உடன்பாடு, எதிர் மறை என இப்படிச் சுழலும் மன அலைகளை மாறி மாறிக் காட்டும் இருவகை ஓட்டங்களை மாண்ட அம்சம் எனும் உளவியல் நாவல் காட்டுகிறது.

'சில நேரங்களில் சில மனிதர்கள்' கங்காவை ஒரு புரட்சிப் பெண்ணாகவும், கற்பின் சிகரமாகவும், வருங்காலப் பெண்களுக்கு ஒரு வழிகாட்டியாகவும் செயகாந்தன் காட்டுகிறார்.

பிரபுவிடம் தன் கற்பை இழந்த பின்னர், அவளால் வேறொருவரை மனத்தில் நினைக்க முடியவில்லை. பிரபுவோடு வாழ்வதையே அவள் விரும்புகிறாள். மனைவி என்றில்லாவிட்டாலும் அவனுக்கு ஆசை நாயகியாகவேனும் இருப்பதற்கு ஆசைப்படுகிறாள். தன்னைப் பற்றிய ரகசியம் அம்பலப்பட்டுப்போன பிறகு, அவனைத் தவிர வேறு யாரோடு வாழ்ந்தாலும் அது விபச்சார வாழ்க்கைதான் என்று தனக்குள் உணர்கிறாள். திருமண வாழ்க்கைக்காக அவள் ஏங்கவில்லை. பிரபுவின் அருகிலே உரிமையோடு அமர்ந்து அவனோடு பேசுவதும், அவனோடு 'வாக்கிங்' போவதுமே அவளுக்குப் போதும் என்று இருக்கிறது.

கற்பு என்றால் குறிப்பிட்ட காலத்தில் ஒரு பெண் எந்த ஓர் ஆணோடு வாழ்கிறாளோ, அந்த ஆணுக்கு உண்மையானவளாக அந்தக் குறிப்பிட்ட காலத்தில் நடந்து கொள்வதே ஆகும் என்கிற அளவில் கற்பைப் பற்றிச் செயகாந்தன் தொடக்க காலத்தில் எண்ணியிருக்கிறார். அவரது முதலிரு நாவல்களிலும் அவர் படைத்துக் காட்டும் பெண்களைக் கொண்டு

நாம் இந்த முடிவிற்கே வர இயலும். தங்கம் (வாழ்க்கை அழைக்கிறது), தங்கம் (உன்னைப்போல் ஒருவன்), அலமேலு (உன்னைப்போல் ஒருவன்) ஆகியோர் வாழ்க்கை இத்தகையனவே.

ஆனால் பின்னால் கற்புப் பற்றிய கண்ணோட்டத்தை மாற்றிக் கொண்டு விட்டார் செயகாந்தன். ஒரு பெண்ணின் வாழ்வில் ஒரே ஓர் ஆணுக்குத்தான் இடம் உண்டு என்கிற முறையில் வாழும் பெண்களே கற்புடையோர் என்ற கருத்தை நிறுவும் வகையில் அவர் படைத்த பெண்களே, கங்கா (சில நேரங்களில் சில மனிதர்கள்), கல்யாணி (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்) ஆகியோர். இந்நிலையில் வழுவியோராக சபாபதிப்பிள்ளை மனைவி (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்) போன்றோரைப் படைக்கும் போது இப்பெண்கள் கற்பற்றவர்கள் என நேரடியாக எழுதவில்லை-வெனினும் குறையுடையவர்கள் என மறைமுகமாக உணர்த்திவிடுகிறார் செயகாந்தன். சபாபதிப்பிள்ளை மனைவியின் நடத்தையைப் பற்றிச் சபாபதிப்பிள்ளை கூறும் கூற்றுக்கள் வாயிலாக இக்கருத்தை உணர்த்துகிறார் செயகாந்தன்.

செயகாந்தன் கற்பு பற்றிய தம் பிந்திய கண்ணோட்டத்திற்கு மாறாகப் படைத்து,அதே நேரத்தில் குறையுடையவள் என்ற சுட்டாமலும் விட்டுவிட்ட பெண் ஒருத்தி இருக்கிறாள் அவள் தான் தெரஸா (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்). இவரது கற்புப் பற்றிய கண்ணோட்டம், இந்திய இந்து மதப் பெண்களின் கற்புப் பற்றியதாகையால், ஆங்கிலோ - இந்திய கிறிஸ்தவ சமயப் பெண்ணாகிய தெரஸாவை, கற்புப் பற்றிய தன் முந்திய

கண்ணோட்டத்திற்கு ஏற்பவே படைத்துள்ளார் என்ற கருத்தே தோன்றுகிறது. இக்கருத்தை அரண் செய்யும் முறையில், 'கங்கா எங்கே போகிறாள்?' நாவலில் கங்கா, மிஸஸ் மாதுவல் பற்றிக் கீழ்வருமாறு நினைப்பதாகச் செயகாந்தன் எழுதுகிறான்.

"இந்த சட்டைக்காரிக்கு இந்த மனக்கற்பு எல்லாம் புரியுமோ?"[13] மேலும் மிஸஸ் மாதுவலையும் முதல் கணவன் இறந்தபின் மறுமணம் செய்துகொண்ட பெண்ணாகவே படைத்துள்ளார் செயகாந்தன்.

ஆகையால், கற்பு பற்றித் தொடக்க காலத்தில் தாம் கொண்டிருந்த கருத்தையே, பிற இன, பிற சமயப் பெண்கள் பற்றிக் கொண்டிருக்கும் செயகாந்தன், இந்திய, இந்து சமயப் பெண்கள் பற்றி மட்டும், தம் கண்ணோட்டத்தை மாற்றிக் கொண்டுவிட்டார் எனலாம்.

கோவி.மணிசேகரனின் 'சேதாரம்'[14] கதையில் பொன்னாத்தா தன்னுடைய மகளின் திருமணத்திற்கு இரண்டு பவுன் சேர்த்திருந்தாள். நோய்வாய்ப்பட அதனை விற்றுச் செலவு செய்தாள். 'கவரிங்' சங்கிலியைப் போட்டு மகளுடைய திருமணத்தை முடித்தாள். அவள் மீது கண் வைத்திருந்த பொன்னம்பல ஆசாரி அவளுடைய மகளின் நல்வாழ்விற்காக இரண்டு பவுன் சங்கிலியைத் தருவதாகக் கூறி அவளது உடலை விலை பேசினான். அவளோ அவனை விரட்டியடித்துத் தற்காத்துக் கொண்டாள். மகளின் நன்மையைவிட அவளுக்கு மானம் பெரியதாகிவிட்டது. என்ன விலைகொடுத்தும் கற்பைக் காத்தலை யாவரும் வலியுறுத்துகின்றனர்.

<u>பெண்கள் முன்னேற்றம்:</u>

பண்டைக்காலத்தில் சமூகத்தில் பெண்களின் நிலை உயர்வாக இருந்ததை அறிகிறோம். எக்காலத்திலும் பெண்கள் பிறரின் துணையுடன்தான் தங்கள் வாழ்நாள் முழுதும் வாழ்ந்துள்ளனர். திருமணமாகும் வரை தந்தை-யையும், பின்னர் கணவனையும், வயோதிகத்தில் மகனையும் சார்ந்து வாழ்ந்தனர். பெண்களுக்கென்று சில உரிமைகள் கொடுக்கப்பட்டிருந்தன. கல்வி கற்கவும் செய்தனர். ஆண்களுடன் பெண்களும் கல்வி பெற அனுமதிக்கப்பட்டனர். ஔவையார், காக்கைப்பாடினியார் போன்ற பெண்பாற் புலவர்களும் இருந்தனர். பின்னர் பெண்கள் வீட்டு வேலைகளைச் செய்வதற்கெனப் பிறந்தவர்களாக ஒதுக்கப்பட்டனர். அவர்களுக்குரிய சம உரிமைகள் மறுக்கப்பட்டன. பெண்களின் பதிபக்திக்கு சீதை, சாவித்திரி, நளாயினி, தமயந்தி போன்றோரை புராண இலக்கியங்கள் குறிப்பிடுகின்றன.

சித்தூர் ராணிபத்மினி, ஜான்சிராணி இலக்குமிபாய், போன்றவர்கள் வீரப்பெண்களாகத் திகழ்ந்தனர். முதலாம் இராசராசன் சிறந்த முறையில் ஆட்சி செலுத்த உதவியவர் அவனது சகோதரி குந்தவையே என்றால் அது மிகையன்று. எனினும் சமூகத்தில் குறிப்பிடப்பட்ட பிரிவைச் சேர்ந்த பெண்கள், விலைமாதர்கள், தேவதாசிகள் என ஒதுக்கி வைக்கப்-பட்டிருந்தனர். கணவனை இழந்த கைம்பெண்களின் நிலையும் பரிதாபத்திற்கு உரியதாகவே இருந்தது. அவர்கள் துன்பமயமான வாழ்க்கை முறையை அனுசரிக்க வேண்டியிருந்தது. உடன்கட்டையேறும் வழக்கமும் இருந்தது.

அது பின்னர் ராஜாராம்மோகன்ராய் போன்றவர்களால் ஒழிக்கப்பட்டது. இந்நிலைமாறி இருபதாம் நூற்றாண்டில் பெண்கள் உயர்பதவிகளை வகித்து வரத்தொடங்கினர். பெண்களுக்குக்கல்வி, சமஉரிமை, விதவைகள் மறுமணம், சட்டப்பூர்வமான பாதுகாப்பு, உயர்பதவிகள் போன்றவையும் ஆண்களுக்கு நிகராகக் கிட்டின. இந்தியப் பிரதமர் திருமதி. இந்திரா காந்தி சுமார் பதினைந்து ஆண்டுகள் நாட்டைத்திறம்பட வழி நடத்திச் சென்றார்.

தமிழகத்தில் பெண்களுக்காகத்தனிப் பல்கலைக்கழகம் - அன்னைதெரஸா பல்கலைக்கழகம் - உருவாக்கப்பட்டது குறிப்பிடத்தக்கது. டாக்டர் முத்துலெக்ஷ்மி ரெட்டி மருத்துவத் துறையில் சிறந்த பணியாற்றிப் புகழுடனும் வாழ்ந்தார். பெண் எழுத்தாளர்களில் மறைந்த லெக்ஷ்மி என்கிற டாக்டர்.திரிபுரசுந்தரி, ராஜம்கிருஷ்ணன், சிவசங்கரி, இந்துமதி, வாஸந்தி போன்றவர்களைக்குறிப்பிடலாம். இவ்வாறு பெண்களின் நிலை முன்னேற்றம் அடைந்துள்ளது.

1975-ஆம் ஆண்டு உலக மகளிர் ஆண்டாகக் கொண்டாடப் பட்டதால், கணக்கற்ற திட்டங்களும், செயல்களும் பெண்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்டன. குறிப்பாக இந்திய அரசால் பெண்களுக்காகத் தோற்றுவிக்கப்பட்ட, பெண்களின் நிலை குறித்து ஆராய அமைக்கப்பட்ட குழுவின் அறிக்கையை அமல்படுத்த நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. பெண்களுக்கான சட்டங்கள் மீண்டும் ஆராயப்பட்டன. சட்டரீதியான

உரிமைகளைப் பெண்களுக்கு அளிப்பதற்கான வழிவகைகளும் மேற்கொள்ளப் பட்டன. ஆண்களுக்குச் சமமான வேலையும், வேலைக்கேற்ற ஊதியமும் சலுகைகளும் பெண்களுக்கு அளிக்கும் நிலை மேற்கொள்ளப்பட்டது. பெண்களுக்கு ஊக்க ஊதியத்திற்கான திட்டங்களும், வேலை வாய்ப்புகளும் தோற்றுவிக்கப் பட்டன. சமுதாயத்தில் பெண்களின் நிலையை உயரச் செய்வதற்கான பலவகைத் திட்டங்களும் மேற்கொள்ளப்பட்டன[15] என்கிறார், டாக்டர் பால் சௌந்திரி.

சமூக மற்றும் அரசியலின் உயர்மட்ட நிலைகளில் பெண்களின் இடத்தை நோக்குகையில் இந்தியப் பெண்களின் நிலை மாறியுள்ள போதிலும் அனைத்துப் பெண்களுக்கும் அது உயர்ந்த நிலையாகவோ அல்லது சக்தியுள்ள நிலையாகவோ மாறவில்லை. 1971-ல் எடுக்கப்பட்ட மக்கட்தொகைக் கணக்கெடுப்பின்படி, இந்திய மக்கள் தொகையில் 28.4 கோடி ஆண்களோடு நோக்குகையில் 26.4 கோடி பெண்கள் உள்ளனர். இந்த அளவு 1000 ஆண்களுக்கு 930 பெண்கள் என்ற விகிதாச்சாரபடி உயர்வு பெறவில்லை[16] என்பது சமூகவியல் பேராசிரியர் ராஜஜெயராமனின் கருத்தாகவுள்ளது.

அவர்கட்குச் சமூகத்தில் சரிநிகர் சமமான இடம் கொடுக்கப்படவில்லை என்பது யாவரும் அறிந்ததே. பெண்களின் தற்போதைய நிலைமையையும் அவர்கள் முன்னேற்றத்திற்குப் புனைகதையாளர்கள் தரும் வழியினையும் அவர்கள் எழுத்துக்களிலிருந்தே பெறலாம்.

அகிலன், 'சாந்தி' என்னும் சிறுகதையில், ஒரு இளம் பெண்ணின் மனோநிலையைப் படம் பிடித்துக் காட்டியுள்ளார். இளம் விதவை உணர்ச்சியால் புழுங்கி, மன வேதனையுடன் தந்தையின் அறிவுரையையும் மீறி, தன் தங்கையின் கணவனிடம் தனக்கு மறுமணம் செய்விக்க வேண்டுகிறாள். படித்த பெண்கள் வாழ்நாள் முழுவதும் கைம்பெண்ணாக இருக்க விரும்பவில்லை. அவள் தன் அத்தானிடம் "அத்தான்! இந்த நிலையில் நான் இருக்க முடியாது. அப்பா குறுக்கே நிற்கிறார். நான் ஒரு நல்ல மனிதருடன் மீண்டும் வாழ விரும்புகிறேன். எனக்குக் கூடப்பிறந்த சகோதரர் இல்லை. நீங்கள்தான் இந்தப் பொறுப்பை ஏற்று எனக்கு வாழ்வு தேடித்தர வேண்டும்![17] என்றாள். பெண்கள் விரும்பினால் மறுமணத்திற்கு தடையிருக்கக்கூடாது.

ஆணும் பெண்ணும் சமம். ஆணுக்குரிய அனைத்து உரிமைகளும் பெண்ணுக்கும் உள என்கிற கருத்தில் செயகாந்தன் எப்போதும் ஒரு நிலையாகவே இருந்திருக்கிறார். அதனால்தான் தொடக்ககாலம் முதல், தங்கம் (வாழ்க்கை அழைக்கிறது), தங்கம் (உன்னைப்போல் ஒருவன்), கங்கா (சில நேரங்களில் சில மனிதர்கள்), கல்யாணி (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்), கனகவல்லி (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), உமா (ஜயஜய சங்கர) போன்ற தம் விருப்பம்போல், அனைத்து உரிமைகளையும் பெற்று வாழ்ந்த பெண்களைச் செயகாந்தன் படைத்துள்ளார்.

ஆனால் ஓர் ஆண், ஒரு பெண்ணுக்கு உரிமை வழங்க மறுத்தால் 'உரிமை வழங்குக' என ஆணுக்கு அறிவுரை வழங்குவதிலும்,

செயகாந்தன் தொடக்கத்திலிருந்து ஒரே நிலையில்தான் இருக்கிறார். கருத்து வேறுபாடு வரும்போது தன் கருத்தை வலியுறுத்தாமல், பெண்ணுரிமை பேணும் முறையில் பெண்ணின் கருத்தை ஏற்று நடக்கும் ஆண்களாக ராஜா (வாழ்க்கை அழைக்கிறது), மாணிக்கம் (உன்னைப்போல் ஒருவன்), ரங்கா (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்), தேவராஜன் (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), ஆதி (ஜயஜய சங்கர) ஆகியோரைப் படைத்துக் காட்டுகிறார், செயகாந்தன்.

குடும்ப உறவுகளைப் பொறுத்தவரை, கணவன் - மனைவி உறவு, அதற்கு அடுத்த நிலையில் தாய்-சேய் உறவு இவற்றை மட்டுமே நெருக்கமான உறவுகள் எனச் செயகாந்தன் ஏற்கிறார். முதல் நாவலில் (வாழ்க்கை அழைக்கிறது) தன் கணவன் இறந்தவுடன் அண்ணன் வீட்டில் அடைக்கலம் புகாமல் தனித்து வாழும் லட்சுமியைப் படைத்துக்காட்டி அவள் கூற்றாகக் கீழ்க்கண்ட கருத்தையும் புலப்படுத்துகிறார், செயகாந்தன். 'அண்ணா இருந்து என்ன? தம்பி இருந்தென்ன? பெண்களுக்குப் புருஷன் இருந்தால்தான் எல்லாம்'.[18] கணவன்-மனைவி உறவைத் தவிர பிற உறவுகள் அவ்வளவு வலுவானவையல்ல என்பதைக் கங்கா (சில நேரங்களில் சில மனிதர்கள்) வின் நீண்ட சிந்தனை வாயிலாகவும் ஓரிடத்தில் விளக்குகிறார் செயகாந்தன்.

உறவு பாசம்ங்கறது எல்லாமே அவ்வளவு தான். கூடப் பிறந்தவா, வயத்திலே பிறந்தவா, எல்லாருமே அப்படித்தான். கடைசி

வரைக்கும் பிரிக்க முடியாம ஒட்டின்டு இருக்கிற பிடிப்பு உள்ளது ஆம்படையாள்-பெண்டாட்டி உறவுதான். அந்த உறவு ஒன்னு மட்டும் இருந்தால், யார் போனால் என்னன்னு இருக்க முடியறது. அது இல்லைன்னா பெத்தவா, கூடப்பிறந்தவான்னு எத்தனைபேர் சுத்தியிருந்தாலும் தனியா இருக்கிற மாதிரி தானே இருக்கு.

அதனாலே தான் அம்மாவையோ, அண்ணாவையோ, மாமாவையோ யாரும் வேண்டாம்னு டைவர்ஸ் பண்ணவோ, வேணும்னு ஏற்படுத்திக்கவோ முடியறதில்லே. இந்த உறவு அப்படியில்லை. இது ரொம்ப முக்கியமான, அடிப்படையான எல்லா உறவுக்கும் ஆதாரமான உறவு, அதனாலே தான் மனுஷா இதை ஏற்படுத்திக்கறா.[19]

இராஜம் கிருஷ்ணனின் 'அலைவாய்க்கரையில்', 'கரிப்பு மணிகள்', 'கூட்டுக் குஞ்சுகள்', முதலான நாவல்கள் ஆசிரியையின் களப்பணி ஆய்வால் மலர்ந்தவையாகும். மீனவ வாழ்க்கை, உப்பளத் தொழிலாளர்கள் தீப்பெட்டித் தொழிற்சாலையில் பணியாற்றும் குழந்தைகள் ஆகியோரின் வாழ்வைக் காட்டுவன. பொதுப்படையான வாழ்வு நிலையிலேயே இவர்தம் கதைமாந்தர் அமைந்தனர். தாழ்ந்த மக்கள் வாழும் வாழ்க்கை முறை அவர்தம் நடை, உடை, உயர்வுகள், பழக்க வழக்கங்கள் ஆகியவற்றை மிக உயர்ந்த நிலையில் ஆதாரப் பூர்வமாக வெளிப்படுத்தினர். படித்த இளம் பெண்கள் குறிப்பாக வேலை செய்யும் பெண்கள் இன்றைய குடும்ப அமைப்பு முறையையும், சமூகச் சூழலையும் எதிர்த்துத் தங்கள் குரலை

எழுப்பினர். பழைய மரபுகளையும், எண்ணங்களையும் உதறி எறிந்துவிட்டு குடும்பப் பற்றிலிருந்தும் விடுபடவும் விரும்புகின்றனர். காலப் போக்கிற்கு ஒவ்வாத எண்ணங்கள் உறவுகளை இணைப்பதில்லை. எனவே இருட்டிலிருந்து ஒளி பெற்றுப் புதிய வாழ்வைத் தம்க்க பெண்கள் விரும்பினர். இதற்காக எத்தனை துன்பங்களையும் அவர்கள் ஏற்றுக்கொள்ளத் தயாராயினர்.

"பெண்களுக்குத் தாய்மை என்னும் கடமையுள்ளது. பெண் என்பவள் பொறுமை மிக்கவள். வீட்டின் எஜமானி பெண் என்பதில் சந்தேகமில்லை. வீட்டிற்குத் தேவையான பணத்தை ஈட்டி வருபவன் ஆண், எனினும் அப்பணத்தை தக்க முறையில் செலவழிப்பவளே பெண்; பெண் என்பவள் எந்த வகையில் நோக்கினும் வீட்டின் பொறுப்பாளியே, குழந்தைகளை வளர்த்து நல்ல நிலைக்குக் கொண்டுவருதலே அவளுடைய நோக்கமாகும். பெண் இல்லாமல் பரம்பரையோ, சந்ததியோ இல்லை",[20] என்று பெண்களின் பெருமைபற்றிப் பேசுகிறார் நம் நாட்டுத் தந்தை மகாத்மா காந்தி.

வாழ்க்கை வசதியற்ற ஒரு பெண்ணின் மனப் போராட்டத்தை 'உன்னைப்போல் ஒருவனில்' செயகாந்தன் விளக்குகிறார். 'பெண்மை வாழ்கவென்று கூத்திடுவோமடா' என்று பாடிய பாரதியின் கருத்தைத் 'துணைவி'யில் ஆராய்கிறார். மோப்பக் குழையும் அனிச்சம் என்பது போல பெண்களின் உள்ளமும் விளங்குவதாக 'அனிச்சமலரில்' உமாசந்திரன் கூறுகிறார். அலுவலகத்தில் பணியாற்றும் பெண்களின் நிலைகளை மணியனின் 'ரகசியம்' என்ற புதினத்தில் காண முடிகிறது.

பெண்கள் தங்கள் மன நிலையில் முன்னேற்றம் பெறவேண்டும் என்பதை அசோகமித்திரன் தனது 'தண்ணீர்' என்னும் நாவலில் நிலைமையை விளக்கிக் காட்டி வழியும் காட்டுகிறார். பாஸ்கரராவ் சினிமா ஆசைத் தூண்டுதலால், ஜமுனா வீட்டை விட்டு வெளியேறினாள். சினிமாத் தயாரிப்பாளர்களாகக் கிளம்பிய நெல்லூர்க்காரர்களின் தேவைக்காக ஜமுனா ஓட்டலில் குடிக்கவும், நிர்வாணமாக ஓடவும் நேர்கிறது. குடியிருக்கும் வீட்டில் தண்ணீர்ப் பிரச்சனை. வீட்டுக்காரியின் தொல்லையுடன், தற்கொலையிலும் தோல்வி. தங்கை சாயா, இராணுவத்தானைக் காதலித்துக் கல்யாணம் செய்து கொண்டதால் அவளும் வீட்டை விட்டு வெளியேறி விடுதியில் தங்கியிருக்கிறாள். அவள் தைரியமானவள். அவளிடம் ஜமுனா திட்டு வாங்கிக் கொள்கிறாள். தண்ணீர் பிடிக்க உதவிக்கு வரும் டீச்சரம்மா - முதலிரவிலேயே கணவனின் ஓயாத இருமல் - இருந்தும் மனம் தளராதவள். மாமியார்க்காரியின் கேவலப் பேச்சைப் பொருட்படுத்துவதே இல்லை. டீச்சரம்மா சாதாரணமாக ஜமுனாவுக்குச் சொல்லும் சில அறிவுரைகள் உன்னைப் பற்றி மட்டுமே ஏன் நினைத்துக் கொண்டிருக்கிறாய்? யாரைப் பார்த்தாலும், யாரோடு பேசினாலும் கண்ணாடியில் பார்ப்பது மாதிரி உன்னையே ஏன் பார்த்துக் கொள்கிறாய்? எதற்கு இத்தனை சுயநலம்? மற்றவர்களைப் பற்றி நீ கவலைப்படவே மாட்டாயா? ஏன் இத்தனை ஏழ்மை? சிநேகிதம், ஒரு மனித பலம். பெண் இடம்கொடுக்கவில்லை என்றால் ஆண் நெருங்கிவிட முடியுமா? இப்படிப் பேசும் டீச்சரம்மாவின் சொற்கள் ஜமுனாவின் மனத்தில் நன்றாக உறைக்கின்றன. இனி ஜமுனா அஞ்சி,

அஞ்சி வாழமாட்டாள். சாயாவைத் தன்னுடன் வைத்துக்கொள்வாள். படுக்கையாகக் கிடக்கும் தாயைப் பார்த்து வருவாள். வயிற்றில் கரு, கலைக்க மாட்டாள். இன்று மகிழ்ச்சியாக இருக்கப் பழகிக் கொள்வாள். நாளை பற்றிய கவலை அவளுக்கு இல்லை. பாஸ்கரராவுக்காக இனி ஏங்கித் தவிக்க மாட்டாள். இனி சினிமா ஆசை வேண்டாம், பொய்கள் வேண்டாம்.

ஜமுனா, பெண். ஆணை நம்பி வாழவேண்டியவள். ஆகவே, ஆண் பாதுகாப்பு அற்ற இவளை எதுவும் செய்யலாம்...இதனால் இவளுக்கு மேலும் பாதுகாப்பு கெடுகிறது. இந்நிலையில் தன்னைப்பற்றிய கவலையே தீர்வதில்லை. பாதுகாப்பும் தேவையில்லை என்று நிமிர்ந்து நிற்கும்போது ஊர் கட்ட விரும்பும் பட்டங்களையும் உதறிவிடும்போது, இவளை மற்றவர் இனி தண்டிக்க முடியாது. மற்றவர்களுக்காக இவள் சாக வேண்டாம். தன்னிரக்கம் மனித ஆளுமையைச் சிதைக்கும். இதுதான் உண்மையில் தற்கொலை. நிமிர்ந்து நின்றால் மற்றவர்க்கும் காவல் தர முடியும். குழந்தை பிறந்தால் அப்பன் பெயரை உலகம் கேட்கும். உலகத்திற்காகத்தான் வாழ வேண்டியதில்லை - இப்படி ஒரு ஞானம் ஜமுனாவுக்கு வாய்க்கிறது.

இப்படி ஒரு நிலைப்பாட்டை மேற்கொள்வது மிகக் கடினமான செயல். நாற்றம் மிகுந்த சினிமா தயாரிப்புச் சூழல் பாஸ்கரராவ்களை ஜமுனாக்களை உற்பத்தி செய்துவிட்டுக் கைகொட்டிச் சிரிக்கிறது. ஜமுனா எடுக்கும் நிலைப்பாடு எவ்வளவுதான் தற்காலிகமானதாக இருந்தாலும் - இத்தகையவர்களுக்கு வேறு வழி இல்லை.

வாழ்க்கையின் தொடு கோட்டில் உழல்பவர்களுக்கு ஞானம் சிந்திப்பதற்கான வாய்ப்பு உண்டு. இந்த ஞானம், கணத்தில் வெடித்துக் கிளம்பும். இதைப்பற்றிப் பக்குவப்படுத்தி, பாதுகாத்து வைத்துக்கொள்ள வேண்டும். கணங்களில் மட்டும் வாழ்பவர்களுக்கு வேறு கதி இல்லை. நிரந்தரமான அறம் இவர்களுக்கு விதிக்கப்படவில்லை. ஜமுனா கொள்ளும் ஆறுதல் நிலை, வாழ்க்கைப்பாதுகாப்பு ஏற்பட்ட நிலையில் அல்ல, வேறுவழியின்றி விரக்தி அடைந்த நிலையில் மனோபலம் பெற வேண்டியுள்ளது.

செயகாந்தனின் 'சில நேரங்களில் சில மனிதர்கள்' நாவலில் இக்காலத்திய மாணவிகள் அப்பாவிகள் அல்ல என்றாலும், கங்காவைப் பாதித்த அனுபவம் தந்த விழிப்புணர்வு அவளை அறிவுரை தரச் செய்கிறது.

காலேஜுக்குப் போகிற அண்ணன் பெண் சாந்தாவுக்குக் கங்கா கூறும் உபதேசம்:-

"யாராவது லிப்ட் குடுக்கறான்னு மத்தவா கார்லேல்லாம் ஏறிக்கக் கூடாது. உனக்கு கார் வேணும்னா எனக்கு ஆபீசுக்கோ ஆத்துக்கோ காலேஜ்லேர்ந்து போன் பண்ணு! [21]

கங்கா எதற்காக இப்படியெல்லாம் புத்திமதி சொல்கிறாள் என்று சாந்தா அவளைப் பார்க்கிறாள்.

'...அவளுக்குத் தெரியாதா என்ன அத்தையோட கதை எல்லாம்? தெரிஞ்சிருந்தால் நல்லதுதான். என் கதை தெரிந்தால்

லோகத்துக்கே புத்தி வராதோ? எங்காத்திலே இன்னொரு குழந்தைக்கு அந்த மாதிரி விபத்தெல்லாம் நடக்க வேண்டாம்...'

இங்கே, தாய்மை அடையாமலே எங்கத்தாள் தாய்மை உள்ளம் படைத்த ஒரு பாசமுள்ள தாயாக கங்காவைப் பார்க்கிறோம். இது அனுபவம் தந்த அறிவுரையாகும்.

டாக்டர் ராஜேந்திர பிரசாத், ராஜகோபாலாச்சாரியார், கேர் மற்றும் சரண்சிங் போன்ற தலைவர்கள் பெண்களுக்கு உரிய இடம் அவர்களுடைய வீடுதான் என்று கூறிவந்தனர். டாக்டர் ராஜேந்திர பிரசாத் ஒரு பட்டமளிப்பு விழாவில் உரையாற்றுகையில் குடும்ப எல்லைக்கு உட்பட்ட வேலை மிகவும் முக்கியமானது. அலுவலகங்களிலும், தொழிற்சாலைகளிலும் பணியாற்றுவதைவிட இது பெண்களால் மட்டுமே செய்ய இயலக்கூடியது என்று கூறினார். இதைப் போன்றே சக்ரவர்த்தி இராஜகோபாலாச்சாரியாரும் "வீட்டைக் கவனித்துக் கொள்ளுதலே பெண்களின் முக்கியமான வேலை" என்றார். மற்றும் பி.ஜி.கேர் என்பவர் பம்பாய் மாநில சட்டசபையில் உரையாற்றுகையில் "வீட்டை ஒழுங்கு படுத்துதல், குழந்தைகளை வளர்த்தல் போன்றவை பெண்களால் மட்டுமே செய்யக்கூடிய மிகப் பெரிய உதவிகளாகும்" என்றார். "தற்போது தேவைப்படுவது மிகச் சிறந்த அறிவுடைய செயல்கள் மட்டுமல்ல, மிகப் பெரிய உற்பத்தியளிக்கக்கூடிய, சக்தியுடைய செயல்களுமாகும். இதைப் போன்ற வரையறைக்கு உட்பட்ட நிலைகளிலே பெண்கள் சிறந்து விளங்க முடியும்"[22] என்பது பெரியவர்களின் கருத்துக்களாக இருக்கவே செய்கின்றன.

குடும்ப நலத்திட்டம்:

நமது நாட்டின் வளர்ச்சியில் குடும்பநலத்திட்டம் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றது. நொடிக்கு மூன்று குழந்தைகள் பிறக்கின்றன. குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டங்கள் கிராமந்தோறும் பரப்பப்பட்டுவருகின்றன. குடும்பக்கட்டுப்பாட்டிற்கான அறுவை சிகிச்சை முகாம்களும், அறுவை சிகிச்சை செய்து கொண்டவர்களுக்கான சிறப்புச் சலுகைகளும் நிறைய இருக்கின்றன. பல வகையான குடும்பக்கட்டுப்பாடு முறைகள் அறிவிக்கப்பட்ட போதிலும் நமது நாட்டின் மக்கட்தொகை வளர்ச்சி கடந்த பத்தாண்டுகளில் உயர்ந்துதான் இருக்கிறது. பிறந்த குழந்தைகளை வளர்க்கும் முறைகளையும் அவற்றிற்குத் தேவையான முத்தடுப்பு ஊசிகளைப் போடும் முறைகளையும் நல அலுவலர்கள் செய்து வருகின்றனர். இவ்வாறு குடும்ப நலத்திட்டம், நமது நாட்டின் சமூகப் பொருளாதார வளர்ச்சியில் முக்கியமான பங்காற்றி வருகின்றது.

இந்தியா வளர்ந்துவரும் நாடு. திட்டங்கள் பல தீட்டப் பெற்று வளர்ச்சி கண்டு முன்னேறி வருகின்றது. இங்கு பிரச்சனைகள் பல மலிந்து காணப்படுகின்றன. இன்றைய தமிழக எழுத்தாளர்களில் பலர் சுதந்திரம் பெறுவதற்கு முன்பிருந்து வாழ்பவர்கள்; சிலர் சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டவர்கள். நாட்டின் நிலைமையை அன்றும் இன்றும் நன்கு உணர்ந்தவர்கள். அவர்கள் இந்த நாட்டைச் சிறந்த நாடாக எல்லா வளங்களும் நிறைந்த நாடாக, உயர்ந்த நாடாக ஆக்கவேண்டும்

என்று எண்ணுகின்றனர். அந்த எண்ணங்களை எழுத்தில் கொணர்கின்றனர். தான் கண்ட கனவு நனவாக வேண்டும் என்று எதிர்பார்க்கின்றனர். எழுபதுகளில் பலவிதமான பிரச்சனைகளைக் கண்டு எழுத்தாளர்கள் அதற்கு விடிவு காண விழைகின்றனர். எழுத்தாளர்கள் சமுதாயச் சிற்பிகள். அவர்கள் எண்ணங்கள் யாவை? சிந்தனைகள் சிறப்பாயின் சிற்பங்களும் சிறப்பாய் அமையும். சமுதாய மறுமலர்ச்சியில் அக்கறை கொண்டு, சமூகம் உய்ய, மேலும் உயர்ந்திட தம் புனைகதைகளில் எந்தவிதப் புரட்சிக் கருத்துக்களைத் தந்துள்ளனர் என்பது பிரச்சனைகள் வாரியாக இங்கு காணப்பட்டுள்ளது.

தேவையற்ற குழந்தைகளின் எண்ணிக்கை அதிகரிப்பதால் ஏற்படும் மக்கட் தொகைப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்துதலே குடும்பக் கட்டுப்பாட்டுத்திட்டத்தின் நோக்கமாகும். பெற்றோர் திட்டமிட்ட முறையில் குழந்தைகளைப் பெற்றால், தேவையற்ற குழந்தைகளைத் தவிர்ப்பதோடு, மக்கட் தொகைப் பெருக்கத்தாலேற்படும் தொல்லை-களையும் தவிர்க்கலாம்[23] என்கிறார் சமூகவியலார் ராபர்ட்மார்டன்.

பொருளாதார வளர்ச்சிக்கெனப்பல திட்டங்கள் தீட்டி மக்களின் தேவைகளை நிறைவு செய்ய அரசு எல்லா முயற்சிகளையும் செய்து வருகின்றது. இருப்பினும் மக்கள் தொகைப் பெருக்கத்தால் எதிர்பார்த்த பலன் கிட்டவில்லை. 1930-இல் பாகிஸ்தான் உட்பட 30 கோடியாக இருந்த மக்கட்தொகை எழுபதுகளில் இன்றைய இந்தியாவில் மட்டும்

68 கோடியாகப் பெருகியுள்ளது. இதைக் குறைத்தலே அரசின் முதல் கடன். நெடுநோக்குடன் கூடிய இத்திட்டத்தைத் தம் புனைகதைகள் மூலம் ஊக்கப்படுத்துதல் நாட்டு நலம் கருதும் எழுத்தாளர்களின் கடப்பாடாகு மக்கள் எழுத்தாளன் எனப் போற்றப்படும் செயகாந்தன் இத்திட்டத்தை வலியுறுத்தும் நோக்குடன் 'ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்' எனும் புதினத்தில், குழந்தைப் பேறு பற்றிக் கல்யாணியும் ரங்காவும் உரையாடும் போது, ரங்கா,

> 'நம்ப நாட்டிலே குழந்தை பிறக்கறது தான் பிரச்சனை, இல்லேன்னா பரவாயில்லை. அதுக்காகக் கவலைப்பட வேண்டாம்!' [24]

என்று கூறுகிறாள். இது குழந்தைப் பேறு பற்றிய நாடு தழுவிய பொருளா-தாரக் கண்ணோட்டம்.

ஆனால் அதனையே தனிமனித மனம் எப்படிப் பார்க்கும் என்று கேட்டால், குழந்தை இல்லாத மனங்கள் அந்தப் பேற்றுக்காக ஏங்கவே செய்யும் எனக் காட்டுகிறார் செயகாந்தன். அவர் படைத்த பாத்திரங்களுள் குழந்தை வேண்டுமென ஏங்குவோர் வருமாறு:
அலமேலு (உன்னைப் போல் ஒருவன்), கங்கா (சில நேரங்களில் சில மனிதர்கள்), கல்யாணி (ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்), சபாபதிப்பிள்ளை – அவர் மனைவி (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்).

இனி, இரண்டையும் இணைத்துப் பார்க்கலாம். குழந்தையே இல்லைபெற்றால் என்குகிற மனிதர், எத்தனை குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளலாம் என்பது பற்றிப் பொருளாதார அடிப்படையில் சிந்தித்த ஒரு உயர்வெல்லை கூறவில்லை செயகாந்தன். அவர் கருத்தைக் கூர்ந்து நோக்கினால், குழந்தைப் பேற்றோடு பொருளாதார நிலையை அவர் தொடர்பு படுத்தவில்லை; மாறாகத் தன்மான உணர்வைத் தொடர்பு படுத்துகிறார் என அறியலாம்.

அவர் படைத்த பாத்திரங்களுள் அதிகக் குழந்தைப் பெற்றோர் கணேசனும் (சில நேரங்களில் சில மனிதர்கள்), துரைக்கண்ணுவும் (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), மகுடேசன் பிள்ளையும் (இந்த நேரத்தில் இவள்) இவர்களுள் ஒன்பது குழந்தைகட்குத் தந்தையான மகுடேசன் பிள்ளை பெருஞ்செல்வர். எஞ்சிய இருவரில் ஒவ்வொருவரும் ஆறு குழந்தைகட்குத் தந்தை. அவர்களைப் பற்றிக் கூறும்போது, செயகாந்தன் அவர்கள் பிள்ளைக்குட்டிக்காரர்கள் என்பதற்காகப் பிறர் உதவியை எதிர்பார்க்கவில்லை என்பதையே வலியுறுத்திச் சொல்கிறார். கணேசன் கங்காவிடமிருந்தோ, துரைக்கண்ணு சபாபதிப்பிள்ளையின் சொத்திலிருந்தோ பொருளாதார உதவி வேண்டவே இல்லை. எனவே தன்னால் காப்பாற்றக்கூடிய மனத் தெம்பு உள்ளோர் எத்தனை குழந்தை வேண்டுமானாலும் பெற்றுக் கொள்ளலாம் என்பதே செயகாந்தன் கருத்தாகத் தெரிகிறது.

குழந்தை வளர்ப்பு:

குழந்தை வளர்ப்பு ஒரு கடினமான, அதே நேரத்தில் இனிமையான கலை. இன்றைய குழந்தைகளே எதிர்கால மன்னர்கள். எனவே குழந்தைகளை சிறுவயது முதற்கொண்டு சீரிய முறையில், நற்பண்புகளுடன் வளர்த்து வருதல் வேண்டும். குழந்தைகளுக்கு அருங்குணங்களை இளமையிலேயே அவர்கள் நெஞ்சில் பதியச் செய்தால்தான் பிற்காலத்தில் அவர்கள் சமூகத்தில் உயர்ந்த இடத்தைப் பிடிக்க முடியும்.

ஐந்தில் வளையாதது ஐம்பதில் வளையாது. சிறு வயதுப் பழக்கங்களே இறுதிவரை நிற்கும். திருடக்கூடாது, பொய்சொல்லக் கூடாது, தீயவற்றைப் பார்க்கவோ, பேசவோ, கேட்கவோ கூடாது எனக் குழந்தைகளுக்கு அறிவுறுத்த வேண்டும். பிற குழந்தைகளுடன் கூடி விளையாட அனுமதிக்க வேண்டும். தலைமை தாங்கும் பண்பையும் குழந்தையிடம் வளர்க்க வேண்டும். நாட்டுக்கு உழைத்த நல்லவர்களின் வரலாற்றையும் தேசப் பற்றுடன் கூடிய வீர வாழ்க்கையையும் எடுத்துச் சொல்லி, குழந்தைகளின் மனதில் நாட்டுப்பற்றை வளர்க்க வேண்டும்.

நாட்டுப்பற்று மிக்கப்பாடல்களையும் மொழியின் பெருமையை விளக்கும் பாடல்களையும் குழந்தைகளுக்குக் கற்றுக்கொடுத்து இசையுடன் பாடச் செய்தல் வேண்டும். ஏதாவது ஒரு துறையில் வல்லுநராக்கி நாட்டுக்குப் பெருமை சேர்த்திடச் செய்தல் வேண்டும்.

பிள்ளைகளைப் பெற்றிடுதல் என்பது ஒன்றும் பெருமைக்-குரியதல்ல. இது இயற்கையாக நிகழ்வது. அவர்களை உடல் நலமுடனும் மன நலமுடனும் வளர்த்தல் மிகவும் முக்கியம். குழந்தைகளை நல்ல பழக்க வழக்கங்களுடன் வளர்த்து அவர்கட்கு வேண்டிய கல்வியை அளித்தல் தேவை என்பதை எழுத்தாளர்கள் நன்கே அறிவர்.

குழந்தை வளர்ப்பு பற்றிய கருத்துக்களை செயகாந்தன், 'குழந்தையைப் பெத்துக்கறது ஒன்னும் பெரிய காரியமில்லை. அதற்கு வயத்தை அடைச்சு வளத்துடறதும் ஒன்னும் பெரிய காரியமில்லை. அறிவையும் ஒழுக்கத்தையும் தந்து அவனை ஞானவந்தனாக ஆக்குவதுதான் பெரிய காரியம்![25] இது ஒரு பாத்திரத்தின் ஒரு கூற்று.

குழந்தையைப் பெற்றுவிடுவதில் என்ன பெருமை
ஒரு குழந்தையை அதன் வித்துக்கும் வேருக்கும்
ஏற்ப வளர்த்து உருவாக்கி, வாழ்வாங்கு வாழ
வைப்பது தானே வாழ்க்கைப் பிரச்சினை; குடும்பப்
பிரச்னை, தேசப் பிரச்சினை, உலகப் பிரச்னை எல்லாம்?[26]

என்கிறார் செயகாந்தன். இவற்றைக் காணும்போது குழந்தை வளர்ப்பில் குழந்தையின் அறிவு, ஒழுக்கம் இவற்றைச் சரியாக உருவாக்குவதற்கே முதன்மை கொடுக்க விரும்புகிறார் செயகாந்தன் என்பது புரிகிறது. அதற்கு அவர் கூறும் வழி என்ன? என அவரது நாவல்களைக் கூர்ந்து பார்த்தால், குழந்தையை மிகவும் கட்டுப்பாடுகளுக்கு உட்படுத்தாமல் அதற்கு

முழு உரிமை கொடுத்து, அதே நேரத்தில் எது சரி? எது தவறு? என்பது குறித்து ஒழுக்காகச் சிந்திக்கப்பயிற்சியும் கொடுத்து வளர்த்தல் வேண்டும் என்பதே செயகாந்தன் கூறும் வழி. இவ்வாறு தொண்டர் துரைக்கண்ணு சிட்டியையும், சிட்டி கல்யாணியையும், சபாபதிப்பிள்ளை டெறன்றியையும், சங்கரன் சதாசிவ ஐயர் ஆகியோரையும் உருவாக்குவதைச் செயகாந்தன் படைத்துக் காட்டுவதால் இந்த முடிவுக்கு வரலாம்.

இம்முறைக்கு மாறாக பத்மா, தன் குழந்தைகளைக் கட்டுப்படுத்தி வளர்க்கிறாள். அந்த வளர்ப்பு முறை சிறந்தது எனக் கங்காவும் நினைக்கிறாள்.[27] ஆனால், இந்த நாவலின் தொடர்ச்சியான 'கங்கை எங்கே போகிறாள்?' நாவலில் பத்மாவால் கட்டுப்படுத்தி வளர்க்கப்பெற்ற சுபாஷ் நல்லவனாக உருவாகாமல், தன் தந்தையைப் போலக் குடிப்பவனாகவும், பொறுப்பற்றவனாகவும் வளர்ந்துள்ளதை விளக்குகிறார். மேலும் பத்மா குழந்தைகளைக் கட்டுப்படுத்தி வளர்ப்பதைச் சரியான முறை என நினைத்த கங்காவே, கணேசனுடைய குழந்தைகளை வளர்க்கும்போது முழு உரிமை கொடுத்தே வளர்ப்பதாகக் 'கங்கை எங்கே போகிறாள்?' நாவலில் காட்டுகிறார். எனவே, முழு உரிமை கொடுத்து அறிவு வாயிலாக அனைத்தையும் சிந்திக்கக் கற்றுக்கொடுத்து, குழந்தையை வளர்ப்பதே சிறந்த முறை என்பது செயகாந்தன் கருத்து எனலாம்.

குழந்தையும் ஒழுக்க சிந்தனையும்:

குழந்தைக்கு உரிமை கொடுத்து வளர்க்கும் பொழுது, அதற்கு ஒழுக்கம் பற்றிய சிந்தனையை எவ்வாறு ஏற்படுத்துவது? மிகச்

சுருக்கமாக ஆனால் தெளிவாக இக் கேள்விக்கு விடை தருகிறார் செயகாந்தன். தொண்டர் உரைக்கணு (உன்னைப் போல் ஒருவன்) தான் உருவாக்கும் சிட்டிக்கு, ஒழுக்கச் சிந்தனையைக் கீழ்வருமாறு ஏற்படுத்துகிறார்.

> ஒழுங்கீனம் தப்புங்கறது என்னா தெரியுமா? எந்தக் காரியம் இன்னொருத்தருக்குத் தெரியக் கூடாதின்னு மறைஞ்சி ஒளிஞ்சி திருட்டுத்தனமா செய்யறமோ அந்தக் காரியந்தான் – அது என்னவா இருந்தாலும் அதுதான் ஒழுக்கக் கேடான காரியம், தப்பான காரியம், அயோக்கியத்தனம். ஆமா, தப்பான காரியந்தான் நாலு சுவருக்குள்ளே உலகத்துக்குத் தெரியக் கூடாதின்னு நடக்கும்.[28]

தொடர்ந்து இக்கருத்திற்கு மேல் விளக்கமும் தருகிறார் தொண்டர்.

> நாலு சுவருக்கு மத்தியிலே இன்னொருத்தன் பார்க்கக் கூடாதுன்னே செய்ய வேண்டிய காரியங்கள் இருக்கே அதெல்லாம் ஒழுங்கீனமா? குற்றமா? ன்னு-தானே நினைச்சி சிரிக்கிறே?[29]

> இன்னொருத்தர் பார்க்கக் கூடாதுன்னு செய்யறது பண்பு. அதில் அழகிருக்கு; உண்மையிருக்கு. இன்னொருத்தருக்குத் தெரியக் கூடாதுன்னு செய்யறது களவு இதிலே பொய்யும் கோழைத்தனமும் வஞ்சகமும் ஏமாத்தற குணமும் தான் இருக்கு. புரியுதா? நீ மறைஞ்சிருந்து குளிக்கறே .. குளிச்சேங்கிற விஷயத்தை மறைக்கிறதில்லையே.[30]

இதே கருத்தை, அதாவது பிறருக்குத் தெரியாமல் செய்வது தவறு; தெரியும்படி செய்வதே சரி என்ற கருத்தை, செயகாந்தனின் 'இருளைத் தேடி' என்ற சிறுகதையில் இடம் பெறும் ருக்குவும் கீழ்வருமாறு கூறுகிறார்.

> நீ உன்னைப் பத்தி மறைச்சு மறைச்சு என்கிட்டே பேசினதா சொன்னே, இல்லையா, பொய்கூடச் சொன்னதாகச் சொன்னே இல்லையா? ஆனா, நான் உன்கிட்டே எதையும் மறைக்கல்லே. நான் செய்கிற தொழில் கேவலம்னு எம்மனசிலே தோணியிருந்தா இந்தப் படத்தை நீ பாக்கவே அனுமதிச்சிருக்க மாட்டேன். அதில் இருக்கிறது நான் தான்னு ஒப்புத்திண்டிருக்கவும் மாட்டேன்.[31]

இவ்வாறு அறிவு பூர்வமாக ஒழுக்கம் பற்றிக் குழந்தைக்கு எடுத்துச் சொல்லி வளர்க்க வேண்டும் என்பதே செயகாந்தனின் கருத்து எனலாம்.

குழந்தைகளும் வறுமையும்:

இந்தியாவில் லட்சக் கணக்கான குழந்தைகள் வறுமைக் கோட்டிற்குக் கீழே வாழ்ந்து வருகின்றனர். பெற்றோர்களின் அலட்சியப் போக்கினாலும், கவனக் குறைவினாலும், பொறுமை இன்மையினாலும் பாதிக்கப்படுகின்றனர். வறுமையின் காரணமாக, ஆயிரக்கணக்கான குழந்தைகள் பீடி சுற்றுதல், தீப்பெட்டி தயாரித்தல் போன்ற சிறு தொழில்களில் வலுக்கட்டாயமாக ஈடுபடுத்தப்படுகின்றனர். அவர்கள் படிப்பு என்பதையே மறந்துவிட வேண்டிய கட்டாயத்திற்கு உள்ளாகின்றனர்.

இந்தியாவில் பெரும்பாலான ஏழைக்குடும்பங்களில் குழந்தைகளின் எண்ணிக்கை அதிகமாக உள்ளது. குழந்தைகள் கொத்தடிமைகளாக இன்னும் இருக்கின்றனர். தொழிலகங்களில் குறிப்பாக மோட்டார் வாகனங்களைப் பழுதுபார்க்கும் கூடங்களில் சிறுவர்கள் வறுமையின் காரணமாக வேலை பார்க்கின்றனர். இந்தியாவில் சிறுவர்களின் வறிய நிலையைக் குறித்துப் பெண் இயக்குநர் மீரா நாயர் இயக்கிய "சலாம் பாம்பே" என்னும் படம் சர்வதேச அளவில் பரிசும், பாராட்டும் பெற்றுள்ளது.

கொடிது, கொடிது வறுமை கொடிது; அதிலும் இளமையில் வறுமை அதனினும் கொடிது. வறுமையால் குழந்தைகள் எத்தியோப்பியா போன்ற நாடுகளில் அதிகமாக இறந்து மடிகின்றனர். இந்தியாவில் இந்நிலை இல்லையென்றாலும், இளமையில் வறுமையால் உடல்,

மன வளர்ச்சி குன்றி, தாங்களே சம்பாதித்துச் சாப்பிடவேண்டிய நிலையில் பலர் உள்ளனர். அக்கொடிய நிலையைப் படம்பிடித்துக் காட்டி, அந்நிலை மாற வழிகாட்டுதல் எழுத்தாளர் கடன்.

எழுத்தாளர்களில் தாம் வாழும் சமுதாயத்தில் நடக்கும் கொடுமைகளையும், அநீதிகளையும் கண்டு மனம் வெம்பிக் கண்ணீர் விட்டதன் விளைவை மற்ற மக்களும் உணருமாறு செய்கிறார்கள். ஒரு சிலரோ சமுதாயத்தில் காணும் குறைகளையும் துன்பங்களையும் நீக்க வழி காட்டுவர். அத்தகைய சமுதாய உணர்வோடு எழுதும் நாவலாசிரியர்களில் ராஜம் கிருஷ்ணன் குறிப்பிடத்தக்கவர்.

ஒரு நாட்டின் எதிர்காலம் அந்த நாட்டின் குழந்தைகளை ஒட்டியே வளர முடியும். குழந்தைகளையும் பணம் குவிப்பதற்குப் பயன் படுத்த விரும்பினால் எதிர்காலம் சிறிது சிறிதாக இருளில் மூழ்கிவிடும் என்பதில் ஐயமில்லை. இந்நெறியில் தமிழகத்தின் தென்பகுதியில் குழந்தைகளின் உழைப்பை உறிஞ்சும் தீப்பெட்டித் தொழிற்களத்தில் கண்ட நேர்முக அறிவின் விளைவாலும் இத்தகைய செயல்கள் நீடிப்பின் என்ன நடக்கும் என்பதை எண்ணிப் பார்த்ததின் பயனாலும் படைப்பாசிரியர் மனம் குமுறுகிறது. அக்குமுறலின் விளைவாகப் புதிய படைப்பு பொங்கி வழிகிறது.

சிறுவர் ஆண்டாக 1979-ஆம் ஆண்டு சிறப்புப் பெற்றது. உலகெங்கும் சிறுவர்க்குரிய கல்வி வளரவும், நலன் பெருகவும் பல செயல்கள் நிகழ்ந்தன. வழக்கம்போல் நம் நாட்டில் சிறுவர் நலம் குறித்துப் பல

முயற்சிகள் தோன்றின. அம்முயற்சியில் ஈடுபட்ட நாவலாசிரியர் ராஜம் கிருஷ்ணன் உழைக்கும் குழந்தைகளின் உண்மை உலகைக் கண்ணாரக் கண்டு அவர்களது நிலை தன் மனதைத் தூண்ட அதன் விளைவாகக் 'கூட்டுக் குஞ்சுகள்' என்ற நாவலை எழுதியுள்ளார்.

"சிறுவர் வேலை தடுப்புச் சட்டம் என்பது சிறுவர்கள் சுரங்கங்கள், தொழிற்சாலைகள் போன்றவற்றில் வேலை செய்ய விடாமல் தடுப்பதற்காக ஏற்பட்ட சட்டம் எனும், மனித சக்தியில் ஏற்படும் குறைபாட்டையும், தொழிற்சங்கங்களின் பெருகிவரும் எண்ணிக்கையையும் குறிக்கின்றது. நேர்மையான மற்றும் நியாயமான கோரிக்கைகள் செயல்படுத்தப்பட வேண்டும். நேர்மையான சக்தி பொருளாதார மற்றும் அரசியல் முடிவை எதிர்த்தால், அத்தகைய நியாயமான சக்தியின் நோக்கம் தள்ளிப் போகலாம்"[32] என்கிறார் அமெரிக்க சமூகவியல் அறிஞர் கென்னத் பி. கிளார்க் என்பார்.

சில ஏடுகள் குழந்தை ஆண்டு என்பதால் குழந்தைத் தொழிலாளர் பற்றிய கட்டுரையை வெளியிட்டன. பம்பாயில் சமுதாயச் சீர்திருத்தக்காரர்களால் ஒரு குழு அமையும் திட்டம் வெளிப்பட்டது. இதனால் எப்பயனும் விளையாமல் இது பற்றிய முயற்சிகள் எல்லாம் ஆடம்பர வெள்ளத்தில் மூழ்கின. இத்தகைய தோல்விகளில் தவளாது முனைந்து நின்றவர்களும் இருந்தனர்.

மாணவப் பருவம் முதல் முற்போக்குக் கருத்துக்களில் ஈடுபட்ட விஜயம் போன்ற பெண்கள் காலச் சூழலில் தொழிலக உரிமையாளர்களின் மனைவியாக மாறினாலும் உண்மையை மறவாமல் உழைக்கும் குழந்தைகளுக்கு

உதவ வேண்டும் என்ற உள்ள உரத்தோடு நாளும் நாளும் வளர்கின்றனர்.

தொழிலகக் கொடுமைகள் நீக்கப்பட வேண்டும் என்று துணிந்து நிற்கின்றனர். கணவன், உறவினர், உற்றார் என்பவர்கள் தம் கருத்துக்கு எதிராகப் போர்க்கொடி பிடித்தாலும் அவற்றையெல்லாம் ஒதுக்கிவிட்டு உண்மையின் ஒளியிலேயே முன்னடி வைத்துச் செல்கின்றனர். மாக்சிம் கார்க்கியின் 'தாய்' பெலகேயா நீலவ்னா விலாசாவின் படைப்புப் போல. எனினும் விஜயம் நலிந்த குடும்பப் பெண்மணியாகப் படித்துத் தேறி உயர் குடும்பத்தில் மனைவியாக மாறினாள். மாறினாலும் தான் வாழ்ந்த சூழலில் காணும் கொடுமைகளை வெறுத்து, உழைக்கும் சிறுவனை அணைத்துக்கொண்டு, 'நீ நிச்சயமாக பெரியவனா எல்லாருக்கும் மேலே வரப்போற' என்று இதமான சொற்களைக் கூறி அவர்களின் எரிச்சலையும் கேவலையும் அடக்கும் அன்பு வெள்ளமாக அமைகிறது.

பாரதி கண்ட 'புதுமைப் பெண்' நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும் கொண்ட விஜயமாக ராஜம் கிருஷ்ணன் படைப்பில் வெளிப்படுகிறாள். டாக்டர் லீலாவதி கூறுவது போல தன் மண வாழ்வினையே பணயமாக வைத்து வெளியேறுகின்ற இவளும் பாரம்பரியக் கூட்டுக் குஞ்சுதான். ஆனால் கூட்டினை உடைத்துக்கொண்டு வெளியேறும் சுதந்திரக் குஞ்சு என்பதில் ஐயமில்லை. கூட்டுக் குஞ்சுகளை மற்றொரு கூட்டுக் குஞ்சு தன் கூட்டினைக் கடந்து வந்து காப்பாற்ற நினைப்பதை ராஜம் கிருஷ்ணன் தமக்கே உரிய பெண் விடுதலை நோக்கில் உழைக்கும் குழந்தைகளுக்கு உதவ எண்ணுகிறார்.

நாவலின் முடிவுக்குச் சற்று முன்னர்ப் பெரிய விபத்து ஏற்படுகிறது. மழை கொட்டினாலும் தொழிலக வண்டி வந்து குழந்தைத் தொழிலாளர்களைக் கூட்டிச் செல்கிறது. மழையில் வேலைக்கு வர மாட்டோம் என்று சொல்லத் தைரியமும் இல்லை[33] இயற்கை சீறி அரசனாறு ஓடையில் வெள்ளமாகப் பெருகிறது. பிள்ளைகள் நிறைந்த வண்டி வெள்ளத்தில் இழுத்துச் செல்லும்போது தான் மேல்சாதி, கீழ்சாதி என்ற உணர்வுகள் அடிபட்டுப் போகத் தலைகள் இற்றவிழ உயிர்தப்பும் ஒரே நோக்கால் இளம் பிஞ்சுகள், மொட்டுகள் அபயக் குரல் எழுப்புகின்றன.[34]

அதன்பின்னர் உயிரிழந்த பிள்ளைகளுக்கு பத்தாயிரம் ரூபாய் கிடைக்கும்போது தப்பிப்பிழைத்த பிள்ளைகளும் வெள்ளத்தில் போயிருந்தால் பெற்றவர்களுக்குப் பத்தாயிரம் கிடைத்திருக்குமே என்று ஏங்கும் அறியாமை-யையும், அமைச்சர்கள் நடத்திய ஆறுதல் விழாவினையும் கழிவிரக்கம் கொள்ளும் வகையில் "கூட்டுக் குஞ்சுகள்" காட்டுகிறது. அத்துடன் ஜனவரிப் புத்தாண்டு சிறுவர் ஆண்டாகச் சாவில் ஆழ்ந்தும் எதிர்மறை ஓட்டமாகத் தொடங்கியது எனக் கூறும்போது இங்கிலாந்தில் சார்லஸ் 'தேவன் வருவாரா?' என எழுப்பிய கேள்வியும் இன்றும் ஒலிப்பதைக் கேட்க முடிகிறது.

கூட்டுக் குஞ்சு பறவை இனத்தில் கூடத் தாயும் தகப்பனும் இரை கொடுத்துப் பேணுகிறது. 'மனித இனத்தில் ஏன் இப்படி? என்ற கேள்வி எழுகிறது, அதன் விடை ராஜம் கிருஷ்ணன் 'கூட்டுக் குஞ்சுகள்'. குழந்தைத் தொழிலாளர் பிரச்னையில் டெல்லியிலிருந்து வந்த சமுதாய நல

அமைச்சர் 'இது முழுக்கப் பொருளாதாரப் பிரச்னை அடிப்படைத் தேவைகள் இல்லாத வறுமை நிலையை மாற்றாத வரையில் எதுவும் செய்ய முடியாது'[35] என்ற விடைய அரசியல் விடையாகக் கூறி உழைப்பும் உரிமையுமாகவாழ நம்பிக்கை[36] நல்குகிறது இந்த நாவல்.

* * * * * * * *
* * * * * *
* * * *
* *
*

## அடிக்குறிப்புகள்

1. அகிலன், பசியும் ருசியும் (காதல் இறந்த கதை) பக்.20-21
2. த.செயகாந்தன், யுகசந்தி, ப.69
3. ----------, ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், பக்.142.143
4. ----------, வாழ்க்கை அழைக்கிறது, ப.184
5. மேலது. ப.186.
6. த.செயகாந்தன், ஒருபிடி சோறு, பக்.118.119
7. ----------, யுகசந்தி, ப.246
8. மேலது. ப.131
9. Robert K.Morton and Robert Nisbet, Contomporary Social Problem, P.481.
10. Ibid., P.511.
11. வேலாயுதம், இருவிழிகள், ப.480
12. சூடாமணி, மானிட அம்சம், ப.186
13. த.செயகாந்தன், கங்கை எங்கே போகிறாள்? ப.140
14. கோவி.மணிசேகரன், கோவியின் சிறுகதைகள், ப.76
15. D.Paul Chowdhry, A hand book of Social Welfare, P.52
16. Raja Jeyaraman, Caste and Class, Dynamics of inequality in Indian Society, P.53.
17. அகிலன், பசியும் ருசியும் (சாந்தி), ப.78
18. த.செயகாந்தன், வாழ்க்கை அழைக்கிறது, ப.42
19. ----------, சில நேரங்களில் சில மனிதர்கள், பக்.251-257
20. M.K.Gandhi, Women and Social Injustice, P.26

21. த.செயகாந்தன், சில நேரங்களில் சில மனிதர்கள், ப.101

22. Kapadia, 'marriage and family in India', P.266

23. Robert K.Morton and Robert Nisbet, Contomporary Social Problem, P.400

24. த.செயகாந்தன், ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், ப.32

25. -----------, இறந்தகாலங்கள், ப.130

26. -----------, பாவம் இவள் ஒரு பாப்பாத்தி, ப.15

27. -----------, சில நேரங்களில் சில மனிதர்கள், ப.61

28. -----------, உன்னைப்போல் ஒருவன், ப.38

29. மேலது, பக்.48.49

30. மேலது, ப.49

31. த. செயகாந்தன், உண்மை சுடும், ப.40

32. Kenneth B.Clark and others, Dilemmas of Social Power, P.204.

33. ராஜம் கிருஷ்ணன், கூட்டுக் குஞ்சுகள், ப.243

34. மேலது, ப.248

35. மேலது, ப.189

36. மேலது, ப.269

******

## 4:- சமுதாயம்

### கல்வி:

பல்லாண்டுகளாகத் தமிழகத்தில் திண்ணைப் பள்ளிக்கூடங்கள், மொழியறிவினையும், கணிதத்தையும் கற்பித்து வந்தன. அறநெறியில் நிற்கவும் வாழ்வில் முழுமை பெறவும் மக்கள் கல்வி இன்றியமையாதது என்பதை உணர்ந்து கல்வி கற்றனர். அண்மைக் காலத்தில் தோற்றுவிக்கப்-பட்ட மதிய உணவுத்திட்டத்தால் ஏராளமான குழந்தைகள் கல்வி கற்க வந்தனர். எழுபதுகளில் தமிழகத்தில் காணப்பட்ட கல்வி வளர்ச்சி குறிப்பிடத்தக்கது. தமிழக அரசின் திட்டத்தால் பள்ளி இறுதி வகுப்பு வரை கல்வி இலவசமாக்கப்பட்டது. முறைசாராக் கல்வி மையங்கள் உருவாக்கப்பட்டன. இதன் மூலம் 14 வயதிற்கு மேற்பட்டவர்களுக்கு அடிப்படை அறிவைப்புகட்டும் பணியும் நடைபெற்று வருகின்றது. தமிழகத்தில் ஏராளமான பள்ளிகளும் கல்லூரிகளும், பல்கலைக்கழகங்களும் நிறுவப்பட்டன. தொழில் நுட்பக்கல்லூரிகளும் தோன்றின. அடிப்படைக் கல்வியறிவு இல்லாதவர்களே இல்லை எனக் கூறும் வகையில் முதியோர் கல்வி மையங்களும் அமைக்கப்பட்டு வருகின்றன. தமிழகத்தில் 6 முதல் 11 வயதுள்-ளவர்களில் 95% பள்ளி செல்கின்றனர். கல்வியோடு தொழிலையும் கற்றுக்கொள்வதால் அவர்களுக்கு வேலை வாய்ப்புக் கிடைக்கிறது. தற்போது பல்தொழில் பயிலகங்கள் தமிழகத்தில் 57 உள்ளன. இவற்றில் ஒன்பது பெண்களுக்கானவை. வயது வந்தோர் கல்வித்திட்டத்தில் முப்பதாயிரம்

மையங்களில் 9.75 இலட்சம் பேர் எழுத்தறிவு பெற்றுள்ளனர். இதில் 5.25 இலட்சம் பெண்கள். மொத்தத்தில் பாதிபேர் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள். தமிழக அரசு தன்னிறைவுத் திட்டத்துடன் எழுத்தறிவுத் திட்டத்தையும் வயது வந்தோர் கல்வித்திட்டத்தையும் இணைத்து பணியாற்றுவதன் மூலம் கல்வித் துறையில் மறுமலர்ச்சி தோற்று-விக்கப்பட்டுள்ளது.

வளர்ந்துவரும் நாட்டிற்கு அடிப்படை கல்வி. அதனைச் செம்மையாகப் பெறுகின்ற நாடு நொடிக்கு நொடி முன்னேறிய வண்ணம் இருக்கும். பள்ளி - ஆசிரியர் - மாணவர் என்ற உறவு நிலையில் இதன் கட்டமைப்பு விளங்குகிறது. பாடத்திட்டங்கள், மாணவர் திறமை, பயிற்சி முறைகள், மொழிக்கல்வி போன்ற பல கருத்துக்கள் இன்றைய நிலையில் அலைமோதிக் கொண்டுள்ளன.

பேராசிரியர் பிரைஸ் சுட்டிக்காட்டுவதைப் போல ஜனநாயக நாட்டில் குடிமக்களுக்குக் கல்வி என்பது தவிர்க்க முடியாதது. அவர்களைப் பொறுத்தவரை அது வெறும் அடிப்படையான அறிவுரையாகவே அமையும் என்பது மதிப்பீடாகும். படிப்பறிவு என்பது அறிவுத் துறைக்கு இட்டுச் செல்லும் வழியாகும். நல்ல குடிமக்களைத் தீர்மானிக்கும் விஷயங்களில் மட்டும் அறிவுடைமை அடங்குவதில்லை. பொதுமக்களிடையே காணப்படும் எழுச்சி மற்றும் நேர்மை மேன்மேலும் தேவைப்படுகின்றது.[1]

சமூகவியலில் அறிஞர் தோர்ஸ்டின் வெப்லன் கருதுவதுபோல்,

சமுதாயத்தைப் புரிந்துகொள்ள இயலாத வகையில் ஒருவித பயிற்சி அளித்து வருவதே இன்றைய நிலையில் பட்டதாரிக் கல்வியுளது.[2]

கிராம இளைஞர்களோடு - ஒப்பு நோக்கின் நகர இளைஞர்களில் பெரும்பான்மையினர் பெண்களுக்கு உயர்கல்வி அளித்தலை ஆதரிக்கின்றனர். பெண் கல்வி என்பது பெண்களுக்கு வீட்டுக்கு வெளியே உதவிபுரியும் வகையில் அமைவதையே விரும்புகின்றனர். எனினும், பெண்களுக்கு எந்த வகையான கல்வியை அளிப்பது என்ற விடயத்தைத் தீர்மானிப்பதில் இரு சாராருக்கும் எந்தவிதமான வேறுபாடும் இல்லை[3] என்பது ராஜேந்திர பாண்டேயின் கணிப்பு. காலத்திற்கேற்றவகையில் தேவைக்கேற்றபடி கல்வி அமைய வேண்டும் என்பதை எல்லோரும் ஏற்றுக் கொண்டிருக்கின்றனர்.

இன்றைய நிலையில் உண்மைக் கல்வியின் மதிப்பு மறைந்து தேர்வு மதிப்பெண்களே உயர்வு பெறுவதைக் காணும்போது சமுதாய உணர்வுடைய எழுத்தாளர்கள் திகைக்கின்றனர். பள்ளிக்கூடத்தில் இடம் பெறுதல் தேர்வில் வெற்றிபெறுதல் எந்தக் கல்லூரியில் இடம் பிடித்தல் போன்றவற்றில் எதையுமே பணம் சாதிக்கும் நிலை வளர்ந்து வருகிறது. கல்வி ஒரு அறப்பணி என்ற எண்ணம் மாறி மற்ற துறைகளைப் பிடித்த நோய் மாணவர் ஆசிரியர் சமுதாயங்களையும் பிடித்து எதிர்காலத்தைக் 'கருநிழ'லாகக் காட்டுவதை உணர்ந்த ராஜம் கிருஷ்ணன் கல்விக் களத்தில் காணும் களங்கங்களை எடுத்துக்காட்டும் வகையில் 'கூடுகளை'ப் படைத்துள்ளார்.

செயகாந்தன் பெற்ற முறையான கல்வி குறைவு என்பதனாலோ என்னவோ, அவர் படைத்த பாத்திரங்களிலும் பெரும்பான்மையானோரைப் பொருத்தவரை அவர்கள் பெற்ற முறையான கல்வி குறைவாகவே உள்ளது. செயகாந்தன் தம் நாவல்களில் படைத்த பாத்திரங்களும் முறையான கல்வியைக் குறைவாகவே பெற்றவர்கள் பலர்.

மிக நல்ல முறையில் குழந்தை வளர்ப்பதாகச் செயகாந்தன் காட்டுகிற டென்னி (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), சிட்டி (உன்னைப்போல் ஒருவன்), ஆதி (ஜயஜய சங்கர) ஆகியோர் வளர்ப்பிலும் முறையான கல்விக்குச் செயகாந்தன் இடம் தரவில்லை. சபாபதிப்பிள்ளை டென்னியைப் பற்றித் தொராவிடம்;

> ஸ்கூலுக்குப் போகணும்னு அவனுக்கு ஆசையிருந்தால்
> போகட்டும், இல்லாட்டி வேணாம், அவனைக்
> கட்டாயப் படுத்தாதீங்க[4]

என்று கூறுகிறார். தொண்டர் தரைக்கண்ணு, சிட்டிக்குக் கல்வியறிவு கொடுக்க நினைக்கிறார். ஆனால் அது முறையான கல்வியறிவன்று; ஒரு வழியில் முறைசாராக் கல்வியே ஆகும். ஏனெனில் பகலில் 'ஜூஸ்' விற்றுப் பணமீட்ட ஏற்பாடு செய்து கொடுத்த பின், இரவில் ஒரு சங்கத்தினர் நடத்தும் பள்ளியில் தான் அவனைப் படிக்க அனுப்புகிறார் தொண்டர். இவ்வாறான முறைசாராக் கல்வியைச் செயகாந்தனின் பாத்திரங்களுள் பெரும்பாலோரும் பெற்றவர்களே.

எனவே முறையான கல்வியைவிட, சிந்திக்குந்திறனை வளர்க்கும் முறையில், தாங்களாகவே கற்றுக் கொள்ளும் கல்வியையே ஜெயகாந்தன் விரும்புகிறார் என்பதை அவருடைய பாத்திரப்படைப்புகள் உணர்த்துகின்றன என்றால் தவறில்லை.

<u>சமயப் பொறுமையும் சாதி ஒழிப்பும்:</u>

எழுதுகின்ற எழுத்தாளனின் எண்ண எழுச்சிக்கும் சிந்தனைத் தெளிவிற்கும் ஏற்பப் பொருள்களும் அமைகின்றன. ஆராய்ந்து பார்க்கின் இலக்கியம் என்பது சில குறிப்பிட்ட சமுதாய வகைகளைச் சார்ந்தே தோன்றுகின்றது. இலக்கியத்திற்கெனக் குறிப்பிடத்தக்க சமுதாயத்திற்குப் படைப்பாளன் ஆற்ற வேண்டிய பணி ஒன்றுண்டு.

சமூகப் புதினங்களில் குறிக்கோள் தன்மையோடு, சமுதாய உணர்வு மிகுதியையும், கொடுமைகளையொழிக்கும் உந்துதலையும் காணமுடியும்.

சமூகப்புதினங்களில் அவ்வக் காலச் சமூக வரலாற்று நிகழ்ச்சிகள் இடம் பெறுகின்றன. சமூக இலக்கியங்களையும், போராட்டங்களையும், வெற்றி தோல்விகளையும் எதிரொலிக்கின்ற காலத்தின் குரலாக படைப்புகள் எழுந்துள்ளன. மனித சக்தியின் வலிமையையும், ஆற்றலையும், எடுத்துரைத்து சமூக விடுதலைக்காக இவை குரல் கொடுக்கின்றன.

உலகிலுள்ள மக்களிடம் சமூக அந்தஸ்தில் பல்வேறு நிலைகள் உள்ளதாகவும், உயர்ந்த நிலையில் உள்ளவர்கள், தாழ்ந்த நிலையில் உள்ளவர்கள்

எனப்பிரிக்கப்பட்டிருப்பதாகவும்[5] அமெரிக்க சமூகவியல் அறிஞர் லாம்டுவார்னர் கருதுகின்றார்.

ஒரு சமுதாயத்தினுடைய மாற்றத்தையும் இயக்கத்தையும் முழுமையாகச் சித்திரிக்கும் தன்மையும் வன்மையும் கொண்டது நாவல் இலக்கியம். ஒரு நாவல் முழுமையானதாக இருக்கவேண்டுமெனில் அந்த இலக்கிய கர்த்தாவுக்கு முக்காலத்தையும் உய்த்துணரக் கூடிய உயர்ந்ததோர் சித்தாந்தப்பிடிப்பும் உணர்வும் இருக்க வேண்டும் என ரால்ஃபாக்ஸ் கூறிய கருத்தை முழுதும் ஏற்றுக்கொண்ட டி.செல்வராஜ் தன்னுடைய 'மலரும் சருகும்' என்ற நாவலைப் படைத்துத்தந்துள்ளார்.

இந்திய நாடு விடுதலை பெற்றபின் தமிழ் மக்களின் அக வாழ்விலும் புற வாழ்விலும் ஏற்பட்ட அசைவுகளையும் மாற்றங்களையும் ஆசிரியர் நன்கு கண்டார். குறிப்பாகக் கிராம வாழ்க்கையில் இயக்க இயல் காரணமாகப் பழைய பண்பாடும் நடைமுறைகளும் கேடடைந்து மாற்று வேறுபாடுகள் தோன்றியதையும் உணர்ந்தார். இதனால் எழுந்த புதிய ஆற்றல் பழைய இழிநிலையை அழித்து வெற்றி பெறும் என்பதை உணர்ந்து மாடசாமிக் குடும்பனையும் அவன் வழிமுறையினரையும் காட்டுகிறார் ஆசிரியர்.

பல ஆண்டுக் காலமாகச் சாதிப் பூசலால் பிளவுண்டு கிடந்த சபையை அவ்வூர்ப் பாதிரியார் ஒன்றுபடுத்த நினைக்கிறார். இந்த மதச் சாதிப் பிரிவுகள் கிறித்தவமதத்தையும் தாக்கின.

நாடார் கிறித்தவப் பெண்ணைப் 'பறப்பய கிறுத்தவன்' கட்டிக்கொண்டு போனது பெரிய சிக்கலை உண்டு பண்ணுகிறது. என்றும் அவர்களை வேறு ஊர்க்கு மாற்றல் செய்வதால் தற்கால நிலையில் ஒருவாறு சிக்கல் தீர்கிறது. என்றும் அது நாடார் கிறித்தவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்கள் சிறுபான்மையினர் என்ற காரணத்தால் ஏற்றனர் என்பதுடன் அவர்களில் பலர் அன்றாடம் பனையேறிப் பாளை சீவிப் பிழைப்பதுடன் - பறையர்களுக்குச் சொந்தமான பனைகளையே குத்தகைக்கு எடுக்க வேண்டியிருந்ததால் பிழைப்பைக் கருதி ஏற்றுக் கொண்ட பொருளாதார நிலையையும் கூறுவார்.

"நாடார்களாகிய கிறிஸ்தவர்களுக்குப் பாதிரியாரின் இந்தத் தீர்ப்பு பிடிக்கவில்லை என்றாலும் அவர்கள் ஜனத்தொகையில் சிறுபான்மையினராக இருந்த காரணத்தாலும், மேலும் அவர்களில் பெரும்பான்மையானவர்கள் அன்றாடம் பனையேறிப் பாளை சீவிப் பிழைப்பதுடன் பறையர்களுக்குச் சொந்தமான பனைகளையே குத்தகைக்கு எடுக்க வேண்டியிருந்ததாலும் பிழைப்புக் கருதி ஏற்றுக் கொண்டார்கள்". (இயல்: 3) இதுவே சமுதாயத்தை மார்க்சிய நோக்குடன் அணுகும் முறை.

படித்த ராஜரத்தினம் தன் மைத்துனன் என்ற உறவை விட அவன் படித்ததற்கே தனி மரியாதை கொடுத்தான் மோசே. ஆனால் அவனோ கல்லூரியில் கூட ஒவ்வொரு நிமிடமும் தான் தாழ்ந்த வகுப்பைச் சேர்ந்தவன் அல்ல என்பதைக் காட்டப்பல வழிகளைக் கையாள்வான்.

அப்படி ஒரு மனப்போக்கு. படித்ததும் தன் சாதியைவிட்டு நீங்கி உயர் சாதி மக்களோடு தன்னை இணைத்துக் கொள்ள ஒரு ஆசை.

பரம்பரை வழக்கத்திற்கேற்ப மாடசாமிக் குடும்பன் பிள்ளைமார் தெருவில் வந்து நின்றதுமே தன் தலைத்துண்டை அவிழ்த்து இடுப்பில் கட்டி நமஸ்காரம் செய்தான்.

"என்னடா ஐயா செய்ய? மேல் குலத்தவங்களைக் கண்டதுமே என்னை அறியாமலேயே என் தலைத் துண்டு இடுப்புக்கு வந்திருது, கை இரண்டும் நெஞ்சிலே குவிஞ்சிருது, எங்ககாலம் வேறே, ஒங்க காலம் வேறே, குருடனைப் புடிச்சு ராசா முழி முழிடான்னா முடியுமா? அப்படித்தான் என் நெலமையும்" என்று அசடு வழியச் சொன்னான்." (இயல்: 4) கிழவன். இந்த இழவே வேண்டியதில்லை என்று ஈசாக்கு தலையில் துண்டே கட்டுவது கிடையாது. இருந்தாலும் ஒப்புக்குக் கைகூப்பிநமஸ்காரம் செய்தான். இதுவே உயர்சாதி மக்களுக்குத் தந்தையும் மகனும் காட்டிய மரியாதை.

பட்டாளத்துக்குப் போய்விட்டு வந்த ரங்கனின் வருகை மற்றவர்களுக்கெல்லாம் புதிய வாழ்வைக் காட்டியது. சேரிக்கு மேற்கே ஒரு சின்னஞ்சிறு குடிசை. சர்காரிடமிருந்து இரண்டு ஏக்கர் தரிசு பூமி. அதற்குப் பின் யாருடைய உதவியையும் அவன் நாடுவதில்லை. யாராக இருந்தாலும் செருப்பைக் கழற்றாமல் மேல் துண்டை இடுப்பில் கட்டாமல் தனி மரியாதை பெற்று நடந்தான். மேல் ஜாதிக்காரரை எடுத்தெறிந்து

பேசியதால் மக்களிடையே அவளுக்குத் தனி மதிப்பும் மரியாதையும் ஏற்பட்டது. சேரிப் பெண்களை உயர்சாதிக்காரர் தீண்டாத வண்ணம் பாதுகாப்பாகவும் இருந்தாள். அவள் வீட்டுக்கு வந்த தங்கிச் சென்றவன் பெயரைப் போலீசிடம் சொல்லாததால் ரங்கனை அவர்கள் அடித்து வண்டியிலேற்றிக் கொண்டு போனார்கள். அது 'புரட்சி வாழ்க' என்ற குரல் ஒலியைக் கிளப்பிச் சென்றது. மோசேக்கு அதன் பொருள் தெரியவில்லை.

மாடசாமிக் குடும்பன் தன் பேத்தியை ரத்தினத்திற்கு மணம் செய்து கொடுக்க விரும்பினான். திருமணம் சம்பந்தமாகப் பேசிவர எண்ணி மகள் வீட்டுக்குப் போனபோது, அவன் நடத்தப்பட்ட முறை அதிர்ச்சியளிப்பதாய் இருப்பதை உணர்கிறான். தன் மகள் மாடத்தியே மாறிப் போய்விட்டாள் என்பதை அறிகிறபோது நெஞ்சம் துடிக்கிறான். அவர்களுக்கும் தனக்கும் இடையே தகர்க்க முடியாத சுவர் எழுந்து கொண்டிருப்பதைப் புரிந்து கொள்கிறான். (இயல்:15) வெடித்த நெஞ்சுடன் வீடு திரும்பினான். அதன்பின் குடும்பம் வேதனைத் தீயில் கருகத் தொடங்கியது. ரத்தினம் செல்வியை மணம் புரிந்துகொண்டு பதவி உயர்வு பெற்ற பங்களாவாசி ஆனான். குடிக்கும் அடிமை ஆனான்.

இந்நிலையில் பஞ்சம் தலையெடுத்தது. புதிய பணக்காரர் காந்திமதிநாத பிள்ளை தன் நிலங்களில் உள்ள கிணறுகளை ஆழமாக வெட்ட மற்றவர்கள் கிணறுகளில் நீர் வற்றி வறண்டது. விவசாயிகள் குடும்பி அவர் கையில் சிக்கியது. மாடசாமி நிலம் அவர் கைக்கு மாறியது.

நரியை நண்டுக்குக் காவல் வைத்தது போலக் காந்திமதிநாத பிள்ளையே விவசாயக்கடன் சொசைட்டித் தலைவர் ஆனார். அரசாங்கத்தி-லிருந்து விதைநெல், உரம், பணம், இவற்றையெல்லாம் விவசாயி பெயரைச் சொல்லித்தாமே வாங்கிக் கொண்டார். சொந்த நிலத்துக்காரனை ஏமாற்றி அவனிடமிருந்து நிலத்தைப் பறித்து அதனை அவனிடமே வாரத்துக்கு விடவும் செய்தார். மோசே அந்த நிலையிலிருந்தபோது ரங்கன் திரும்பி வந்தான். அவன் கொண்டுவந்திருந்த அறிவுச் செல்வம் ஊரெங்கும் பரவத் தொடங்கியது.

முதன் முதலாக அளவு மரக்கால் பற்றிய போராட்டம் எழுகிறது. காந்திமதிநாத பிள்ளை வயலில் வேலை செய்யும் உழைப்பாளர்-களுக்கு முத்திரை மரக்காலால் நெல் அளக்க மறுக்கும்போது அந்த அநீதிக்கு எதிராக ரங்கன் முன் வந்து போராடுகிறான். "மற்ற கிராமங்களில் அளப்பதைப் போல் முத்திரை மரக்கால் வச்சு வாரத்தை அளந்து கட்டிட்டுப் போங்க. ஒங்க இஷ்டப்படி நீங்க வச்சிருக்கிறமரக்காலால் அளப்பதற்கு நாங்க சம்மதிக்க மாட்டோம்" என்று உறுதியாகப் பேசுகிறான். இறுதியில், விவசாயிகளை ஏமாற்ற முடியாது என்று உணர்ந்த நிலையில், காந்திமதிநாத பிள்ளை நியாயவான்போல் வேடம் போட்டுக்கொண்டு கோரிக்கைக்கு இணங்குகிறார். (இயல்:27) ரங்கன் அமைத்த விவசாய சங்கம் காந்திமதிநாத பிள்ளை வயிற்றிலே மண்போடத் தொடங்கியது. ரங்கன் உதவியால் மோசே வள்ளி மணம் நடந்தது. இது சாதிவிட்டுச் சாதி மணம்; மதம் விட்டு மதம் மணம். எனவே வள்ளி மணம் பெரிய தகராறாகக் கிளம்பியது. அரசாங்கத்தின்

ஒப்புதலோடு பதிவுத் திருமணம் நடந்தது. எல்லார்க்கும் ஒரு புதிய செய்தியாகப் பட்டது. பள்ளர் பறையர் தேவர் என்பவை எல்லாம் விவசாயச் சங்கம் என்ற அமைப்பின் கீழ் ஒன்றுபட்டன.

இயற்கை கருணையோடு இருந்தும் காந்திமதிநாதர் கருணையற்றவரானார். வாரப்பாக்கியை உடனே வாங்கி விவசாயிகளை வெறுங்கையோடனுப்பத் திட்டம் தீட்டினார். ரங்கன் "அடையோலையில் கண்டபடிதான் நெல் அளப்போம்; அதுவே விவசாய சங்க முடிவு" என்ற உறுதியாகப் பேசுகிறான் (இயல்: 36) காவல் படையின் உதவியுடன் விவசாயிகளின் போராட்டத்தை ஒடுக்கிவிடலாம் என்ற பிள்ளை நினைக்கின்றார். போலீஸ்படை கிராமத்திற்கு வந்தது. ரெங்கன், மோசே, இசக்கி ஆகியோர் கைதானார்கள். கன்னி மரியாளும் போலீசை எதிர்த்துத் தன் குரலை உயர்த்தினாள். எல்லோரையும் போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டு போனார்கள்.

சேரிகளில் சாதியும் பணமும் விளையாடிய கோரத்தாண்ட-வத்தை எதிர்த்து மோசே, ரங்கன் போன்றவர்கள் கட்டிய விவசாய சங்கம் சமூக அடித்தளத்தை எப்படி அசைக்கிறது என்பதைச் சேரிவாழ் மக்களைக் கொண்டே காட்டுகிறது. படித்த சேரிமகன் தன்னைச் சார்ந்தவரை விட்டு விலகி அவர்களுடைய அழிவுக்கும் காரணமானதை மறைக்காமல் காட்டுகிறது. நில உடைமையாளர் ஏழை விவசாயிகளை ஏமாற்ற வரும்போது அவர்கள் எழுச்சியுற்றால் அதைப் போலீசின் துணை கொண்டு அடக்கவும் செய்யும் கொடுமையை நன்கு உணர்த்துகிறது.

சேரி மக்களின் பேச்சு, நடை, உடை, பழக்க வழக்கம் ஆகியவையனைத்தும் இயற்கையாக வெளிப்படுகின்றன. விவசாய சங்கம் சேரி வாழ்க்கையைப் போராட்டத்தில் எவ்வாறு ஈடுபடச் செய்கிறது என்பதை இயல்பான வளர்ச்சியாகக் காட்டுகிறது.

ஒரு சமயத்தை ஒரு மனிதன் தானாக விரும்பி ஏற்றுக் கொள்ள வேண்டுமே தவிர, அவன் மீது பிறர் அதனைத் திணிக்கக் கூடாது எனும் கருத்து செயகாந்தனுக்கு உண்டு என்பதை அவர் படைத்த சபாபதிப் பிள்ளை (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), ஹென்றி பற்றித் தெரசாவிடம் கூறும் கீழ்க்கண்ட கூற்றினால் காணலாம்.

"உன் மதம் எவ்வளவு உயர்வாக இருந்தாலும் அதுக்காக
இந்தக் குழந்தை தலையிலே அதைச் சுமத்த வேணாம் ...
அவனுக்காகத் தோணினா அப்புறமா
கிறிஸ்துவனாகவோ, இந்துவாகவோ, முஸ்லிமாகவோ
அவன் இஷ்டப்படி ஆகட்டும்"[6]

சமயம் என்பது மனிதன் விரும்பி ஏற்றுக்கொள்கிற ஒரு வாழ்க்கை முறைதானே தவிர உண்மையில் சமயத்திற்கும் கடவுளுக்கும் நேரடியான தொடர்பு எதுவுமில்லை என்ற கருத்து கூடச் செயகாந்தனுக்கு உண்டு.

தமிழில் என்.ஏ.வேலாயுதத்தின் 'இரு விழிகள்' எனும் நாவல் ஒன்றே கலப்புத் திருமணத்தினை வலியுறுத்துகின்றது. சிவஞானம்

இஸ்மாயில் எனும் முகமதியருடன் நட்பு கொண்டான்; அவரது மகளைத் திருமணம் செய்து வாழ்ந்தான்[7] இந்த முஸ்லிம் ஒற்றுமையை வலியுறுத்தவும் காதல் திருமணத்தை ஊக்குவிக்கவும் எடுத்துக்காட்டாக அமைகின்றது.

**உழைப்பு முதன்மை பெறின் ஜாதி ஒழியும்:**

மாரப்பன் மகன் கந்தன் அரிசனச் சேரியைச் சேர்ந்த பாப்பாளை விரும்பினான். அந்த உண்மை அன்பு அவர்கள் குடும்பத்தில் பல சிக்கல்களை உண்டாக்கியது. எனினும் ஒரு சாதியை விட்டு இன்னொரு சாதியில் மணந்து வாழ்தல் 'தாகத்தில்' கு. சின்னப்பபாரதியால் வெளியாகிறது.

சாதி ஒழிய சின்னப்பபாரதி காணும் வழி ஒன்றே. சொத்து உடைமையில் ஏற்றத் தாழ்வு அகலவேண்டும் என்பதே. கந்தன் மனம் சம்பந்தத்தின் வாயிலாகச் 'சொத்துடைமை அமைப்புத் தான் ஜாதிகளை படைச்சது, சுரண்டறவங்க மக்களை வேறபடுத்தி வச்சுக்கிட்டே சுரண்டலுக்கு இடையூற இல்லாமல் இருக்க ஜாதி தேவைப்படுது. சுரண்டறவங்க கவுண்டராக இருந்தாலும் பறையராக இருந்தாலும் சுரண்டறதிலே வித்தியாசப் படலே. சுரண்டப்படறவங்க கவுண்டராயிருந்தாலும், பறையராயிருந்தாலும் சுரண்டப்படறதிலே சலுகை பெற்றிடறதில்லே. எல்லாத்துக்கும் இந்தச் சொத்துடைமை அமைப்புதான் காரணம். சொத்து மனுஷ வாழ்க்கையிலே முதன்மை வகிக்கிற நிலை போயி உழைப்பு முதன்மை வகிக்கிற நிலை வந்துட்டதுன்னா ஜாதி மதமெல்லாம் இருக்கிற இடந்தெரியாம போயிடும்' என்ற கருத்தை அறிந்து புது வெளிச்சம் பெறுகிறோம்.

<u>குடிப்பழக்கம்:</u>

முன்னேறிய மேலை நாடுகளில் குடிப்பழக்கம் ஒரு தவறான செயலாகக் கருதப்படவில்லை.

பொருளாதாரத்தில் கீழ்நிலையில் இருக்கும் நாடு இந்தியா. வறுமைப்பிணியில் மக்கள் சிக்கியுள்ள நிலையில் உண்ண உணவின்றி நாட்டு மக்கள் வாடுகின்றனர். இந்நிலையில் குடிப்பழக்கம் மக்களை மேலும் வறியராக்க வழியாயுளது. குறைந்த உணவுடன் குடிப்பதால் குடல் கெடுகிறது; நோய் மிகுகிறது. குடிப்பழக்கம் விரும்பத்தகாத விளைவுகளைத் தருகின்றது. பொருள் இழப்பை ஏற்படுத்துகின்றது. மதுவுக்கு அடிமையானோரில் பெரும்பான்மையினர் தங்கள் குடும்பத்தைக் காப்பாற்றும் நிலையில் உள்ளவர்கள் என்கிறார் மார்க்ரட் பி. பெய்லி.[8]

செயகாந்தனுடைய நாவல்களில் ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள், ஜயஜய சங்கர ஆகியவற்றைத் தவிர ஏனையவற்றில் குடிப்பழக்கமுடைய பாத்திரங்கள் இடம் பெறுகின்றனர். எனவே அப்பழக்கம் பற்றியும் அது தொடர்பான சட்டம் பற்றியும் செயகாந்தன் என்ன கூறுகிறார் என்பதை அப்பாத்திரப்படைப்புகள் வாயிலாகக் காணலாம். அளவோடு இருந்தால் குடிப்பழக்கம் தவறானதன்று. அளவுக்கு மீறினால் தவறு என்பதே செயகாந்தன் கருத்து. குடிப்பழக்கத்தின் பாதிப்பு சூழலை அடிப்படையாகக் கொண்டு நோக்கத் தக்கது.

அளவோடு மது அருந்துவதில் தவறில்லை என்பதைப் பிரபு கங்காவிடம் (சில நேரங்களில் சில மனிதர்கள்) கூறுகிறார்.

'என்னை மாதிரி நீ (குடிகாரியாக) ஆயிடக்கூடாது. எப்பவாவது சும்மா கொஞ்சம் டேஸ்ட் பண்றதிலே தப்பில்லே'[9]. அளவோடு மது அருந்தித் தீங்கு எதனையும் மதுவால் பெறாதவராகச் சாரங்கன் (வாழ்க்கை அழைக்கிறது), அவன் குருவினர், பின்ஸ் மாதுவல் (சில நேரங்களில் சில மனிதர்கள்), தேவராஜன் (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), ராமசாமிக் கவுண்டர் (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்), ஆகியோரைப் படைத்துக் காட்டுகிறார் செயகாந்தன்.

அளவுக்கு மீறி மது அருந்தி, குடிப்பழக்கத்திற்கு அடிமையான குடிகாரர்களாகப் பிரபுவையும் (சில நேரங்களில் சில மனிதர்கள்) படைத்துக் காட்டும் செயகாந்தன் அவர்கள் மதுவினாலேயே தங்கள் இல்லற வாழ்வின் இனிமை உட்படப் பல நன்மைகளை இழந்ததாக அமைக்கிறார். எனவே அளவுக்கு மீறிய குடிப்பழக்கம் தீமையானது என்பதைச் செயகாந்தன் இப்பாத்திர வாயிலாக உணர்த்துகிறார் எனலாம்.

இனி மதுவிலக்குச் சட்டம் பற்றிய செயகாந்தனின் கருத்துக்களைக் காணலாம். மதுவிலக்குச் சட்டத்திற்குக் காரணம் காந்தியடிகள் என்பதையும் அவர் சட்டத்தை வலியுறுத்தியதற்கான நோக்கத்தையும் பாண்டு (ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்)வின் கூற்றால்,

> 'காந்திதாங்க குடிக்கக் கூடாதுன்னு சொன்னாரு....
> ஏழை சனங்க குடியினாலே அழிஞ்சு பூடறாங்க; முட்டாளுங்களா
> ஆயிடறாங்க; புள்ளை குட்டிகளைத் தெருவுலேவுட்டுட்டுப் பூடறாங்கன்னு
> நல்லதுக்காகச் சொன்னாரு காந்தி'...[10]

என்று புலப்படுத்துகிறார் செயகாந்தன்.

இப்படி ஒரு சட்டம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசால் ஏற்கப்பட்டபின், மக்களின் நிலை என்ன? டெறன்றி வாயிலாக விடை கூறுகிறார் செயகாந்தன்.

> 'இப்படி ஒரு சட்டம் இருந்தா சட்டத்துக்குப் பயந்து
> அதுக்கு மரியாதை தந்து குடிக்காமல் இருக்கணும்,
> இல்லாட்டி சட்டம் தர்ற தண்டனையை வாங்கிக்க
> வேணும், என்ன பண்றது வேற?' (ப.307)

ஆனால் சட்டம் அதே நேரத்தில் ஒருமைத் தன்மையுடையதாக இல்லை என்பதைச் செயகாந்தன் பாண்டு வாயிலாக உணர்த்துகிறார்.

'இது என்னாங்க சட்டம்? அநியாயங்க இது. ஒரு ஊர்ல குடிக்கலாம். இன்னொரு ஊர்ல குடிக்கக் கூடாதாமே...பணம் இருக்கிறவங்க குடிக்கலாம்...ஏழைங்க குடிக்கக் கூடாதாம்'.

மேலும் சட்டத்தை நடைமுறைப்படுத்தும்போது, பிடிக்கப்பட்ட குடிகாரர்களைக் காவல்துறையினர் நடத்தும் முறை மனிதாபிமான உணர்வற்ற

முறையில் அமைந்திருப்பதையும், பாண்டு, துரைக்கண்ணு ஆகியோர் வாயிலாகச் செயகாந்தன் கண்டிக்கிறார்.

> 'குடிக்கிறது கெடுதலுதாங்க .. ஆனா அதுக்காக இது ரொம்ப அக்கிரமம் இல்லிங்களா? அவுங்களை அடிக்கிறது.. இம்சை பண்றது.. மானம் மரியாதையில்லாம நடத்தறது... இதுவாங்க காந்தி சொன்னாரு?'[11]

என்பது பாண்டுவின் கூற்றுக்கள்.

'குடிச்சான்னா, சட்டப்படி தப்புன்னா, வேண்டியதை செய்யுங்க. அவன் இவன்னுபேசறது நல்லாயில்லே. மதுஉடநாள் தராதரம் தெரியவேன்னா என்னடா, உங்க சட்டம்?' (ப.309) என்பவை துரைக்கண்ணுவின் கூற்றுக்கள்.

மேற்காட்டப்பட்ட செய்திகளால் மது பற்றிய செயகாந்தனின் கண்ணோட்டங்களைப் பற்றிக் கீழ்க்கண்ட முடிவுக்கு வரலாம்.

குடித்தல் என்பது தனிமனிதப் பழக்கம்.

அப்பழக்கம் அளவுக்கு மீறினால் தீமையானது.

அத்தீமையைத் தடுக்கும் நல்லெண்ணத்திலேயே காந்தியடிகள் மதுவிலக்கை வலியுறுத்தினார். ஆனால் அது குறித்த சட்டம் நாடு முழுமைக்கும் மக்களனைவருக்கும் ஒரே தன்மையுடையதாக இருத்தல் வேண்டும். சட்டத்தை நடைமுறைப்படுத்தும் காவல்துறையினர் மனிதாபிமான உணர்வோடு செயல்பட வேண்டும் என்பவையே செயகாந்தனின் கண்ணோட்டங்கள்.

<u>நாட்டுப்பற்று:</u>

நாட்டுப்பற்றும் மொழிப்பற்றும் ஒருவருக்கு இரண்டு கண்களாகும். நாட்டுப்பற்று என்பது எல்லா நாட்டினருக்கும் பொதுவானது. ஒரு நாட்டுக்குடிமகனின் குருதியில் நாட்டுப்பற்றும் கலந்து இருக்க வேண்டும். குழந்தைகளுக்குச் சிறுவயது முதல் நாட்டுப்பற்றை ஊட்டிவரவேண்டும். தலைவர்களின் வாழ்க்கையினையும், விடுதலைப் போராட்ட வரலாற்றினையும் எடுத்தியம்பிடல் வேண்டும்.

தேச பக்திப்பாடல்களைப் பொதுக்கூட்டங்களில் ஒலி பரப்புவதன் மூலம் நாட்டுப்பற்றினை வளர்க்கலாம். வானொலியிலும் தொலைக்காட்சியிலும் நாட்டுப்பற்றை வளர்க்கும் பாடல்களைத் தினந்தோறும் ஒலி, ஒளி பரப்பிவருவது குறிப்பிடத்தக்கது.

இந்தியா, சந்தித்த மூன்று யுத்தங்களிலும் மக்களின் நாட்டுப்பற்றுத் தெற்றென வெளிப்பட்டது. சாதி, மத, இன, கட்சி வேறுபாடுகள் இன்றி, நாட்டுக்கு ஒரு சோதனை எனவரும்பொழுது அனைவரும் ஒருசேரத்திரண்டு நிற்பர். ஒரு நாட்டின் குடிமகனாக இருந்துகொண்டு அந்நாட்டு ரகசியங்களை அயல்நாட்டுக்கு விற்றல், நாட்டுக் கொடியை, தேசிய கீதத்தை அவமதித்தல், பிரிவினை வாதங்களை எழுப்புதல் போன்றவை மிகக் கொடிய குற்றங்களாகும்.

நாட்டு மக்கள் ஒவ்வொருவரும், தம் நாட்டின் மீது இயற்கையாகவே பற்றுடையவராக இருப்பார்கள். குடும்ப அளவில்

நேரும் பூசல்கூட மன வேற்றுமையையும், நாளடைவில் நாட்டின் மீது வெறுப்பும் தோன்ற வழிவகுக்கும். அது வெளிநாட்டவர் நம்மீது ஆதிக்கம் செலுத்த வழிகோலும் என அஞ்சினர். கூட்டுக்குடும்பத்தைப் போற்றினர். நாட்டின் கொடியினையும், நாட்டுப் பாடலையும் மதித்தல் நாட்டுப்பற்றுடையவர் மேற்கொள்ளும் செயலாகும்.

அகிலனால் 1972-ல் புனையப்பட்ட சிறுகதை 'கூட்டுக் குடும்பம்'. இதில் ஒரு வளமான, பெரிய குடும்பம் பிரிந்து, பூசல் மிகுந்து தனித்தனியே மற்றவனைத் துணைதேடி, அவனுக்கு அடிமைப்பட்டு துன்பம் அடைகின்றது. பின் வெளியானை விரட்டிவிட்டு ஒன்றுபடுகின்றது. பின்னரும் லஞ்சம், ஊழல் ஆகியவற்றால் பூசல் மிகுந்து மக்கள் பிரிவினை சக்தியால் உந்தப்பெற்றுக் கலவரம் செய்கின்றனர். மற்றொரு தெருவிலிருந்து குபீரென்று புதுக்குரல் விளம்பியது. 'ஒவ்வொரு தெருவிற்கும் தனி ஆட்சி கொடு' என் தெருவுக்கு சுயாட்சி கொடு! கொடுக்காவிட்டால் தெருவையே பிரித்துத் தனிக்கொடி நாட்டுவேன்' என்றது மற்றொரு குரல்.[12] தனித்தனியே கூட்டு சேர்கின்றனர். இது மீண்டும் மாற்றானை உள்ளே விட்டு விடுமா? அல்லது மக்கள் அறிவுடன் ஒற்றுமையாக வாழ்வார்களா? என்ற வினாவுடன் முடிக்கப்பட்டுள்ளது. ஆங்காங்கு உள்நாட்டுக் குழப்பங்களையும், பிரிவினை வாதத்தையும் சுட்டிக் காட்டியுள்ளார்.

கோவி. மணிசேகரனின் 'அன்னையின் குரல்'[13] வள்ளியப்பன் இரும்புக் கடையில் பணிபுரிபவன்; அன்னையின் மீது அளவற்ற அன்புடையவன்;

காந்தி, நேரு, போன்றோரிடம் பற்றுடையவன்; எப்பொழுதும் காந்தியின் 'சத்திய சோதனையைப்' படிப்பவன். தன்னுடைய தாயின் மரணச் செய்தியை அறிந்ததும் கடன் வாங்கிக் கொண்டு கடைசி 'பஸ்ஸைப் பிடிக்க ஓடினான். வழியில் கூட்டம் நடந்து முடிந்ததற்குரிய அறிகுறியாக நாட்டுப்பாடலை ஒலிபரப்பினர்...ஓடியவன் பாடல் முடியும்வரை நின்று பிறகு ஓடினான். அதற்குள் பஸ் போய்விடவே கண்ணீருடன் இருப்பிடம் திரும்பினான். கேட்டவர்களிடம் 'பஸ் தவறி விட்டது' என்றான். நாட்டுப்பற்றுடைய அவன் கொள்கைக்குச் சோதனை வர, அதில் அவன் தேறிவிடுதலைக் காட்டுகிறார்.

<u>நாட்டு நலத்திட்டம்:</u>

இந்திய மக்களுக்கு, குறிப்பாக, ஊரக மக்களுக்கு பயனிக்கக் கூடிய வகையில் பற்பல நாட்டு நலத்திட்டங்கள் துவக்கப்பட்டு வருகின்றன.

எல்லோர்க்கும் வேலை கொடுப்பதற்காகக் கொண்டுவரப்பட்ட திட்டம் "உழைப்புக்கு உணவுத் திட்ட"மாகும். இது 1979 ஏப்ரலில் கொண்டு-வரப்பட்டது. பின்னர் இது மத்திய அரசின் தேசிய ஊரக வேலைவாய்ப்புத் திட்டமாக 1980 அக்டோபரில் மாற்றப்பட்டது.

கிராமப்புறங்களில் ஆண்களுக்கும், பெண்களுக்கும் அதிகப்படி வேலை வாய்ப்பை உருவாக்குவது; கிராம மக்களின் வருமானத்தைப்

பெருக்கக்கூடிய சமூகச் சொத்துக்களை உண்டாக்குவது, கிராம மக்களின் வாழ்க்கைத் தரத்தையும், சத்துணவுத் தரத்தையும் மேம்படுத்துவது ஆகிய நோக்கமுடன் கொண்டுவரப்பட்டதுதான் இந்தத்திட்டம்.

தமிழகத்தில் உள்ள 378 வட்டாரங்கள் மூலம் தேசிய ஊரக நலப்பணித் திட்டம் நிறைவேற்றப்பட்டு வருகிறது. சிறுபாசன வேலைகள், வெள்ளத்தடுப்பு, வடிகால் வேலைகள், மண்வளப் பாதுகாப்பு, காடு வளர்ப்பு, சாலை போடுதல், ஆதி திராவிடர் மற்றும் மலைவாழ் மக்களுக்கானத் தனித் திட்டங்கள், பள்ளிகள், ஊராட்சி மன்றம், சமுதாய நிலையம், ஆசிரியர் குடியிருப்பு, தாய்சேய் நல நிலையம் ஆகிய கட்டும் பணிகள் இத்திட்டத்தின் மூலம் மேற்கொள்ளப்படுகின்றன.

கிராமப்புறங்களில் நிறைவேற்றப்படும் இன்னொரு திட்டம் ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித்திட்டமாகும். சுய வேலைவாய்ப்புக்கு வழி செய்து வறுமையை விரட்டும் திட்டம். இது சிறு விவசாயிகள், மிகச் சிறு விவசாயிகள், விவசாயத் தொழிலாளர்கள் கிராமக் கைவினைஞர்கள் ஆகிய பிரிவினர்களில் மிகவும் ஏழைகளாக இருப்பவர்களுக்கும், குறிப்பாக ஆதி திராவிடர்களுக்கும் மலைவாழ் மக்களுக்கும் முன்னுரிமை அளிக்கிறது.

தமிழ் நாட்டில் கிராம மக்களிடையே அறிமுகமான தனிப்பெரும் திட்டம் தன்னிறைவுத் திட்டமாகும். குடிதண்ணீர், சாலைகள், சிறு பாலங்கள், பள்ளிகள், தாய்சேய் நல நிலையங்கள், ஊரக மருந்தகங்கள், சிறுபாசன மேம்பாடு, ஆதி திராவிட மக்களுக்கு மயானச்

சாலை, அவர்களுக்கு வீட்டு வசதி ஆகியவற்றைக் குறிப்ப காலத்தில் செய்து முடிக்கும் திட்டம் இது.

இத்திட்டங்கள் தமிழகக் கிராமங்களை முற்றிலும் மாற்றியமைத்து வருகின்றன. இதனால் சமுதாயத்தில் செழிப்பும், தனி நபர்களிடம் விழிப்பும் காணப்படுகின்றது.

நாட்டின் வளர்ச்சிக்குத் திட்டங்கள் பல தீட்டப் பெறுதல் அவசியம். அஃது அரசியல் கட்சி நோக்குடன் கூடியதாக இருப்பினும் அதை நிறைவேற்றுவதில் பொதுமக்கள் மன நிறைவுடன் ஈடுபட வேண்டும். அதுவே சமுதாய முன்னேற்றத்திற்கு வழி கோலும்.

நாட்டு நலத்திட்டமும் அரசின் சாதனையும்:

அரசாங்கத்தில் மராமத்து இலாகாவில் அணைகட்டும் பிரிவில் வேலை செய்யும் என்ஜினியர் ஒருவரின் பார்வையில் கண்ணுக்குத் தெரியாத 'வேர்களும்' கண்ணுக்குத் தெரியும் 'விழுது'களும் வெளிப்படுகின்றன. தன் வேலையைப் பிறர் குறைகூற முடியாத வகையில் செயலாற்றினாலும் அவருக்கு உத்தியோக ஏணிப்படியில் ஏற முடியவில்லை. திடீரென்று வருகை தரும் மரா-மத்து மந்திரிக்கு பரவியாற்று அணைத்திட்டம் பற்றிக் காட்டும் வாய்ப்பு வருகிறது. பெரிய அணைகளைப் பல நாள் திட்டமிட்டுச் செய்யும் வழக்கத்தை அரசாங்க அமைச்சர்களும் மேலதிகாரிகளும் தங்கள் விருப்பத்திற்கேற்ப எப்படி விரைந்து ஒட்டிவிடுகிறார்கள் என்பதை, சு.சுப்ரமணியனின், 'வேரும் விழுதும்' என்ற நாவலில் காண முடிகிறது.

ஆற்றை அடக்கவும், கட்டுப்படுத்தவும், அணைகட்டவும் எதிர்பார்க்கும் உலகம் அதை அநுபவிக்க விடாத கொடுமையை அந்த அறிவியல் அறிஞன் எண்ணிப் பொங்கினான்.

'மேக்கரில் அணை பரலியின் கொட்டத்தை அடக்கிவிடும்.... தேக்கமாக மாறிவிடும். அதன் நடனம் நின்றுவிடும். வயதான தாய் வீட்டிலேயே அடங்கிக் கிடப்பதுபோல் பொன் குன்றுக்கும் மான் குன்றுக்கும் இடையில் பெரிய உடல் தரித்து அடங்கிவிடுவாள். குமரியின் கோலம் அழியும். ஆண்டுதோறும் வெள்ளப்பெருக்கு என்பது கிடையாது; மணற் பரப்பாகும் நிலையும் உண்டாகாது. ஆனால் நீர்த்தேக்கம் தன்னுள் நூற்றைம்பது கிராமங்களை ஆழ்த்திக்கொள்ளும்' என வரப்போகும் விளைவுகளைப் பற்றிக் கூறுகிறது. அதன் 'வேராக' வெளிக்கு விளங்காத காரணம் மூழ்கவிருந்த அத்தனை கிராமங்களிலும் எதிர்க்கட்சியின் செல்வாக்கு இருந்ததுதான். அரசியல்வாதிகள் நாட்டுக்கு நல்ல திட்டம் போட்டால் கூட அவை 'விழுது'கள் போல வெளிக்குத் தெரியும் தன்மைகளே. அவற்றின் வேர்க்காரணம் சொந்தக் கட்சியின் லாபமாகவும் எதிர்க்கட்சியின் அழிவுமாக இருப்பதைத் திறந்து காட்டி விடுகிறார்.

வரப்போகும் அழிவு என்ஜினியர் உள்ளத்தில் பாப உணர்வைத் தூண்டிவிடுகிறது. அழிவா ஆக்கமா என்ற கேள்விக்கு விடை நாட்டின் பொது நலத்திற்காகச் சில செய்கைகள் செய்ய வேண்டும். புதுக் கிராமங்கள் வேர் ஊன்றினால் வாழ்வு தன்னால் மகிழ்வு பெறும்.

மேக்கர் திட்டத்தை அரசாங்கம் ஒப்புக் கொண்டதும் அப்பகுதியில் நிலம் வாங்கவோ விற்கவோ கூடாது எனத் தடை வருகிறது. அதே சமயத்தில் திட்டம் தயாரித்தவர்களுக்கு வேலை உயர்வு வருகிறது. அணை உருவாகின்ற காட்சியை 'வேரும் விழுதும்' ஒவ்வொரு அணுவிலும் உயிரோட்டத்தைக் காட்டுகிறது. மேக்கர் சிறு நகரமாகி விட்டது. எங்கெங்கோ இருந்து வந்த மக்கள் ஒன்று சேர்கின்றனர். 'மார்க்கெட்' விநாயகரும் முளைக்கிறார். காங்கிரீட் யந்திர வேலை, பாறை வெடிக்கும் ஒலி, லாரிகள் ஓடும் ஓசை இப்படிப் பல வந்தன.

அணை கட்டி முடிந்ததும் மக்களை எங்கே புனர்வாழ்வு பெற அனுப்புவது? என்ற கவலையும் வேர்விடுகிறது. கிராமம் அழியப்போவதை அந்த ஊர்மக்கள் பயத்தோடு கேட்க அறிவியல் மௌனம் சாதிக்கிறது.

விவசாய உலகில் யந்திர ஆற்றல் புகுகிறது. பழைய மதிப்புகள் மாறுகின்றன. பொய்யும் திருட்டும் மெல்லப் புகுகின்றன. அந்த ஊர்வட்டத்தைத் தொடும் நிகழ்ச்சிகளை 'வேரும் விழுதும்' பரம்பரை பரம்பரையாக மண்ணோடு மண்ணாக ஒட்டிக் கிடந்த மக்களின் செயல்களாகக் காட்டியது. வீடுகள் காலியாகிய வண்ணம் பழமை கரைவதை மெல்ல மெல்லக் கண்டனர்.

திட்டம் பல மாற்றங்களைச் சமுதாயத்தில் நேரிடையாகப் பார்க்கும்படி மாற்றுகிறது. புதிய எதிர்பார்ப்புகள் கட்சிப் பிரிவுகள் எழுகின்றன. பழங்கால மனிதர்கள் இதற்கிடையில் மறைகின்றனர்.

அரசியல்வாதிகள் பஞ்சம் வராமல் தடுக்க அணைகட்டி மக்கள் வாழ்வைக் காத்ததாக முழங்கினர். அணை கட்டத் தொடங்கியது முதல் மக்கள் வாழ்வு மாற்றத்தை வடித்துத் தந்த நாவல் 'வேரும் விழுதும்'.

வறுமை:

உலகில் உள்ள ஏழை நாடுகளுள் இந்தியாவும் ஒன்று. இங்கு லட்சக்கணக்கான மக்கள் வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கின்றனர். சுதந்திரம் அடைந்து நாற்பது ஆண்டுகட்கு மேலாகியும், வறுமை நிலை நீடிப்பதற்குப் பல காரணங்கள் உண்டு.

நாட்டின் வளர்ச்சிக்காகத் தீட்டப்படும் திட்டங்களும் சிறந்தவை; அத்திட்டங்களைத் தீட்டுபவர்களும் சிறந்தவர்களே; எனினும் அத்திட்டங்களின் பயன்கள் ஏழை மக்களை அணுகுவதில்லை; இதற்கு அரசு இயந்திரத்தின் மெத்தனமான போக்கையும், இடைத் தரகர்களையும் காரணங்களாகக் குறிப்பிடலாம்.

நம்மைவிடச் சிறிய நாடுகளான ஜப்பான், ஜெர்மனி போன்றவற்றில் வறுமை அகன்றதற்குக் காரணம், அங்குள்ள மக்கள், அரசை எதற்கும் எதிர்பாராது சொந்தத்தொழில் செய்து முன்னேறியதே காரணமாகும்.

ஆனால், இங்கு பொழுதுக்கொரு போராட்டம், வேளைக்கொரு வேலை நிறுத்தம் என்ற நிலைதான் நீடித்து வருகின்றது. கல்வி நிலையங்களோ

பட்டதாரிகளை வெளியே அனுப்பிக்கொண்டிருக்க அரசாங்கமோ அவர்களுக்கு வேலை தர இயலாதத்திருக்கின்றது.

வறுமை அகல, வேலைக்கான மணிநேரங்கள் தொழிற்சாலைகளிலும், அலுவலகங்களிலும் அதிகப்படுத்தப்படல் வேண்டும். பற்பல இடங்களில் மனிதர்கள் செய்ய வேண்டிய வேலைகள் பலவற்றை இயந்திரங்கள் மேற்கொண்டுவருகின்றன. இவற்றைத் தவிர்த்து அவசியமான இடங்களைத் தவிர ஏனைய இடங்களில் மனித சக்தியையேப்பயன்படுத்த வேண்டும்.

"கைத்தொழில் ஒன்றைக் கற்றுக்கொள்,
கவலை உனக்கில்லை, ஒத்துக்கொள்"

என்பது மூதோர் வாக்கு. எனவே அனைவரும், சொந்தத் தொழில் ஒன்றை மேற்கொண்டு, பொருளை ஈட்டி, வறுமையை அகற்றி வீட்டுக்கும் நாட்டுக்கும் பெருமை சேர்த்திடல் வேண்டும்.

ரா.சீனுவாசனால், 'அழுகை' எனும் புனைகதையில் நாட்டின் வறுமைநிலை பல்வேறு கோணங்களில் படம் பிடித்துக்காட்டப்படுகிறது. வறுமை நீங்க வழியைக் காணல் அனைத்து மக்களின் கடமையாகும். வாழ்வில் காணும் அன்றாடக் காட்சிகளை நாவலில் நிறையக் காணலாம்.

'நான் எந்த வகையிலும் ஒழுக்கக்கேடான செயல்களைச் செய்ய மாட்டேன். நான் தவறான வழியில் செல்ல மாட்டேன்' என்று பட்டமளிப்பு விழாத் தலைவர் சொல்ல அதைக் கேட்டு 'சரி' என்று

சொல்லும் 'வாய்கள்' இது இன்றைய கல்வியின் இழிநிலையைக் காட்டும் 'அழுகை'யாகும். மக்களின் பார்வையில் இந்தப்பரந்த உலகம் எத்தகைய நிலையில் உள்ளது என்பதைத்தெளிவாகக் காட்டும்.

ராஜாபாதர் வீட்டுக் குழந்தையின் உரையாடலிலும் பொம்மைச் செட்டியாருக்குப் பெரிய தொந்தி இருப்பதையும் வீட்டு வேலைக்காரனுக்கு வயிறு 'நீளமா ஒட்டிக்கிட்டு' இருப்பதையும் பற்றிய கேள்வி எழுகிறது. ஊரெல்லாம் குழந்தை; வீட்டில் குழந்தையே இல்லையே என்ற அம்மாவின் ஏக்கம் ஆழமாகக் கேட்கிறது. ஊர்க்குழந்தைகள் ஆங்கிலத்தில் பறவைகளைப் போலத் தமிழ் பேசிக் கொண்டிருந்ததும் கேட்கிறது. குழந்தையற்ற வாழ்வு உயிரற்ற உடல் ஆயிற்று. 'நிரோத்' கழிவுகள் அதன் காரணத்தை உணர்த்தும். அத்துடன் 'காவல்காரன்' திரைப்படம், சிக்மகளூர் தேர்தல் பற்றிய எண்ணங்களும் வெளிவரும். முடிவாக வறுமை இந்த நாட்டின் 'அழுகை'யாக இருப்பதை வெளிப்படுத்தும்.

விலைவாசி ஏற்றம் குடும்பத்தை நடத்தத் தொல்லை என்பதை அவளால் உணர்த்திப் பிள்ளை பெறாத காரணத்தை நிறுவமுடியவில்லை. நாவின் இடையில், சமுதாயத்தில் மாறுதல் விரும்பாத 'காந்தியிசமும்' மாறுதல் விரும்பும் 'கம்யூனிசமும்' வெளிப்படுகின்றது. தனியார் கல்லூரியில் 'பணம் கொடுத்து' வேலை பெறும் அவலநிலை வெளிப்படுகிறது. லஞ்சம் வாங்குபவனே எவன் யோக்கியன் எனக் கேட்கும்படி வாழ்க்கை அமைந்துள்ளதைச் சுட்டிக்காட்டுகிறது. தொழிலாளி பக்கம் நிற்கச் சொல்லும்' கம்யூனிஸ்டுக் குரல் இடையே ஒலிக்கிறது.

எளிய போக்கிலே திருக்குறளுக்கு உரை எழுதும் போக்காக நாட்டின் பல போக்குகள் சடங்காக மாறியதைக் கோடிட்டுக் காட்டுகிறது. சோதனைக் குழாயில் குழந்தை பெறுவது போல 'சோதனை' வழியில் குழந்தை பெற்றுக் கொள்ள உரிமை கிடைக்கும் போக்கு 'அழுகை'யின் புதுக்குரலாகும்.

திட்டமிட்டக்குடும்பத்தைக் கூறும் அரசு திட்டமிட்ட பொருளாதாரத் திட்டம் ஏன் வகுக்கக் கூடாது என்ற கேள்வியை எழுப்புகிறது. அரிசனங்கள் குடிசைகளைத் தொட்டால் 'விழுப்புரம்' ஆகும் இன்றைய செய்தியையும் இணைக்கிறது. பொன்னகை விற்பனையுடன் எழுத்துச் சீர்திருத்தம் பற்றிய விவாதத்தின் கீழ் 'டெஸ்ட் டியுப் பேபி'யும் வந்துவிடுகிறது. இராமனின் அச்சம் 'தினத் தந்தி'க்கு அஞ்சிய அச்சமாகக் காட்டும்போது 'அழுகை'யின் காரணம் புரிகிறது. குழந்தையும் குழந்தைப்படமும் லவ குசர்களாக மாறும் நிலையில் அழுகையின் குரல் பொன்னாண்டசை அடைத்த சிறையில் இந்திராவை அடைத்ததற்காக ஒலிக்கிறது. 'பிள்ளைப் பேறு' பற்றிய கருத்து, புதிய அழுகையாக, நாவலாக அமைகிறது.

## அடிக்குறிப்புகள்


1. Bryce James, Modern Demacracies, Vol.I, P.88
2. Albert J., and others, Sociology, P.192
3. Rajendra Pandey, Sociology of Youth, P.48
4. த.ஜெயகாந்தன், ஒருமனிதன் ஒருவீடு ஒருஉலகம், ப.55
5. W.L.Warner, and P.S.Lunt, Social Life of a Modern Community, P.18.
6. த.ஜெயகாந்தன்
7. என்.எ.வேலாயுதம், இருவிழிகள், ப.480
8. Margaret B.Baily, Alcoholism and Marriage, Quarterly Journal of Studies on alcohol, Vol.22,P.80-94
9. த.ஜெயகாந்தன், சில நேரங்களில் சில மனிதர்கள், ப.308
10. ----------, ஒருமனிதன் ஒருவீடு ஒருஉலகம், ப.307
11. மேலது, ப.307-308
12. அகிலன், சத்திய ஆவேசம், ப.60
13. கோவி.மணிசேகரன், கோவியின் சிறுகதைகள், ப.64


*#####*

## 5. அரசியல்

### அரசியலில் ஆன்மீகமும், சத்தியமும்:

அரசியலில் ஆன்மீகமும், சத்தியமும் காணப்படுவது ஒரு அபூர்வமான செய்தியாயுள்ளது. இந்தியா சுதந்திரம் அடைந்த சிறிது காலம் வரை அரசியலில் சத்தியம் காணப்பட்டது. பிறகு பதவி ஆசை பிடித்த அரசியல்வாதிகளால் அரசியலில் சத்தியம் அழிக்கப்பட்டது. இந்திய அரசியலில் ஆன்மீகம் இரண்டறக் கலந்ததாகும். கடவுளை வணங்குபவர்கள், கடவுளுக்காகப் பற்பல நற்செயலைச் செய்பவர்கள் மக்கள் மத்தியில் நற்பெயரைச் சம்பாதிக்க இயலும். அரசியலில், குறிப்பாக தேர்தல் காலங்களில் ஆன்மீகத் தலைவர்கள் மடாதிபதிகள் போன்றவர்கள் கைகாட்டுபவர்களுக்கே மக்கள் பெருமளவில் வாக்களிப்பதும் உண்டு.

எனவேதான், எந்த அரசாங்கமும் தம்மை ஆன்மீகத்துக்கு எதிராக அடையாளம் காட்டிக் கொள்வது இல்லை. எந்த அரசியல் தலைவரும் தம்மை பெரும்பான்மையோரின் தலைவராகத்தான் அடையாளம் காட்டிக் கொள்ள விரும்புவரே தவிர ஆன்மீகத்தை அறவே வெறுக்கும் சிறு கூட்டத்திற்குத் தலைமை தாங்கவோ, அக்கொள்கைகளுக்கு ஆதரவளிக்கவோ விரும்பமாட்டார்.

ஆன்மீகம், சத்தியம் என்ற போர்வையில், நாட்டைக் கொள்ளையடிக்கும் மடாதிபதிகள் உண்டு. இவர்கள் மக்களைத் தவறான

வழியிலே அழைத்துச் செல்வர். இவர்களைப் போன்ற போலி மடாதிபதி-களையும், மக்களின் உழைப்பு, செல்வம் போன்றவற்றை உல்லாசமாக அனுபவிக்கும்அரசியல் முதலைகளையும் மக்கள் அடையாளங் கண்டுகொள்வர்.

இன்று இந்திய அரசியலில் அமைதி காக்கப்படவில்லை. எங்கும் குழப்பமும் கூச்சலும் மிகுந்துள்ளன. இதற்கு மீட்சி காண ஆன்மிக உணர்வுடன் சத்திய நெறி பேணுபவர்கள் அரசியலில் ஈடுபாடு கொள்ள வேண்டும் என்பதைப் புனைகதை வழி எழுத்தாளர்கள் வலியுறுத்துகின்றனர்.

அரசியலில் சத்தியம் தவறி நடப்பதை காந்தியடிகள் ஒப்புக்கொள்வதில்லை. 'சத்திய நெறியா? தேச விடுதலை என்ற லட்சிய நிறைவேற்றமா?' என்ற கேள்வி எழுமாயின் தேச விடுதலையைவிட - என் தேசத்தை விடவும் - சத்திய நெறிக்கே தான் முதலிடம் கொடுக்க முடியும் என்று காந்தியடிகள் நினைத்தார். அரசியலிலும் சத்திய நெறி உறுதியாகக் கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்பது காந்தியடிகளின் கொள்கை அகிலன், 'எங்கே போகிறோம்?' நாவலில் இக்கருத்தை வெளியிடுகிறார். அந்நாவலில் முதலமைச்சர், பொன்னையா பொதுப்பணித்துறையில் ஊழல் செய்து இலட்சக் கணக்கான ரூபாய்களைத் திருடிய இளைஞனை அரசியல் காரணங்களுக்காகத் தப்புவிக்க விரும்புகிறார். பொதுப்பணித்துறையில் மேலாளராக விளங்கிய இராமலிங்கத்திடம் அந்த இளைஞன்மேல் நடவடிக்கை எடுக்க வேண்டாம் என்று கூறுகிறார். 'சத்தியமா நடக்கணும்னுதான்' காந்தி சொன்னார். ஆனால் நல்லதும் நடக்கணும். நல்லதும் கெட்டதும்

எப்பவும்தான் இருக்கும். உங்களுக்கென்ன, அரசாங்க உத்தியோகம்; அஞ்சு வருஷத்துக்கொருதரம் வோட்டுப் பிச்சை கேட்க நானல்ல தெருத்தெருவாய் அலையணும்' என்று பொன்னையா ராமலிங்கத்திடம் கூறுகிறார். ஆனால் ராமலிங்கமோ, 'குடியரசுப்பயிர்' இங்கே வேரூன்றி வளர வேண்டுமானால் இதற்குச் சத்தியம் என்ற வேலி வேண்டும்" என்று தம் பதவியை விட்டு விலகி விடுகிறார்.[1] 'அந்தக் காலத்திலே ஏற்பட்ட சத்திய நெறி இன்னும் அவரை விட்டுப் போகலே' என்று ராமலிங்கத்தைப் பற்றிப் பொன்னையா கூறுகிறார்.[2] ராமலிங்கத்தின் மகன் சிதம்பரம், 'அரசியலுக்கும் அறநெறிக்கும் காந்தியடிகள் ஏற்படுத்தியிருந்த வலிமையான தொடர்பை நாடெங்கிலும் உள்ள பொன்னையாக்கள் இப்போது அறவே துண்டித்துவிட்டார்கள்[3] என்று வருந்திக் கூறுவதன் வாயிலாக அரசியலில் பதவியைக் கைப்பற்றுவதற்காகவும், சத்தியம் தவறி நடக்கும் அரசியல்வாதிகளின் பொய்மையை அதை எண்ணி வருந்தும் உண்மையான காந்தியவாதிகளின் சத்திய உணர்ச்சி உணர்வையும் அகிலன் 'எங்கே போகிறோம்?' நாவலில் புலப்படுத்துகின்றார்.

## பத்திரிகைகளும் சத்தியமும்:

அகிலன் 'எங்கே போகிறோம்?' நாவலில் பத்திரிகைத் துறையில் காணப்படும் சத்தியம் தவறிய நிலையைக் காட்டுகிறார். பத்திரிகை மிகுதியாக விற்கவேண்டும், பணம் பெருக வேண்டும் என்ற பேராசையால் மக்கள் ஒழுக்கத்தைச் சிதைக்கும் நிலையில் பத்திரிகைகள் வெளிவருவதை அவர் 'எங்கே போகிறோம்?' நாவலில் காட்டுகிறார். 'விடிவெள்ளி' இதழில்

துணையாசிரியர் பஞ்சு, பத்திரிகை உரிமையாளர் துரைசாமிக்குப் பண ஆசையை ஊட்டி இதழின் பதினாறு பக்கங்களைத் தம் பொறுப்பில் வெளியிடுவதற்கு ஏற்றுக்கொள்கிறார். அப்பக்கங்களில் அவர் கீழான உணர்வுகளைத் தூண்டும் படங்களையும், கதைகளையும் வெளியிடுகிறார், 'விடிவெள்ளி' இதழின் ஆசிரியராகச் சிதம்பரம் இருந்தும் அவனால் இதைத் தடுக்க முடியவில்லை. சியாமளா என்னும் நடிகையின் வரலாற்றினை வெளியிடுவதற்காக எழுத்தாளர் ரத்தினத்தின் தொடர்கதையை 'விடிவெள்ளி'யில் வெளியிட முடியாத நிலையைப் பஞ்சு உருவாக்குகிறார். அப்போது அங்கு வந்த ரத்தினம் "சத்தியம் சத்தியம்னு தலையாலே அடிச்சுகிட்டுச் செத்துப் போன காந்தி பிறந்த மண்ணிலே நீங்கள் எல்லாம் பத்திரிகையா நடத்துறீங்க பத்திரிகை? - சத்தியத்தை நீங்க சாகடிச்சிங்க, அப்புறம் இந்த நாட்டிலே இரத்தப் புரட்சிதான் வரும்"[4] என்று பஞ்சுவை எச்சரிக்கிறார். புவனாவும் இது போலப் பஞ்சுவிடம், 'மிஸ்டர் பஞ்சு, காந்தியின் உண்மைக்கு இங்கே கழுத்தில் கத்தி வைக்கப் பார்த்தீங்களா, கார்ல் மார்க்ஸின் உண்மை உங்கள் கழுத்தில் சுருக்குக் கயிறு போட்டுவிடும்'[5] என்று கூறுகிறாள். இக் கூற்றுக்களின் வாயிலாக அகிலன் பத்திரிகைகள் சத்தியத்தைப் புறக்கணித்தால் இந் நாட்டில் பெரும் புரட்சி நிகழும் என எச்சரிக்கிறார். 'விடிவெள்ளி' இதழில் பஞ்சுவுக்குக் கொடுத்த பக்கங்கள் போக எஞ்சியவற்றிலும் சத்தியத்தை எழுத முடியாத நிலை வந்தபோது சிதம்பரம் 'விடிவெள்ளி' பத்திரிகையாளர் பொறுப்பினின்று விலகி காந்திய இலட்சியங்களுடன் 'புதுவாழ்வு' என்னும் பத்திரிகையைத் தொடங்குகிறான்.[6]

அகிலன் நாவல்களில் அவர் சமூகத்தின் குறைகளைக் கடுமையாக விமர்சனம் செய்கிறார். உதாரணமாக "எங்கே போகிறோம்?" என்ற அவருடைய நாவல் இந்தத் தன்மையைப் பெற்றுள்ளது. இதன் கதாநாயகி புவனா ஒரு பழிவாங்கும் தன்மையுள்ள வேசி. வரதட்சணைக் கொடுமையால் அவளுடைய உறவுக்காரனிடமே அவள் பெண்மையைப் பறி-கொடுக்கிறாள். திட்டமிட்ட முறையில் பெரும் பணக்காரர்களுடன் உடல் உறவு கொள்கிறாள். இந்தக் கதாநாயகி மூலம் நிகழ்காலச் சமூகக் குறைகளைச் சாடுகிறார். 'அவளை வேண்டுமென்றே படைத்தேன்' என்று கூறுகிறார்.

> "வேசித்தனத்தால் தன் உடலை மூலதனமாக்கிப் பொருள் குவிக்கும் நிலைக்குத் தள்ளப்பட்ட ஒரு பெண்ணை வேண்டும் என்றே நான் இக்கதைக்குத் தலைவியாக்கிக் கொண்டேன்"[7]

என்று இந்தக் கதாநாயகி மூலம் இன்றைய சமூகக் குறைகளை வெளிப்படுத்துகிறார்.

> "சுதந்திரத்திற்காகப் போராடிய உங்கள் காந்தி 'தர்மகர்த்தா முறை' என்ற ஒன்றை நம்பினார். இந்த நாட்டுத் தர்மகர்த்தாக்கள் போடும் கும்மா-ளத்தை நீங்கள் ஓட்டல்களிலும், பங்களாக்களிலும் பார்த்தால் புரிந்து கொள்வீர்கள். பிராந்திப் புட்டிகளும், இளம் குட்டிகளும், நோட்டுக் கற்றை களும் இருந்தால் இங்கே பாதிப்பேரை விலைக்கு வாங்கிவிடலாம்"[8]

பொன்னையா என்ற ஒரு போலி அரசியல்வாதியைப் படைத்துக் காட்டுகிறார் அகிலன்.

"கூட்டம் கூட்டுவதற்குப் பொன்னையாவுக்குக் காந்தியின் பெயர் மந்திரச் சொல் போலக் கை கொடுத்தது. அதுபோதாதென்று தேர்தலுக்கு முன்பாகச் சென்னையை அடுத்த ஆவடியில் ஒரு பெரிய மகாநாடு நடத்திச் சமதர்மத் தீர்மானம் போட்டிருந்தார்கள்... பிரச்சாரத்திற்கு ஒரு பக்கத்தில் காந்தியின் பெயரும் மறுபக்கத்தில் சமதர்மத் தீர்மானமும் இருந்தன என்றால் நடைமுறை வெற்றிக்குப் பெரும் நிலப் பிரபுக்களும், கள்ளப்பணப்புள்ளிகளும், தங்கள் பண மூட்டைகளைக் கொண்டு வந்து பொன்னையாவின் காலடியில் கொட்டத் தொடங்கி விட்டார்கள் . காந்தி, கள்ளப்பணம், சாதி சமதர்மம், ஜமீன்தார் கூட்டம் – இப்படி ஒரு அவியல் அரசியலை உருவாக்கி விட்டார் பொன்னையா"[9]

அறிவாற்றலின் அலங்கோலம் என்ற அதிகாரத்தில் லட்சியம் எதுவும் அற்ற எழுத்தாளர் கூட்டத்தை ஆசிரியர் கேலி செய்கிறார்.

அகிலன், விடுதலை பெற்ற பின்பு வளர்ந்துள்ள தமிழ்ச்சமூகத்தைக் கண்டு இலக்கியம் படைக்கிறார். பொருளாதார நிர்மாணத்தில் ஓரளவிற்கு

முன்னேற்றம் கண்டுள்ள சமூகத்தைப் பற்றிய இலக்கியம் படைப்பவர் அகிலன். நமது பொருளாதார நிர்மாணத் திட்டங்களின் தோல்வி அதனால் ஏற்பட்ட சமூக நெருக்கடி, கலாச்சார வீழ்ச்சி, ஆகியவைவற்றைக் கண்டு மனம் குமுறிப்பல சிறுகதைகளையும் நாவல்களையும் எழுதியுள்ளார். நமது சமூக நெருக்கடிக்குத் தீர்வாக அவர் காந்தீயத்தை முன் வைக்கிறார். இலக்கியத்திலும் அவர் காந்தீய யதார்த்தவாதம் வேண்டும் என்று கூறுகிறார். அவர் மேலும் கூறுகிறார்:

"ஆன்மாவின் வெளிப்பாடுதான் கலை, சத்தியத்தில் அழகைத் தேடிப்பார். புறக்கண்களுக்குச் சத்தியத்தின் உருவம் அழகில்லாதது போல் தோன்றினாலும் அகக் கண்களால் அதன் அழகைத் தேடிச் செல் என்று காந்தியடிகள் இந்த மண்ணில் விளைந்த ஓர் கலை இலக்கியக் கொள்கையை இந்த நாட்டுக் கலைஞர்களுக்குச் சுட்டி விட்டுச் சென்றிருக்கிறார். அதைத்தான் இந்த நாவலில் நான் பரிசோதனை செய்து பார்க்க முயன்றிருக்கிறேன். என்னைப் பொறுத்த வரை காந்தீய இலக்கிய கொள்கையை வெளிப்படுத்த முனைந்துள்ள தமிழ் நாட்டின் முதற் பரிசோதனை நாவல் இது"[10]

நமது குறைபாடுகள் எல்லாவற்றிற்கும் காரணம் நமது மக்கள் காந்தீயப் பாதையை விட்டு விலகியது தான் என்று அவர் வலியுறுத்துகிறார். இதற்கு விளக்கம் தரும் நாவலாக அமைந்துள்ளது அவருடைய "எங்கே போகிறோம்?"

"புதுவெள்ளம்" ஆகியவை. இந்த நாவல்களில் காந்தீயம் நம் சமூகத்தில் தோன்றியுள்ள நோய்க்கு மருந்தாக அளிக்கப்படுகிறது. இதே நாவல்களில் காந்தீயம் உறுதியாக இங்கு இடம் பெறாவிட்டால், கம்யூனிசம் வந்துவிடும் என்ற எச்சரிக்கையும் இடம் பெறுகிறது.

நா.பார்த்தசாரதி தம், 'சத்திய வெள்ளம்' நாவலில் இன்றைய அரசியல்வாதிகளிடம் கடவுள் நம்பிக்கையும் சமய உணர்வும் இல்லாமலிருப்பதைக் கதை மாந்தர்களின் உரையாடல் வாயிலாக விளக்கு-கிறார். 'இன்னைக்கு நம்ம நாட்டிலே உள்ள குறையே இதுதான். காந்தியும், திலகரும் சுதந்திரப் போராட்டத்திலே இறங்கிய காலத்திலே இருந்த தேசபக்தி 'ஸ்பிரிச்சுவல் நேஷனலிசம்'தான் என்றும், இப்ப இருக்கிற தேச பக்தியோ 'வெறும் மெட்டீரியலிஸ்டிக் நேஷனலிசம்'தான் என்றும் மாணவர் தலைவர் மணவாளன் இந்நாவலில் கூறுகிறார். மணவாளனுக்கு விடைபிறக்கும் முகமாக அண்ணாச்சி என்னும் கதை மாந்தர், 'எங்க நாளிலே தேசபக்தியும் தெய்வ பக்தியும் உள்ளங்கையும், புறங்கையும் மாதிரிப் பிரிக்க முடியாம இருந்திச்சு. இப்ப இருக்கிற அரசியல்லேயும், பொது வாழ்விலேயும் அந்தரங்க சுத்தி இல்லாமல் போனதுக்குக் காரணமே இந்தத் தலைமுறை அரசியல்வாதிகளிடம் இந்தியாவின் அடிப்படையான ஆன்மீக குணங்கள் ஒரு சிறிதும் இல்லாததுன்னுதான் எனக்குத் தோணுது'[11] என்று கூறுகிறார். அரசியல்வாதிகளுக்குக் கடவுள் நம்பிக்கை என்னும் ஆன்மீக உணர்வு இருந்தால்தான் அவர்கள் பொது வாழ்வில் உண்மையைக் கடைப்-பிடிப்பவர்களாக விளங்க முடியும். 'தேச பக்தியும், தெய்வ பக்தியும்

அகத்தையும், புறத்தையும் போல அமைய வேண்டும், என்ற கூறுவதன் வாயிலாக காந்தியடிகள் சத்தியக் கொள்கைக்குக் கூறும் முதல் விளக்கமாகிய 'கடவுளிடம் நம்பிக்கை வைத்தல்' என்னும் கருத்தை நா.பார்த்தசாரதி 'சத்தியவெள்ளம்' நாவலில் விளக்குகிறார்.

சத்தியம் வென்றது:

காரல் மார்க்சின் அரசியல் உலக ஆதாயத்தை அடிப்படையாகக் கொண்டது. காந்தியடிகளின் அரசியல் ஆன்மீகத்தை அடிப்படையாகக் கொண்டது. மணவாளனது உரையாடலில் காந்தியத்திற்கும் பிற அரசியல் கொள்கைகளுக்கும் உள்ள வேறுபாட்டை 'ஸ்பிரிச்சுவல் ரேஷனலிசம்', 'மெட்டீரியலிஸ்டிக் ரேஷனலிசம்', என்ற தொடர்களைப் பயன்படுத்தி நா.பார்த்தசாரதி விளக்குகிறார். காந்தியடிகளின் அரசியல் கொள்கை ஆன்மீகத்தையும் கடவுள் நம்பிக்கையையும் குறிக்கும் சத்தியத்தை அடிப்படையாகக் கொண்டது என்பதைச் 'சத்திய வெள்ளம்' நாவல் விளக்குகிறது.

நா.பார்த்தசாரதி 'சத்திய வெள்ளம்' நாவலில் ஆளும் கட்சியினரின் பொய்மையை எதிர்த்துக் காந்திய உணர்வுடைய மாணவர்கள் சத்திய வெள்ளமாகப் பெருகுவதைக் காட்டுகிறார். மேரி தங்கம் என்னும் மாணவியின் தற்கொலைக்குக் காரணமான மதனகோபால் என்னும் விரிவுரையாளர் ஆளும் கட்சிக்கு வேண்டியவர். ஆகவே அவரைக் காப்பாற்ற ஆளும் கட்சி முயல்கிறது. மாணவர்கள் இவற்றை எதிர்க்கின்றனர்.

ஆளும் கட்சியினர் தேசிய உணர்வுடைய மாணவர்கள் நடத்தும் மாநாட்டுப் பந்தலுக்குத் தீ வைக்கின்றனர். கரியமாணிக்கம் என்ற அமைச்சர் டாக்டர் பட்டம் பெற முயலும்போது மாணவர்கள் அதை எதிர்க்கின்றனர். அந்த மோதலில் அண்ணாச்சி கொல்லப்படுகிறார். அவரது இழப்பை எண்ணி வருந்தும் மாணவர்களிடம் மாணவர் தலைவர் மணவாளர், "இந்த நாட்டின் எல்லாவிதமான அழுக்குகளையும் கரைத்து அரித்துக் கொண்டு போகும் பரிசுத்தமான சத்திய வெள்ளமாக இளைஞர்கள் பெருக வேண்டும். அந்தச் சத்தியப் பிரவாகத்தில்தான் இங்குள்ள எல்லாக் குறைகளும் தீரும்' என்ற சத்தியக் கொள்கையை வலியுறுத்திப் பேசுகிறார்.[12] அரசியலில் நிகழும் பொய்மைகளையும் அவற்றை எதிர்க்கும் மாணவர்களின் சத்திய உணர்வையும் விளக்கும் வகையில் இந்த நாவலில் சத்தியக் கொள்கையின் தாக்கம் அமைந்துள்ளது.

அகிம்சை:

நா.பார்த்தசாரதியின் 'சத்திய வெள்ளம்' நாவலில் கதிரேசன் என்னும் இளைஞன் புரட்சி மனப்பான்மை கொண்ட பிச்சைமுத்துவுடன் சேர்ந்து ஒரு தோட்ட முதலாளியைக் கொலை செய்து தண்டனை பெற்று அதனால் வீணே அழிவதைக் காட்டுகிறார். இதைக் காட்டுவதன் வாயிலாகச் சத்தியத்தைக் காக்க மேற்கொள்ளும் வழி அகிம்சை வாயிலாக இருக்க வேண்டும் என்பதை ஆசிரியர் புலப்படுத்துகிறார்.[13] கதிரேசனுடைய செயலைப் பற்றிக் குறிப்பிடும்போது பாண்டியன் 'நம்முடைய சமூக

நியாயங்களைக் காப்பாற்றும் முறைகளும் நியாயமானவையாக இருக்க வேண்டியது மிக மிக அவசியம். முறைகேடான வழியில் போய் முறைகளைக் காப்பாற்ற முடியாது என்கிறார் காந்தி' என்று கூறுகிறான்.[14] வன்முறை வழியை "முறைகேடான வழி" என்று குறிப்பிடுவதன் வாயிலாக அகிம்சையே குறிக்கோளை அடையும் வழியாக அமையவேண்டும் என்பதையும் நாவலாசிரியர் உணர்த்துகிறார். கதிரேசனுக்கு ஆயுள் தண்டனை விதிக்கப்பட்டதைப் பற்றி மாணவர்கள் பேசும்போது 'இங்கேதான் இலட்சியத்தை அடையும் மார்க்கத்தைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியிருக்கிறது' எனப் பாண்டியன், தீமைகளை எதிர்த்துவிட்டுத் தீயவர்களை நம் வழிக்கு மாற்ற நினைக்கிறோம் நாம். அவர்களோ தீமைகளையும் தீயவர்களையும் சேர்த்தே அழித்துவிட நினைக்கிறார்கள் என்று கூறுகிறான்.[16] தீயவர்களின் மனமாற்றத்தை விரும்பும் அகிம்சை வழியே குறிக்கோளை அடையச் சிறந்த வழி என்பதைக் கதிரேசன் வன்முறை வழியைப் பின்பற்றி ஆயுள் தண்டனை பெறுவதைக் காட்டுவதன் வாயிலாக நாவலாசிரியர் உணர்த்துகிறார்.

உண்ணாவிரதம்:

'சத்திய வெள்ளம்' நாவலில் நா.பார்த்தசாரதி ஆளும் கட்சியினரின் பொய்மையை எதிர்த்துப் போராடும் மல்லிகைப் பந்தல் பல்கலைக் கழக மாணவர்கள் சத்தியாக்கிரகக் கொள்கையைக் கடைப்பிடித்து வெற்றி பெறுவதைக் காட்டுகிறார். மேரிதங்கம் என்னும் மாணவியின்

தற்கொலைக்குக் காரணமான விரிவுரையாளர் ஆளும் கட்சியைச் சேர்ந்தவர். எனவே அரசினரும் காவலரும் அவ்வுண்மைக் காரணத்தை மறைக்க முயல்கின்றனர். எனவே மேரிதங்கத்தின் தற்கொலைக்கான காரணத்தை மறைப்பதற்கு ஆளும் கட்சியினர் முயலும்போது பல்கலைக் கழக மாணவ மாணவியர் உண்ணாவிரதம் மேற்கொள்கின்றனர்.[17] ஆனால் பாண்டியன் போன்ற மாணவர்கள் மீது பொய் வழக்கு போடுகின்றனர். பல்கலைக் கழக மாணவர்கள் மேற்கொண்ட உண்ணாவிரதம், ஊர்வலம் ஆகியவை தமிழகத்தில் பிற கல்லூரி மாணவர்களிடை-யேயும் கிளர்ச்சியைத் தூண்டியதால் கல்வி அமைச்சர் மல்லிகைப்பந்தலுக்கு வருகிறார். மாணவர்கள் அவருக்குச் சத்தியாக்கிரக வழியில் கறுப்புக்கொடி காட்டி எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர். மாணவர்கள் மேற்கொண்ட சத்தியாக்-கிரக இயக்கங்களின் காரணமாக மேரிதங்கத்தின் தற்கொலைக்குக் காரணமான விரிவுரையாளர் வேலையில் இருந்து நீக்கப்படுகிறார். அரசினர் பொய் வழக்கிலிருந்து மாணவர்களை விடுவிக்கின்றனர்.[18] உண்ணாவிரதம் போன்ற சத்தியாக்கிரக முறைகள் இன்றைய சூழலிலும் பயன்படும் ஆற்றல் வாய்ந்தனவாக விளங்குவதை இந் நிகழ்ச்சி உணர்த்துகிறது.

சத்தியாக்கிரகத்தின் ஆற்றலைக் 'கற்சுவர்கள்' நாவலில் நா.பார்த்தசாரதி விளக்குகிறார். சீமநாதபுரம் அரண்மனையில் உள்ள கலைப் பொருட்களை அந்நிய நாட்டுக்கு அனுப்பிப் பெரும் பொருள் திரட்டுவதற்காகச் சாமிநாதன் என்ற வணிகர் அவற்றை விலைக்கு வாங்க முயற்சிக்கிறார். இளையராஜா பூபதி ஊர் மக்களின் துணையுடன் சத்தியாக்கிரக முறையில் மறியல் செய்து, அப்பொருட்கள் அரண்மனையிலிருந்து

வெளியேற்றப்படுவதைத் தடுத்து விடுகிறான். மறியல் ஆறுமாதம் தொடர்ந்து நீடிக்கிறது. இறுதியில் அரசாங்கம் ஏலக்காரர்களுக்கு நியாயமான நட்ட ஈடு கொடுத்துவிட்டு கலைப் பொருட்களைத் தன் பொறுப்பின்கீழ் ஏற்று அவ்வூரிலேயே காட்சிச் சாலை அமைக்கிறது. இவ்வாறு சத்தியாக்கிரக முறையால், இந்தியப் பண்பாட்டை விளக்கும் கலைச்சின்னங்கள் அயல்நாடுகளுக்குக் கடத்தப்படாமல் பூபதியும் ஊர் மக்களும் தடுத்து அவற்றைக்காப்பாற்றுகின்றனர்.[19] சமுதாயத் தீமைகளைத் தடுப்பதற்குத் துணைபுரியும் வகையில் சத்தியாக்கிரகம் ஆற்றல் வாய்ந்ததாக இருப்பதை இந் நிகழ்ச்சியின் வாயிலாக நாவலாசிரியர் காட்டுகிறார். இறுதியில் சத்தியாக்கிரகம் வெற்றியே பெறும் என்பதை அவர் எடுத்துக் காட்டுகிறார்.

## பொய்மையை சுட்டிக்காட்டும் முறை:

'திருடர்கள்' நாவலில் ர.சு.நல்லபெருமாள், உலகத்தில் பெரிய மனிதர்கள் என்னும் வேடமிட்டு உலவி வருகின்ற, சத்தியம் தவறி நடக்கின்ற திருடர்களைக் காட்டுகின்றார். புரட்சிக் கட்சியைச் சேர்ந்த வழக்கறிஞர் கருணாகரன், அரசியலில் தமக்கு எதிரான காந்தியவாதி ரகுபதி நாயுடுவைப் பழிவாங்க, ரகுபதி நாயுடுவின் மகன் ஒரு பெண்ணைக் கற்பழித்ததாகப் பொய் வழக்குத் தொடுக்கிறார். அரசு ஊழியர்கட்குப் பொய்யாக மருத்துவப் பற்றுச் சீட்டுகள் வழங்கும் மருத்துவரை அவ்வழக்கில் கருணாகரன் பொய்சாட்சி சொல்ல வைக்கிறார். கருணாகரன் ஆலைத் தொழிலாளிகளை வேலை நிறுத்தம் செய்யத் தூண்டி அதை நிறுத்துவதற்காக

ஆலை முதலாளியிடம் பணம் பெற்று விடுகிறார். சட்டசபை உறுப்பினர் தேன்மொழியன் லஞ்சம் வாங்கி வீடு கட்டுகிறார். 'நவரசம்' பத்திரிகை ஆசிரியர் சந்தானம் பெண்களின் கதைகளை வெளியிடுவதாக ஆசை காட்டிப் பெண்களைக் கற்பழிக்கிறார். இவ்வாறு கருணாகரன், தேன்மொழியன், சந்தானம் ஆகியோர் பெரிய மனிதர் வேடத்தில் திருடர்களாக இருக்கின்றனர்.[20] பொய்மையை மட்டுமே சித்திரித்துக் காட்டுவதன் வாயிலாகச் சத்திய உணர்வைப் படிப்பவர்களிடம் ஏற்படுத்தும் முறையில் இந்நாவல் அமைகிறது.

'புயலின் மையம்' என்னும் நாவலில் ராஜம் கிருஷ்ணன் அரசியலில் சமய உணர்வு அடிப்படையாக அமைய வேண்டும் என்னும் கருத்தை வேறுவகையில் விளக்குகிறார். கடவுள் நம்பிக்கையற்ற அரசியல் இயக்கத்தில் சேர்ந்த ஒரு மனிதனது அழிவைச் சித்தரிக்கிறது. 'புயலின் மையம்' நாவலின் கதைத் தலைவன் ராஜகோபாலன். கம்யூனிசக் கொள்கையைப் பின்பற்றும் அரசியல்வாதி. அவன் அறிவுவாதிகளின் சித்தாந்தங்களைக் கரைத்துக் குடித்துவிட்டு மனிதனுக்கு மிஞ்சி வேறு ஒரு மண்ணும் உயர்வாகக் கிடையாது என்று வாதிடும் கடவுள் நம்பிக்கையற்றவன்.[21] ராஜகோபாலன் கோவா தனிமைச் சிறையில் அடைக்கப்படுகிறான். சிறைக் கொடுமைகளால் அவன் மூளைச் சலவைக்கு ஆளாகி உணர்வு மழுங்கிப் போகிறான். தன்னுடைய தாய், தன்னுடைய மனைவி ஆகியோரை அடையாளம் கண்டுணர முடியாதவனாகப் புலன்களின் ஆற்றல் இழந்து போகிறான். அவனுடைய இந்த நிலையை வருணிக்கும் நாவலாசிரியர், 'ஈரமற்ற அறிவுவாதத்தின் முடிவா இது? சுருதி என்ற

ஆதாரம் தேவையில்லை என்ற மறுத்தவனின் இசைக்கு நேர்ந்த முடிவா இது?' என்று அவனது நண்பன் வாயிலாக வினா எழுப்புகிறார், ராஜம் கிருஷ்ணன். இத் தொடரில் 'சுருதி' கடவுள் நம்பிக்கையையும் 'இசை' மனித வாழ்க்கையையும் குறிப்பதாக அமைகின்றன.

ஒரு மனிதனிடம் பிறரால் அழிக்க முடியாமல் இருப்பது கடவுள் உணர்வு. ஆகவே அதை அடிப்படையாகக் கொண்டிருந்தால் பிற உணர்வுகளையும் யாராலும் அழிக்க முடியாது. கடவுள் நம்பிக்கை என்ற அடிப்படையின்றி அமைந்த பிற உணர்வுகளை எளிதில் அழித்துவிட முடியும் என்னும் உண்மையை ராஜகோபாலனின் வாழ்க்கை வாயிலாகப் 'புயலின் மையம்' நாவலில் ராஜம் கிருஷ்ணன் உணர்த்துகிறார்.

கடவுள் நம்பிக்கையை அடிப்படையாகக் கொள்ளாத அரசியலில் ஈடுபட்ட ராஜகோபாலன், தனக்கு ஏற்பட்ட துன்பங்களைத் தாங்கிக் கொள்ளும் ஆற்றலின்றிப் புலனழிந்து போகிறான். ஆகவே ஆன்மீக உணர்வை அடிப்படையாகக் கொண்ட அரசியலில்தான் மனிதன் எதிர்ப்புகளிடையேயும் மனிதன் தன்னைக் காத்துக் கொள்ள முடியும் என்னும் உண்மை ராஜகோபாலனின் வாழ்க்கை உணர்த்தும் செய்தியாக அமைகிறது. இரஷ்ய நாவலாசிரியர் தாஸ்தாவெஸ்கியின் 'கார்மசோவ் சகோதரர்கள்' நாவலின் செய்தி பற்றிப் பீட்டர் ஜோன்ஸ் கூறும் கருத்து இங்கு ஒப்பு நோக்கத் தக்கது. மனிதன் கடவுளிடமும் அழியாத சத்தியத்திடமும் நம்பிக்கை கொள்ளாவிட்டால் தன்னைத் தானே காத்துக்கொள்ள முடியாது என்பதே 'கார்மசோவ் சகோதரர்கள்' நாவல் வழங்கும் செய்தி.

அகிம்சையின் உணர்வு:

இன்றைய அரசியல், சமுதாய வாழ்வில் காணப்படும் அனைத்துத் தீய செய்கைகளுக்கும் அகிம்சையினைக் கடைப்பிடித்து வழி காண முடியும். இது எடுத்துக் காட்டுகள் மூலம் உணர்த்தப்படுகிறது.

'போராட்டங்கள்' நாவலில் ர.சு.நல்லபெருமாள் வன்முறை வழியைப் பின்பற்றுவோரால் அடுத்தடுத்து நிகழும் கொலைகளைக் காட்டுவதன் வாயிலாக அகிம்சையே இலட்சியத்தை அடையும் வழியாக அமைய வேண்டும் என்னும் கருத்தை விளக்குகிறார். புரட்சிக் கட்சித் தலைவர் வேதமூர்த்தி "ஒரு செயலில் தீவிரமாக இறங்கிவிட்ட பிறகு அங்கு தர்மத்தையோ நியாயத்தையோ எண்ணிப் பார்த்துக் கொண்டிருக்கத் தேவையில்லை. லட்சியத்தின் படிகள் ஒவ்வொன்றிலும் தலைவன் ஏறும்போது பலாத்காரத்தையோ பயங்கரத்தையோ துணை கொள்ள வேண்டியிருப்பதால் தயங்கவே கூடாது" என்று சிவராமனிடம் கூறுகிறார். அவரது கட்சியின் சித்தாந்தப்படி அடையும் முடிவுதான் முக்கியமே தவிர மேற்கொள்ளும் வழி நியாயமானதாக இருக்க வேண்டும் என்ற கவலை இல்லை. வேதமூர்த்தியின் கருத்துக்கு மாறுபடும் சுப்பாரெட்டி, குருனாம்சிங், சிவராமன் ஆகியோர் புரட்சிக் கட்சியினரால் கொலை செய்யும் முயற்சி நடைபெறுகிறது. வேதமூர்த்தியும் தண்டபாணியும் அவர்கள் செய்த கொலைகளுக்காக தூக்குத் தண்டனை பெற்று உயிரிழக்கிறார்கள்.[24] மக்களை வாழ்விக்கும் நெறியாக இல்லாமல் அழிக்கும் வழியாகவே வன்முறை வழி விளங்குவதையும், குறிக்கோளை அடைய முடியாமல் எல்லோருமே அழிவதையும் காட்டுவதன் வாயிலாகக்

குறிக்கோள் உயர்ந்ததாக இருந்தால் மட்டும் போதாது, அதை அடைய மேற்கொள்ளும் வழியும் உயர்வானதாக அகிம்சையாக இருக்க வேண்டும் என்பதையும் ர.சு.நல்லபெருமாள் விளக்குகிறார்.

1972இல் செயப்பிரகாசர் முன்னிலையில் நானூறுக்கும் மேற்பட்ட சம்பல் கொள்ளைக்காரர்கள் சரணடைந்தனர். செளரா என்னும் இடத்திலுள்ள காந்தி ஆசிரமத்தில் கொள்ளையர்கள் சரணடைந்த நிகழ்ச்சி விழாவாகக் கொண்டாடப்பட்டது. சாந்திசேனைப் பெண்கள் கொள்ளையர் கரங்களில் 'ராகிக்' கயிறுகளைக் கட்டினர். "சரணடையும் பாகிகள் (கொள்ளையர்) இந்தியாவெங்கும் பரவியிருக்கும் சர்வோதயக் குடும்பத்தின் உறுப்பினர்கள் ஆகிறார்கள்" எனச் செயப்பிரகாசர் அறிவித்தார். சம்பல் கொள்ளைக்காரர்கள் அகிம்சையால் மனந்திருந்தி செயப்பிரகாசர் முன்னிலையில் சரணடைந்த நிகழ்ச்சியை அடிப்படையாகக் கொண்டு ராஜம் கிருஷ்ணன் 'முள்ளும் மலர்ந்தது' என்னும் நாவலை எழுதியுள்ளார்.

காவலருடன் ஏற்பட்ட மோதலில் காயமுற்ற கொள்ளைக்காரன் இந்தர்சிங், புகைவண்டியில் பயணம் செய்யும் சிவானந்தத்தால் காப்பாற்றப்படுகிறார். சிவானந்தன் இந்தர்சிங்கின் காயத்திலிருந்து துப்பாக்கிக் குண்டை எடுத்துவிட்டு மருந்து வைத்துக் கட்டுகிறான்.[25] சிவானந்தத்தின் மனைவி காயத்திரி இந்தர்சிங்கை இறைவன் அளித்த 'மகாப்பிரசாத்' ஆக ஏற்கிறாள். காவலர் வந்து தேடும்பொழுது சிவானந்தன் இந்தர்சிங்கைக் காட்டிக்கொடுக்கவில்லை. சிவானந்தன்,

காயத்திரி ஆகியோர் காட்டும் அன்பும் அகிம்சையும் இந்தர்சிங்கின் மனத்தை மாற்றிவிடுகின்றன.[26] இந்தர்சிங் தூயவனாகிவிடுகின்றான். கொலையையும், கொள்ளையையும் அவன் அறவே விட்டொழிக்கிறான்.[27]

நாவலின் இறுதியில் சௌராவில் உள்ள காந்தி ஆசிரமத்தில் செயப்பிரகாசர் முன்னிலையில் தேவிசரன் தன்குழுவோடு சரணடையும் நிகழ்ச்சியை நாவலாசிரியர் காட்டுகிறார். மேடையில் இருக்கும் காந்தி அடிகள் படத்தின் முன் பணிந்து எழுந்த தேவிசரன், "நாங்கள் தீய வழியில் சென்றோம். அதற்காக என் உளமார வருந்துகின்றேன். எத்தனையோ ஏழை எளியவரும் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் என்னால் துன்பமுற்றிருக்கின்றனர். என்னுடைய கொடிய செயல்களுக்காக அவர்களிடம் நான் மன்னிப்பை வேண்டுகிறேன். என்னை நல்வழியில் நடத்திச் செல்ல இனியும் தேவிபகவான் உறுதி கொடுக்கவேண்டும். சமுதாயம் எங்களை அங்கீகரிக்க வேண்டும்" என்று வேண்டுகிறான்.[28] அகிம்சை கொள்ளையர்கள் மனத்தை எந்த அளவு மாற்றியிருக்கிறது என்பதை இக்கூற்றின் வாயிலாக நாவலாசிரியர் உணர்த்துகிறார்.

மனிதன் மிருகமாக இருக்கும்பொழுது வன்முறையாளனாக இருக்கிறான். தன் ஆன்மாவை உணரும்பொழுது அகிம்சையாளனாகிறான். அவனுடைய உள்ளிருக்கும் ஆன்மாவை மனிதன் உணர்ந்து கொண்ட பொழுதிலேயே அவன் விழித்துக் கொள்கிறான்.

அவன் தொடர்ந்து வன்முறையாளனாக இருக்கமாட்டான். அகிம்சையை நோக்கி முன்னேறுகிறான்' என்று அகிம்சை மனித உள்ளத்தில்

விளைவிக்கும் மாற்றம் 'முள்ளும் மலர்ந்தது' என்னும் நாவலில் அமைந்துள்ளது. அகிம்சையால் இந்தர்சிங் உள்ளிருக்கும் ஆன்ம உணர்வு விழித்துக்கொள்ள அவன் அகிம்சையை நோக்கி முன்னேறுகிறான். கொள்ளையர்களுடன் அவன் சரணடைந்து சமுதாய அங்கீகாரத்தை வேண்டுகிறான். சம்பல் கொள்ளையர்கள் அகிம்சையின் ஆற்றலால் மனமாற்றம் பெற்றமையை 'முள்ளும் மலர்ந்தது' நாவல் விளக்குகிறது.

'வேருக்கு நீர்' நாவலில் இடம்பெறும் சுதீர் கம்யூனிசக் கட்சியைச் சார்ந்தவன். அவனும் அவனது நண்பர்களும் புரட்சி நடவடிக்கைகளில் ஈடுபடுகின்றனர்.

'அஹிம்சை கோழையின் போர்வை!
வோட்டு முறையால் நாட்டு வாட்டம் தீராது
வேட்டு முறையால் அது தீரும்
காந்தியப் பிதற்றல் பிற்போக்குத்தனம்
இந்தியாவின் தலைவிதியை மாற்றி வைக்கப்
புரட்சி செய்வோம்!

என ஐந்து விரல்களையும் இரத்தத்தில் தோய்த்து முத்திரையிட்ட துண்டுப் பிரசுரங்களை அவர்கள் வெளியிடுகின்றனர்.[29] வன்முறையில் நம்பிக்கை கொண்ட சுதீரின் மனத்தை மாற்ற யமுனா முயற்சி செய்கிறாள். 'இரத்த வெறிக்கு ஒன்றுமறியாத மக்களைத் தூண்டிவிடுவதால் உங்களுடைய சித்தாந்தம் நிறைவேறிவிடுமா? உலகம் தோன்றிய நாளிலிருந்து எவரும்வன்முறையில் சாந்தியும் இன்பமும் காணலாம் என்று கூறியிருக்கவில்லை. அது அன்பு

நெறியாலும், கொல்லாமையினாலும்தான் வளர முடியும். புரட்சி செய்ய வேண்டும். ஊருராம்ப் படைதிரண்டு போம் மக்களின் மனங்களில் அன்பு நெறியை வளர்க்கப் பாடுபடுவோம். அந்தப் படையின் முன்னிலையில் நிற்க நான் இருக்கிறேன். இது வேண்டாம்' என்று சந்திரிடம் யமுனா கெஞ்சுகிறாள்.[30]

'அஹிம்சையைப் பின்பற்றுவதால்தான் இந்தச் சமுதாயம் இன்னும் புதுமை அழியாமல் நிலைத்திருக்கிறது.[31] அஹிம்சை, வன்முறை உணர்வு உடையோரிடையே கருத்து மோதல் ஏற்படுவதைக் கதைமாந்தர்களின் உரையாடல் வாயிலாக ராஜம் கிருஷ்ணன் விளக்குகிறார்.

அஹிம்சையினால் மட்டுமே ஆற்றல் வாய்ந்த முறையில் வன்முறையை எதிர்கொள்ளமுடியும். இது மிகப் பழைய உண்மையாகும். என்றும் வன்முறையை மாற்றுவதற்கு அகிம்சை உணர்வைப் பரப்புவதும் அதைப் பின்பற்றுவதுமே வழி எனக் கூறுகிறார். நாட்டில் பரவியுள்ள வன்முறை உணர்வுகளுக்கு எதிராக அகிம்சை வழியினர் ஊர்வலம் மேற்கொள்வதை ராஜம் கிருஷ்ணன் காட்டுகிறார்.

'வேருக்கு நீர்' என்னும் இந்நாவலின் தலைப்பே அகிம்சைக் கொள்கையைக் குறிப்பாகச் சுட்டுவதாக அமைகிறது. நாம் பொய்மையில் இருந்து உண்மையை நோக்கியும், இருளில் இருந்து விடுபட்டு ஒளியை நோக்கியும் பயணம் செய்கிறோம். சத்தியமே நமது குறிக்கோளின் வேராக அமைகிறது. நீங்கள் அகிம்சை என்ற நீரைச் சத்திய வேரில்

ஊற்றாவிட்டால் சத்தியப் பயிர் வளராது" எனும் இக்கூற்றில் சத்தியம் வேராகவும் அகிம்சை சத்திய வேரில் ஊற்றப்படும் நீராகவும் குறிப்பிடப் படுகிறது. உலகில் பொய்மையை அழித்துச் சத்தியத்தைக் காக்க வேண்டுமெனில் சத்திய வேருக்கு நீராகும் அகிம்சையை இளைஞர்கள் பின்பற்றவேண்டும். அவர்களிடம் பரவி இருக்கும் வன்முறை உணர்வை அகிம்சையை அறிவுறுத்துவதன் வாயிலாக அகற்ற வேண்டும் என்பதே 'வேருக்கு நீர்' தரும் செய்தியாகும்.

> "ஒரு சிலரே திரும்பத் திரும்ப நாட்டின் செல்வங்களை அனுபவிக்கும் இந்த முறை ஒழியவேண்டும். அது ஒழியாது; ஒழிக்க வேண்டும். யமுனா, நாற்பத்தேழில் கிடைத்த சுதந்திரம் கொழுத்த முதலாளிகளுக்குத்தான் என்று தெரிந்துகொள். ஐந்தாண்டுத் திட்டங்கள் இந்த நாட்டின் ஒரு சில முதலாளிகளையே கொழுக்க வைத்திருக்கிறது, தெரிந்துகொள்"[32]

எனச் சுதீர் 'வேருக்கு நீரி'ல் இன்றைய சமூகத்தை அணுகுகிறான். ஆனால் அவன் மேற்கொள்ளும் பாதை பலாத்காரத்தை மட்டுமே வலியுறுத்தும் புரட்சியாகும். அவன் வழிகள் யாவுமே ரகசிய இயக்கங்களாகவும், மர்மமான நடவடிக்கைகளாகவும் நாவலில் சித்திரிக்கப்படுகின்றன. சுதீர் போன்றவர்கள் நக்ஸலைபாரி இயக்கத்தைச் சேர்ந்தவர்கள். அவர்கள் இந்திய சமூகத்தில் இருக்கிறார்கள். அவர்கள்

கம்யூனிச சமூகத்தை அமைக்க விரும்புகிறார்கள். ஆனால் அவர்களையும் உலக கம்யூனிச இயக்கத்தையும் வேறுபடுத்திக் காணாவிட்டால் கம்யூனிசம் பற்றி பெருங்குழப்பம் ஏற்பட்டு விடும். ஆனால் முதலாளித்துவச் சிந்தனையாளர்கள் இதுபற்றிக் கவலைப்படுவதில்லை. கம்யூனிசம் பற்றி அவர்கள் கொண்டுள்ள மனப்படிமத்தைக் கொச்சையாக வெளிப்படுத்திக் காட்டிவிடுகிறார்கள்.

அரசியலில் அன்புடைமையும் காந்தீயமும்:

படித்தவர்கள், அறிவாளிகள் அரசியலில் ஈடுபட விரும்புவதில்லை. பொய்மை மலிந்துள்ளது. அறம் காக்கப்படுவதில்லை. அன்பு வழியில் ஆட்சி காணவேண்டும். மகாத்மா காந்தி நாட்டின் சுதந்திரம் மட்டும் பெற்றுத் தரவில்லை. அந்த நாடு பண்பாட்டிலும் சிறக்க வேண்டுமென்று அகிம்சைத் தத்துவமும் தந்தார். அதுவே நாட்டின் பெருமையை உயர்த்தும்.

மௌரிய சந்திரகுப்தன் காலம் முதல் சம்பல் நதிக்-காடுகள் மறவர்களைப் பயிற்றுவிக்கும் தலைமறைவிடமாக இருந்து வருகிறது. பல அரசியல் மாற்றங்கள் சட்டங்கள் அந்த மக்களை மாற்ற வெற்றி பெறவில்லை. நாட்டு விடுதலைக்குப்பின் அகிம்சை முறையில் அவர்கள் மனத்தை மாற்றிப் பழிக்குப்பழி என்ற நெறிக்கு மாறாக அன்புவழி நல்வழி என்ற புதிய எண்ணம் புகுதற்கு முடிந்தது. இது ஒருவகையில் அவர்களை மாற்றத் துணைபுரிந்தது.

இந்தக் கொள்ளையரிடம் மனிதத் தன்மை பொங்கக் குடும்பப் பாசம் தழைக்க தன்மானம் தலைநிமிர, இறையுணர்வு செழிக்க இரக்கம் பெருக்கெடுத்தோட இயலும். மன அன்னையின் முட்கள், மனித சமுதாயமாகிய மலர்க்காலின் முட்களாக வளர்ந்த மைந்தர்களின் நல்லியல்பை 'மலரச்' செய்யும் வாழ்வைக் காட்டுவதே ராஜம் கிருஷ்ணனின் 'முள்ளும் மலர்ந்தது' என்ற நாவல். காயத்ரி, சிவானந்தன் என்ற இருவர்க்கிடையில் தேவி சரன்சிங் புதிய மலராக மாறுவதைக் காண்கிறோம்.

இறுதியில் அவனும் 'நாங்கள் தீயவழியில் சென்றோம். அதற்காக என் உளமாற நான் வருந்துகிறேன். எத்தனையோ ஏழை எளியவரும் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் என்னால் துன்பமுற்றிருக்கின்றனர். என்னுடைய கொடிய செயல்களுக்காக அவர்களிடம் நான் மன்னிப்பை வேண்டுகிறேன். என்னை நல்வழியில் நடத்திச் செல்ல இனியும் தேவி பகவான் உறுதி கொடுக்க வேண்டும். சமுதாயம் அங்கீகரிக்க வேண்டும்' என வேண்டுகிறான்.[33] அதுவே முள்ளில் மலர்கள் மலர்ந்த நிலை.

விடுதலை பெற்று ஆண்டுகள் பல ஆகியும் மக்கள் வாழ்வில் வறுமையும் மடிமையும் பெருகி வருகின்றன. மனிதன் மனிதனாக இயலவில்லை. ஏழைகள் மிக இழிநிலையில் துன்புறுகின்றனர். செல்வர்கள் நெறியைப் பற்றிக் கவலைப்படாமல் பணம் திரட்டுவதிலேயே கவலை கொள்கின்றனர். இதில் உண்மையின் ஓட்டம் கண்ணுக்குத் தெரியாமல் மறைகிறது.

இந்த நாடு ஜனநாயக முறையில் செல்ல வேண்டும் என முடிவு செய்தனர். சொன்னவர்கள் வழிகாட்டத் தவறியது மட்டுமின்றி

வேறு வழிகளிலும் மக்களை அழைத்துச் செல்கின்றனர். காந்தீயம் இந்த நாட்டை வளப்படுத்தும் என்று நம்பப் பலரும் தயங்குகின்றனர். இந்நிலை வேரில் வார்த்த நீரே மரத்தை—சமுதாயத்தைச்—செழிப்புற வளரச் செய்யும் என்ற அடிப்படை உண்மையைக் காட்டுகிறது ராஜம் கிருஷ்ணனின் 'வேருக்கு நீர்'.

கடந்த பத்து ஆண்டுகளுக்குள்ளேயே நாவல் இலக்கியத்தில் அரசியல் 'அங்கீகரிக்கப்பட்ட' பொருளாக வந்தமைந்துள்ளது. முற்பட்ட நாவல்களில் அரசியல் விலக்கிவைக்கப்பட்டது என்றே கூறுதல் வேண்டும். கல்கி போன்ற நாவலாசிரியர்கள் ஆங்காங்கே தேசிய அரசியற் பின்னணியில் கதையை நடத்திச் சென்றிருக்கின்றனர். ஆனால் அரசியற் தத்துவங்களும், அவற்றால் செயலூக்கம் பெறும் பெரும்பாத்திரங்களும் அண்மைக் காலத்திலேயே அதிகமாக நாவல்களில் உருவாக்கம் பெறுகின்றன. இப் போக்கு மேலோங்கி வரும் சூழ்நிலையில் முன்னரெல்லாம் காதற் கதைகள் எழுதிவந்த அகிலன் போன்ற ஜனரஞ்சக எழுத்தாளரும் 'அரசியல் நாவல்' எழுதினார். 'எங்கே போகிறோம்?' நாவல் காந்தீயத்தை அவர் வழிவந்த ஆட்சியாளரும் கட்சியினரும் கைவிட்டமையைக் காட்டுவதாக அமைந்தது.

அகிலன் 'எங்கே போகிறோம்?' நாவலில் கையாளும் பொதுக்கருத்தை, 'காந்தீயம் மறைந்து மதிப்பிழந்து நிற்கும்' அவலத்தை ராஜம் கிருஷ்ணன் 'வேருக்கு நீர்' (1972) நாவலில் பிரதான பொருளாக எடுத்துக் கொண்டிருக்கிறார்.

ஜெயகாந்தனின் ஜயஜய சங்கர (1976) நாவல் நினைவு கூறத் தக்கது. அரசியலை ஆன்மீகப் படுத்தும் முயற்சியாகவும், காந்திய ஆச்ரம வாழ்க்கை முறைக்கும் புறவுலக நடைமுறைகளுக்கும் உள்ள பாரதூரமான வேறுபாட்டை அழுத்திக் காட்டுவதாகவும் அமைந்துள்ளது.

காந்தீயம் என்பது சரியான முறையிலேயே பின்பற்றப்பட்டிருந்தால் நம் நாட்டிற்குப் பொருளாதார விடுதலையும், ஆன்மீக விடுதலையும் கிடைத்திருக்கும் என்பது அகிலனின் நம்பிக்கையாகும். 'சோவியத் நாட்டில் லெனினின் கொள்கைகளைப் பரப்பியது போல் இங்கும் காந்தியடிகளின் கொள்கைகள் பரப்பப்பட்டிருக்க வேண்டும். பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் முதலியவற்றின் அடிப்படைக் கண்ணோட்டம் காந்தியக் கண்ணோட்டமாக இருந்திருக்க வேண்டும்' என்று அகிலன் கூறுகிறார்.

நாவலில் காந்தியக் கலைக் கொள்கையைப்பின்பற்றும் பரிசோதனையை மேற்கொண்டார் அகிலன். "காந்தியடிகளும் கூட கலை என்பது மனிதனுடைய ஆன்மாவிற்கு ஒளியூட்டவேண்டும், மனிதனை ஒரு அடியாவது உயர்த்த வேண்டும் என்ற நோக்கமுடையவர்தான் காந்தீயத்தில் எனக்குப் பற்று இருப்பதனால் கலை கலைக்காக என்ற கூற்று அவ்வளவு சரியானதாகப் எனக்குப் படவில்லை"[34] என்பார் அகிலன்.

## இன்றைய அரசியல் அவலம்:

இந்திய அரசியல் அவலமாக மாறியதற்கு மக்களே காரணம். தரமற்ற அரசியல்வாதிகளை வளர்த்து விட்டதே மக்கள்தான். மதத்தின்

பெயரால் நாட்டை அழிக்க நினைக்கும் சக்திகளுக்கு அரசியல்வாதிகள் பெருமளவில் ஆதரவளித்து வருவதை மக்கள் உணரவேண்டும்.

இன்றைய அரசியல் அவலத்துக்கு மற்றொரு காரணம் மதவாதக் கட்சிகளேயாகும். இக் கட்சிகளால் நாட்டிற்கு நன்மை விளைவதில்லை. குறுகிய நோக்கத்துடன், மதத்தின் பெயரால் மக்களைத் தூண்டிவிட்டு, அதன் மூலம் ஊர்வலங்களை நடத்தி, பிறர் மனம் புண்படச் செய்து எண்ணற்ற மோதல்களை உருவாக்கி, பல உயிர் இழப்பதற்கு மதவாதக் கட்சிகளே காரணமாகும். மதத்தை, மதக் கொள்கைகளை அடிப்படையாகக் கொண்டு செயற்படும் கட்சிகளுக்கு மக்கள் ஆதரவு இல்லை.

தேர்தல் சமயங்களில் ஏராளமான கருப்புப் பணம் அரசியல்வாதிகளிடையே விளையாடுகின்றது. இதைத்தடை செய்து பொழுது போக்கிற்காகத் தேர்தலில் நிற்பவர்களையும், போட்டி வேட்பாளர்களையும் பதவி வெறி பிடித்து அலையும் அரசியல்வாதிகளாகக் கருதி ஒதுக்குதல் நலம் பயக்கும்.

அரசியலில் பொதுமக்கள் காட்டிவரும் ஆர்வக்குறைவு, பதவிக்கும் கௌரவத்திற்கும் சுய லாபத்திற்கும் காணப்படும் போராட்டம், தேசிய நோக்கு மற்றும் தேச நன்மையில் காணப்படும் சிரத்தையின்மை, அரசியலிலும் நிர்வாகத்திலும் அதிகரித்து வரும் ஊழலின் அளவு போன்றவை இந்தியாவில் முறையாக விவாதிக்கப்பட்டு வருகின்றன. அரசியல்வாதிகளின்

பண்பில் ஏற்படும் மாற்றத்தையே இது குறிக்கிறது. விடுதலைப் போராட்ட வீர வரலாற்றை மறந்து வருதலும் காணப்படுகின்றது. கட்சித் தலைவர்களும், தொண்டர்களிடமிருந்து விலகியிருக்கின்றனர்[35] என்பதுதான் பேராசிரியர் ஜீ.ஆர்.மதன் என்பாரின் கணிப்பாயுள்ளது.

அரசாங்கத்தின் அனைத்து நிலைகளிலும் ஊழல் மலிந்து நிற்பது மறக்க முடியாத உண்மை. நாமே வகுத்த சூழ்நிலையில் நாம் சக்தியற்ற கைதிகளாக உள்ளோம். அரசியல்வாதிகளும், அமைச்சர்களும் ஊழல் புரிபவர்களாக உள்ளனர். அரசு வேலைகளின் அடிமட்டம்வரை ஊழல் பரவி உள்ளது. நடுத்தர வர்க்கத்தையும் அது பாதித்து உள்ளது. நிர்வாகத்தின் சிகரத்தையும் பாதிக்கும் அளவில் ஊழல் வளர்ந்துவிட்டதாக சென்னையில் ஜி.எல்.மேத்தா நினைவுச் சொற்பொழிவில் நேரு கூறினார்.[36] அவர் அன்று கூறியது இன்றும் அப்படியேயுள்ளது.

சமுதாயத்தில் பற்பல குறைகள் மேலோட்டமாகவும் ஆழமாகவும் அமைந்துள்ளன. அவற்றை நாவல் ஆசிரியர்கள் கூர்மையாகப் பார்த்து அவற்றைப் படிப்போர் உள்ளத்தில் படும் வகையில் கூறும் நெறியைப் பலவாறாக அமைத்துக் கொள்வர். சிலருடைய எழுத்தில் இயற்கையாகவே குத்தல் அமைந்திருக்கும். குறைகளை எடுத்துக்காட்ட அக்குத்தல் நடை, எங்கே பாயும் எனக் காட்டுதல் இயலாது. குற்றம் செய்பவரைக் குத்திக் காட்டவும் பயன்படும். சில சமயங்களில் தீமைகளால் தாக்குண்டவர்களின் நிலையைக் காட்டும்போதும் அதன் கூர்மை

பயன்படும். படிப்போர்க்கு அதன் விளைவு நன்கு வெளிப்படும். அதனால் வாழ்க்கைச் சிக்கல்களைத் தீர்க்கும் வழிகாட்டியாக அமையும் என்பதில்லை. படிப்போரின் சிந்தனையைக் கிளறி விடுவதற்குப் பயன்பட்டாலும் ஒருவகை நிறைவைத் தந்துவிடும் இந்திரா பார்த்தசாரதியின் நாவல்கள்.

இந்தியா சுதந்திரம் பெற்றபின் அது சுதந்திர பூமியாக விளங்குகிறது என்று உறுதியாக நம்புகிறவர்கள் பலர். இந்த நம்பிக்கையைப் பரிசோதனை செய்யும் வகையில் இந்திரா பார்த்தசாரதியின் 'சுதந்திர பூமி' அமைந்துள்ளது. காந்தியை அன்று தென்னாப்பிரிக்காவில் ஐரோப்பியன் முதல் வகுப்புப் பெட்டியிலிருந்து கீழே தள்ளியதைப் போலவே காந்தி தரிசனம் பார்க்கப்போன ஆறு வயதுப் பெண்ணை காந்திக்குல்லாய் தரித்த 'தொண்டர்' கையைப் பிடித்துத் தள்ளினார். காரணம் மந்திரிக்கு வழிவிட வேண்டும். இந்நிகழ்ச்சியையும் அமைச்சர் தன் விளம்பரத்திற்குப் பயன்படுத்திக் கொண்டு மக்களை முட்டாளாக்கிவிட்டுச் சென்ற காட்சி நூலின் முன்னுரை போல அமைகிறது.

'சுதந்திரம் கிடைத்துவிட்டது, எதற்கு சுதந்திரம்?' - அந்நியன் ஆட்சியில் பட்டினி கிடப்பதைக் காட்டிலும், நம்மை நாமே ஆளும் போது பட்டினி கிடப்பது எவ்வளவு புனிதமான விஷயம்! "எல்லோருக்கும் குறைந்தபட்ச வசதிகள் கிடைக்கும்வரை, ஒருவன் தலைவாழையிட்டுச் சாப்பிடுவது திருடுவதற்கு ஒப்பாகும்" என்று சொன்ன காந்தியைக் கொள்கைச் சிறையிலிட்டுக் கோடிக் கணக்கில் செலவழித்து எளிமையை

ஆடம்பரச் சிலுவையில் அறைவோம்"37. இது சுதந்திர இந்தியாவின் அவல நிலையை வெளிப்படுத்துவதாகவுளது. எளிமையை ஆடம்பரச் சிலுவையில் அறைந்த காட்சியை வெளிப்படையாகக் காட்டிவிட்டுச் சுதந்திர பூமியின் திரை, மேலே உயர்கிறது.

பட்டதாரி, வேலை கிடைக்காமல் இந்த நாட்டின் தலை நகரில் 'பூட் பாலிஸ்' போடுவதைக் காட்டிவிட்டு நாட்டுப் பிரதமரின் 'சோசலிசப் புன்னகை' செய்யும் விளம்பரத்தையும் குத்திக்காட்டுகிறார் ஆசிரியர். டில்லியை அழகு படுத்த வண்ண நீரருவிகள், கண்ணைக் கவரும் மலர்ப் பூங்காக்கள், எனப் பணத்தை வாரி இறைக்கிறார்கள். ஆனாலும் வறுமை, அழுகு தேவதையைக் கண்டு ஓடிவிடாத உண்மைகளைப் புலப்படுத்து-கிறார்.

வேலை தேடி வந்த முகுந்தன் மனத்தில் 'அசோகா ஹோட்டலில்' காப்சில்களாக வழங்கப்படும் பாரதப் பண்பாட்டை ரசிக்கும் விருந்தினர்களைக் கூப்பிட்டுப் பாரதத்தின் நிகழ்காலம் சாக்கடை அருகே ரொட்டி சுட்டுக் கொண்டிருக்கும் தலைநகர்க் காட்சியைக் காட்டும் மனக்கோலம் எழுகிறது. பிர்லாக்களை ஒழிப்போம் என்கிறவர்கள்தாம் இன்று 'இம்பாலாவில்' போகும் முரண் காட்சியைச் சுதந்திரத்தின் ஏமாற்றமாகக் காட்டுகிறார்.

முகுந்தன் தேடி வந்த எம்.பி.மிஸ்ராவின் கொத்துக் கொத்தான வெள்ளைச் சதையை உருட்டித் திரட்டி ஒருவன் ரொட்டித்

தட்டிக் கொண்டிருக்கும்போது உறங்காக் குடிக்கும் பாணியில் சிகரெட் பிடித்துக் கொண்டிருந்தார். இதைப் பார்க்கும்போது பாரதியின் சின்ன சங்கரன் கதையில் காணும் இராமசாமிக் கவுண்டரின் தர்பார் நினைவுக்கு வரும்.

மத்திய மந்திரிசபையோடு நெருக்கமான தொடர்புள்ள மிஸ்ராவின் கருணைக்குப் பாத்திரமான முகுந்தன் 'சுதந்திரத்தை' அனுபவிக்கத் தொடங்கினான். தென்னாட்டு மந்திரி கூட அந்த எம்.பி. வீட்டில் காத்துக் கிடக்கும் சுதந்திரத்தை முகுந்தன் கண்டான். அரசியல் சூழலில் வாழ்க்கை எல்லை விரிந்துள்ளதாகக் கண்டு அதனைச் சுவைத்தான்.

சைக்கிளையோ சர்க்கார் பஸ்ஸையோ எதிர்பார்க்கும் காரியாலய 'பாபு'க்களுக்கு ஊர்க்கோடியில் வீட்டு வசதி தந்திருக்கும் அரசாங்கம், கார் வைத்திருக்கும் மந்திரிகளுக்கும் உயர்தர உத்தியோகஸ்-தர்களுக்கும் காரியாலயத்தின் அருகிலேயே பங்களா கொடுத்திருப்பதில் குரூரமான நகைச்சுவை வெளிப்படுகிறது. அந்தச் சுவையில் மிஸ்ரா அவனை எம்.பி. ஆக்கவோ, மந்திரியாக்கவோ ஆசைப்படுவது தெரிந்தது. 'அந்த' அரசியலில் சாதியே அடிப்படை என்று அவர் நன்கு புரிந்திருந்தார். ராஜ்ய சர்க்கார்களை கவிழ்க்கவும் மந்திரி மனைவிக்கு 'டாக்டர்' பட்டம் கொடுக்கவும் அந்த எம்.பி.யிடம் ஆற்றல் இருக்கிறது என்பதைக் கூறும் போது 'அந்த' அரசியல்வாதிகள் கல்வித் தரத்தை எவ்வளவு கீழுக்குக் கொண்டு போய்விட்டார்கள் என்பதை முகுந்தன் உணர்த்துகின்றான்.

பஞ்சாபைச் சேர்ந்தவர் பீஉறார் சர்க்காரைக் கவிழ்க்கக் கூடிய ஆற்றலிருந்தது என்றால் நம் நாட்டில் தேசிய ஒருமைப்பாடு இல்லை என்ற கூறும்போது அரசியலைத் தாக்கும் குத்தல் 'சுதந்திர பூமி'யில் மனிதனை வளக்கும் கருவிகளாக நிதி, மது, மங்கை பயன்பட்டதையும் நம் நாட்டு அரசியலே ஒரு துப்பறியும் கதையாகும் செய்தியையும் 'மென்னகையுடன்' வெளியிடுகிறார்.

அமெரிக்கச் சூழ்நிலையில் ஒருவன் 'உறிப்பியாக' மாறுவதும் இந்நாட்டுச் சூழ்நிலையில் ஒருவன் 'நக்ஸலைட்டாக' மாறுவதும் மிகவும் நேர்மையான காரியங்களாக வெளிப்படும் என இளைஞர் உள்ளங்கள் சிந்திப்பதை உணர்த்துகிறார் ஆசிரியர்.

சுதந்திர பூமியில் ஆர்ப்பாட்டமோ, பாராட்டோ, ஊர்வலமாக ஆட்களைக் கொண்டு வந்து நிறுத்தவோ சுரேந்தர் கூட்டம் துணை செய்கிறது. அதற்குப் பயன்பட்ட கிராம மக்கள் கோக்கோ கோலா குடிப்பதில்லை. 'லோட்டா நிறையப் பால் குடித்தார்கள்' என அறியும் போது 'கிராமப் பண்பாடு அந்த அளவில் உயிர் வைத்துக் கொண்டிருப்பதை குத்திக் காட்டுகிறார் ஆசிரியர்.

பொய்யான வாய்ப்பைப் பயன்படுத்திக்கொண்டு வாய்ச் சரக்கை முதலாகக் கொண்டு மேலே வரும் வாய்ப்பைப் பெறுகிறான் முகுந்தன். அரசியல் பலமும் இராஜ்யப் பற்றும் மோதும் போது பலன் கட்சியே சுதந்திர பூமியில் வெற்றி பெறுவதைக் கண்டான். விசித்திரமான

'முக்கோண உறவுகள்' சுதந்திர பூமிக்கு அடிக்கற்களாக அமைவதை 'வாழ்வுக் கட்டுப்பாட்டியக்க' வடிவில் இந்திரா பார்த்தசாரதி குத்தல் சுவை கலக்கக் கூறுகிறார்.

அரசியலில் வாக்குறுதிகளைப் பற்றிக் கவலைப்படாத தீவிர ஜனநாயக சோசலிஸம் யுகப்புரட்சி நடப்பதைக் குத்திக் காட்டு-கிறார். தமிழ் நாட்டுக்கு மிஸ்ராவை கூட்டிச் சென்று தமிழ்ப் பண்பாடு பற்றிய புது விளக்கம் கொடுக்கச் செய்து இன்றைய நிலையினை இடித்துக் காட்டுகிறார் ஆசிரியர். அரசியல்வாதிகள் மக்கள் கையால் பரிசாகப் பெற்ற கார்களும், பலதாரமணமும், பல குழந்தைகளும் பெறும் 'நல்ல' நிலையைச் சொல்லாமல் சொல்லி இடித்துக் காட்டுகிறார்.

கட்சி விட்டுக் கட்சி மாறுவது, பார்லிமெண்ட் கலைக்கப் படுவதெல்லாம் பிள்ளை விளையாட்டாக வளர்கின்றன. தேர்தலில் கருப்புப் பணம் வெள்ளையான 'நிறமாற்றத்'தில் தான் எவ்வளவு உண்மை ஒளிவிடுகிறது? முகுந்தன், கல்வி அறிவில்லாதார் சதவீதம் மிகுந்த மத்திய பிரதேசத்திலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்ற உறுப்பின-ரானான். பசு மாட்டைத் தெய்வமாக வணங்கும் தொகுதியில் முகுந்தனைக் கிருஷ்ணனின் மறு அவதாரமாக நினைத்து, அவன் ஸோசலிஸப்பால் கறந்து தருவான் என்ற நம்பிக்கையுடன் மக்கள் தேர்ந்தெடுத்த மூட நம்பிக்கையைச் 'ஸோசலிஸப் பால் கறத்தல்' என்ற தொடரில் காட்டுகிறார்.

தேர்தலின் விளைவு முகுந்தன் தொழில் துறைத் துணை மந்திரியாகிவிடுகிறான். மிஸ்ரா தன் வாயால், 'மந்திரி என்றால் அபிப்பிராயமும் இருக்கக் கூடாது, சுதந்திரமும் இருக்கக் கூடாது' என்று கூறும் போது எள்ளல் சுவையின் தனிச்சிறப்பை உணர்கிறோம். அரசியலில் முரண்பாடுகளே வளர்ந்து மக்களை ஏமாற்றும் 'பொய்வலையாக இருப்பதை நாவலெங்கும் பரவச் செய்து சுதந்திர பூமியின் உண்மை நிலையை உணருமாறு செய்கின்றார்.

யார் கதைக்குரிய தலைவன்? கதை நிகழ்ச்சிகள் எப்படிப் பின்னப்பட்டுள்ளன? உண்மையாக ஒவ்வொரு கதை மாந்தனுக்கும் படைப்பு நிலையில் வேற்றுமை உள்ளதா என்பவற்றை எல்லாம் சிந்தித்துப் பார்க்க இடமில்லாமல் சுதந்திரம் பெற்ற மக்களின் இன்றைய நிலையை டெல்லி அரசியல் பின்னணியைக் கொண்டு உண்மையை அறிவித்ததற்கு வழி செய்கிறார் இந்திரா பார்த்தசாரதி.

அவ்வாறே தனி மனிதன் தன் திறமையைப் பற்றி அளவிட முடியாத வண்ணம் கற்பனை செய்து கொண்டு உச்சிக் கொம்பில் இருப்பவர்களைப் பொருளாதாரத் திமிங்கலங்கள் எப்படி விழுங்கிவிடுகின்றன என்பதையும் காட்டுகிறார்.

உயர் மட்டத்திலுள்ள பணக்காரக் குடும்பங்களில் உள்ள மக்கள் ஒவ்வொருவரும் எப்படித் தனித் தனித் தீவுகளாக உள்ளனர் என்பதை அவருடைய 'தீவுகள்' காட்டும். இவ்வாறு சமுதாயம், குடும்பம், தனி

மனிதர் நிலைகள் இன்றைய அரசியல் சூழலில் படும் பாடுகளைக் காட்டி நாவல் படைத்துள்ளார் இந்திரா பார்த்தசாரதி.

தமிழகத்திலிருந்து அரிசி கடத்தல்:

பொன்னீலனின் 'கொள்ளைக்காரர்கள்':

1973ஆம் ஆண்டு அரிசிப் பற்றாக்குறை ஏற்பட்ட காலத்தில் கேரளாவுக்கும், மேற்குக் கன்னியாகுமரிக்கும் அரிசி கடத்தல் நடந்த நிகழ்ச்சிகளின் பின்னணியில் நாவல் நிகழ்ச்சிகள் நடைபெறுகின்றன. புஷ்பபாயும் மேலும் சிலரும் அதிக விலையில் விற்கும் அரிசியை வாங்கிக் கொண்டு திரும்பும் போது பஸ்ஸில் கண்டக்டர் ஏற்றிக்கொள்ளவில்லை. அதிகாரிகள் ஜீப் வந்து சூழ்ந்துகொள்ள, அவர்களிடமிருந்து பதுங்கி, அப்புறம் போராடி, அரிசியை இழந்த நிலையில் புஷ்பபாய் திரும்பி வருகிறாள். முந்திரித் தோட்டத் தொழிலாளர் அரிசி கடத்தும் லாரிகளை மறிக்கும் போராட்டம் நடைபெறுகின்றது. அதில் புஷ்பபாய் கலந்துகொண்டு போலீஸ் அடிக்குப் பலியாகிறாள்.

சாதாரண மக்கள் 5 லிட்டர், 10 லிட்டர் அரிசி கடத்தி வருவதை அதிகாரிகள் தடுத்தனர். முதலாளிகள் லாரிகளில் அரிசி கடத்துவதை லஞ்சம் பெற்றுக்கொண்டு அதிகாரிகள் காணாது விட்டனர். இதற்கு எதிராகத் தொழிலாளர் போராட்டம் நடந்தது. பாலையன் ராஜம்மை போன்ற தலைவர்களின் முன்முயற்சியோடு நடந்த போராட்டத்தில் புஷ்பபாயும்

மற்றவர்களும் கலந்து கொண்டனர். புஉஷ்பபாயின் தந்தையார், கன்னியா குமரி மாவட்டத்தைத் தமிழ்நாட்டோடு இணைக்கும் போராட்டத்தில் ஈடுபட்டு இறந்தார். இளமை முதற்கொண்டே பாலையனின் போராட்ட உணர்வைக் கண்டு புரிந்திருக்கிறாள். மூன்று குழந்தைகள், குடிகாரக் கணவன், இவர்களைக் கொண்ட குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டிய பொறுப்புடையவள். கட்சித் தலைவர்களின் சாகசங்களைக் கண்டறிந்தவள். போலீஸ் கெடுபிடி முதலியவற்றை அனுபவிக்கும் நிலையில் போராட்ட உணர்வோடு களம் புகு-கின்றாள், புஉஷ்பபாம்.

சாதாரணமான ஒரு குடும்பப் பெண், தொழிலாளர் போராட்டங்களைக் கண்டுதன் வாழ்க்கைப் பிரச்சனைக்காகப் போராட்-டத்தில் ஈடுபட வேண்டிய நிலைக்கு உந்தப்பட்டிருக்கிறாள் என்பதைச் சித்திரிக்கின்றது இந்த நாவல். காரில் அரிசி கடத்தும் கன்னியாஸ்திரி-களையும், போலீஸ்காரர்களையும் அனுமதித்துவிட்டு மற்றவர்களையும் ஏறவிடாமல் தடுக்கும் கண்டக்டர், மக்கள் மத்தியில் செல்வாக்குப் பெற்ற கட்சியைச் சேர்ந்த கூட்டுறவுச் சங்கத் தலைவர் ஆகிக் கொள்ளையடிக்கும் பிரமுகர், ஏழை மக்களுக்குத் தண்ணீர் தர மறுக்கும் பெட்டிக்கடைக்காரர், வட்டிக் கடைக்காரர், அதிகாரிகள் ஆகிய இவர்களைப் பற்றிய சித்திரிப்பை விட புஉஷ்பபாயின் கணவன் ராஜையன், குடிப்பழக்கம் உடையவனாயினும் நல்ல விவசாயி. எஸ்டேட்டில் வேலை செய்த ராஜையனை முதலாளி தண்ணீர் எடுத்துவர ஆணையிடுகிறார். வெட்கப் பட்ட ராஜையன் குடத்தைப் பாறையில் போட்டு உடைத்துத் திரும்புகிறான். முதலாளியின் அடியாட்களால்

னையப் புடைக்கப்படுகிறான். குடியிருப்பிலிருந்தும் வெளியேற்றப்படுகிறான். அதிகாரிகளின் காமத்திற்குப் பலியாகிச் சீர்குலைந்த சாந்தை, ஓமனா முதலியவர்கள் பற்றியும் நாவல் சொல்லுகிறது.

பொன்னிலன் படைக்கும் பாலையன், ராஜம்மை ஆகியவர்களின் பார்வையில் இவர்கள் அனுதாபத்திற்கு உரியவர்கள். அனுதாபத்தின் பாதுகாப்பு இவர்களுக்கு நிரந்தரமாகக் கிட்டாது. வாழ்க்கை வளம் காணாத நிலையில் பண்பாட்டுப் பாரம்பரியம் அற்ற நிலையில், வயிற்றுக்காக வாழும் இவர்கள் மனிதர்களாக்கப்படும் தகுதி உடையவர்கள். உண்மையான ஒரு சமூக மாற்றம் இவர்களை அப்படி உருவாக்கும். ஒழுங்கான உறுதியான சமூகக் கூட்டமைப்புக்குள் வராத, இத்தகையவர்களை நாவல்களில் காண்கிறோம்.

காலத்துக்குக் காலம் சமுதாயத்திலே தோன்றும் அரசியல் பொருளியல், சமூக, கலாசார, ஆன்மீக இயக்கங்கள் இலக்கிய ஆதிக்கத்தைப் பாதிக்கின்றன. வேறுபட்ட மாறுபட்ட சமூகங்களில் உண்டாகும் மாற்றங்களின் இயல்புகளைச் சுட்டுவதும் இலக்கியமே. மற்றும் தனிமனிதர் சமுதாய மாற்றங்களுக்குத் தக்கவாறு தங்கள் உணர்வுகளை எவ்வாறு செம்மைபடுத்திக் கொள்கின்றனர் என்பதையும் இலக்கியம் புலப்படுத்தத் தவறுவதில்லை. மனிதனுடைய விருப்பங்களையும், நம்பிக்கைகளையும் இலக்கியம் எதிரொலிக்கின்றது. மேலும் இவ்வியல்புகளைக் கருத்தில் கொண்டு சமூகச் சக்திகளின் தாக்கத்தால் மனிதன் எவ்வாறு செயல்படுகிறான் என்பதைக் கண்டறிய உதவும் சமுதாய அளவுகோலா-கவும் விளங்குகிறது.

அரசு ஒரு சமயம் தஞ்சையிலிருந்து கேரளாவுக்கு இரவோடு இரவாக அரிசி அனுப்பி மிக்க பொருளைத் திரட்டியது. அப்போது தமிழகத்திலும் வறுமை, இது அரசோச்சுபவர் மக்களுக்குப் பாதுகாவலாக இருந்து, அவர்கள் நலனில் அக்கறை கொண்டு இருப்பதை விடுத்துத் தவறான முறையில் பொருளீட்ட, தமிழக மக்கள் பட்டினியால் வாடினர். அதைக் கருவாகக் கொண்டு, காவல்துறையில் பணியுரியும் பொன்னையா வழியாக சிறுதவறு செய்யும் எளியவன் மாட்டிக் கொண்டு மிகு தண்டம் பெறுகின்றான். அமைச்சர்கள் ஆடம்பரமாக வாழ்கின்றனர். இதனால் நேர்மையாக இருப்பவர்களும் தன் கடன் புரிய இயலாது வாளா இருக்க மனம் கொள்கின்றனர் என்பது அகிலனின் "வேலியும் பயிரும்" தரும் உண்மைக் காட்சி.

## போராட்டங்களும், புனர்வாழ்வும்:

நமது அன்றாட வாழ்வின் ஒரு பகுதியாக போராட்டங்களைச் சந்திக்கின்றோம். கல்லூரிகளில் மாணவர் போராட்டம், ஆலைகளில் ஊதிய உயர்வு கேட்டுத் தொழிலாளர் போராட்டம், அரசியல் விஷயங்கள் பலவற்றுக்காக அரசியல்வாதிகள் போராட்டங்கள் நடத்தி வருகின்றனர்.

நாட்டு விடுதலை பெறுவதற்காகப் போராடிய மகாத்மா காந்தி போன்ற தலைவர்கள் உண்ணாவிரதம், ஒத்துழையாமை இயக்கம், சத்தியாகிரகம் போன்ற போராட்டங்கள் உன்னதமான நோக்கங்களுக்காக மேற்கொள்ளப்பட்டன.

ஆனால், தற்காலத்தில் உண்ணாவிரதம், உண்ணும் விரதம் போன்ற போராட்டங்கள் கேலிக்கூத்திற்கே இடமளித்தன. பற்பல அரசியல் கட்சிகளும் சாதி அமைப்புகளும் போராட்டம் மேற்கொண்டு வருகின்றன. இவ்வாறு போராட்டங்கள் நமது அன்றாட வாழ்வின் ஒரு பகுதியாகவே மாறிவிட்டன.

மற்றெல்லா இலக்கிய வகைகளையும்விட நாவல், அது தோன்றும் சமூகத்தோடு நெருங்கிய தொடர்புடையதாகவும் அச்சமூகத்தை விரிவான முறையில் பிரதிபலிப்பதாகவும் அமைந்துள்ளது. "நாவல்தான் வரலாற்றுக் கண்ணோட்டத்திலும் சமூகக் கண்ணோட்டத்திலும் மனிதனை விளக்கமாகச் சித்திரித்துக் காட்டும் முதல் கலை வடிவமாக விளங்குகிறது", என்று நாவலின் சமூகவியல் தன்மையைத் திறனாய்வாளர் தா.வே.வீராசாமி வெளிப்படுத்துகிறார்.[38] சமூகவியல் கண்ணோட்டத்தோடு நாவல்களை அணுக வேண்டும் என்று கூறுகிறார் தெயின் என்னும் திறனாய்வாளர். "நாவல் வாழ்க்கையின் எல்லாக் கூறுகளையும் பிரதிபலிக்கக்கூடிய, எளிதில் தூக்கிச் செல்லக்கூடிய கண்ணாடியாக விளங்குகின்றது"[39] என்று கூறுகிறார் கா.சிவத்தம்பி. "நாவல் சமூகம் பற்றிய செய்திகளைப் பதிவுசெய்து அதைப் படிப்பவருக்கு உணர்த்துவதன் மூலம் மிக மதிப்புடைய சமூகப் பணியினைச் செய்கிறது. நாவல் சமூகத்தின் அடிப்படைத் தன்மைகளைக் கலையுணர்வுடன் காட்டுவதன் வாயிலாகவே அது வாழ்க்கையைப் பிரதிபலிக்கிறது"[40] என்று ஆலன் ஸ்வுங் உட் விளக்கிக் கூறுகின்றார்.

நாவலின் சமூகவியற் பண்பைப்பற்றிக் குறிப்பிடுகின்ற மற்றொரு திறனாய்வாளர், "நாவல் சமூகம் பற்றி இருவகையான செய்திகளை நமக்குத் தருகிறது. முதல் வகை தொழில், சட்டங்கள் பழக்க வழக்கங்கள் போன்ற புள்ளி விபரங்களைத் தரும் முறையாகும். இரண்டாம் வகை சமூக மதிப்புகள் சமூகத்தில் நிலவும் எண்ணங்கள் பற்றிய செய்திகளைத் தரும் முறையாகும். சமூகத்தின் அடிப்படை நிறுவனங்களில் ஏற்படும் மிகப்பெரிய மாற்றங்களைக் கருவாகக் கொண்டு நாவல்களைப் படைக்கும் பொழுது இரண்டாம் வகையான முறையில் சமூகம் பற்றிய செய்தி நாவல்களில் தெளிவாக இடம் பெறுகிறது. சமூகத்தின் அடிப்படை நிறுவனங்களில் மாற்றம் என்று கூறும் பொழுது ஏற்படும் மாற்றங்கள் ஆகியவைகளைக் கூறலாம். இத்தகைய மாற்றங்கள் முரண்பட்ட சமூக மதிப்புகளைத் தோற்றுவிக்கும் பொழுது அவை இலக்கியங்களில் வெளிப்படுகின்றன. மேற்கண்ட கூற்றுக்களை நோக்கும் பொழுது நாவலின் சமூகவியற் பண்பு பற்றிய கீழ்க்கண்ட உண்மைகள் தெளிவாகின்றன.

அ. நாவல், மற்ற இலக்கிய வகைகளைவிடச் சமூக உணர்வு மிக்கதாக விளங்குகிறது.

ஆ. நாவல், அது தோன்றிய சமூகத்தைக் கலையுணர்வோடு சித்திரிக்கிறது.

இ. நாவல், சமுதாயத்தின் அடிப்படை மாற்றங்களை வெளிப்படுத்துகின்றது.

முந்திய ஒரு பொருளாதார நிலையிலிருந்து இன்னொரு பொருளாதார நிலைக்குப் போகும்பொழுது வாழ்க்கையில் மாற்றம் ஏற்படுகின்றது.

இன்றைய சமுதாயத்தில் இருந்துவரும் பொருளாதாரச் சிக்கலைத் தமிழ்ப்புதின ஆசிரியர்கள் பல கோணங்களில் எடுத்துக்காட்டி உள்ளனர். ஆண்டான், அடிமை என்ற வேறுபாடில்லாத சோசலிசப் போக்கினைத் தொ.மு.சிதம்பர ரகுநாதனின் "பஞ்சும் பசியும்" என்ற புதினத்தில் காணலாம். பொருளாதாரப் போராட்டம் சாதிப் போராட்டமாக மாறுவதை இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப் புனலில்' காணமுடிகின்றது. தாழ்த்தப்பட்ட வகுப்பாரிடையே இன்று தோன்றியுள்ள தலைமுறை முரண்பாடுகளை டி.செல்வராஜ் எழுதிய "மலரும் சருகும்" காட்டுகிறது. விவசாயிகளின் கூட்டு உரிமைக் குரலைப் பொன்னீலன் எழுதிய 'கரிசல்' எனும் புதினத்தில் கேட்க முடிகிறது.

பொன்னீலனின் 'கரிசல்' நாவலில் முரண்படும் கதா பாத்திரங்களில் நிலச்சுவான்தாரராக வரும் சர்க்கரைச் சாமியும், அவருக்கு எதிராக நிற்கும் வீரையனும், கண்ணப்பனும் முக்கியமானவர்கள். பழைய உறவுகளின் பிரதிநிதியாக உள்ள சர்க்கரைச் சாமியின் வீட்டிலிருந்து பொன்னுவை மீட்பதிலும், அந்தக்கிராமத்தில் புதிய முற்போக்குச் சிந்தனைகளை வளர்ப்பதிலும் கண்ணப்பன் முக்கியமான பங்கு பெறுகிறான். பண்ணை அடிமையாக இருந்த வீரையன் படிப்படியாகத் தன்னுணர்வு பெறுகிறான். கண்ணப்பனைப் பார்த்து வீரையன் ஒரு இடத்தில் கேட்கிறான்.

> "நம்மூர்ல ஒரு படிப்பகம் கட்டலாமா?"
> கண்ணப்பன் அவனை ஆச்சரியத்துடன் பார்த்தான். இந்தக் கரிசல் மண்ணில் வாழ்க்கையை வியர்வையாகச் சிந்தும் இவனுக்கு இப்படிப்பட்ட எண்ணம் இருக்கிறதே என்று அவன் வியப்படைந்தான்"[41]

வீரையனும், அவனைச் சேர்ந்தவர்களும், போராட்ட உணர்வு பெற்று சங்கம் வைத்து வெற்றியும் பெறுகின்றனர்.

"கரிசலில்" வீரையன் ஒன்றுமறியாமல் இருந்த அவன், முடிவில் பொறுப்புள்ளவனாக மாறுவது அழகிய முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

எங்கு பார்த்தாலும் போராட்டம், எதற்கு எடுத்தாலும் போராட்டம் எனப் போராட்டங்கள் இன்றைய சமுதாயத்தை அலைத்துக் குலைப்பதைப் பார்க்கின்றோம். இப்போக்கு ர.சு.நல்லபெருமாளின் 'போராட்டங்கள்' என்ற புதினத்தில் பேராட்சி செலுத்துகின்றது. மாணவர்கள் அரசியலில் ஈடுபடுவதால் ஏற்படும் பாதிப்புக்களை நா.பார்த்தசாரதி சத்திய வெள்ளத்தில் சமகால நிகழ்ச்சிப் பின்னணியில் தெளிவுபடுத்துகிறார். இன்றைய அரசியல் நிலையைப் பொதுமக்கள் எவ்வளவு தூரம் புரிந்து வைத்திருக்கிறார்கள் என்பதை ராஜம் கிருஷ்ணனின் 'வேருக்கு நீர்' விளக்குகிறது. நாடு விடுதலை பெற்றும் அடிமைத்தனம் நம்மை விட்டு நீங்கவில்லை என்று அகிலன் 'புது வெள்ள'த்தில் கூறுகிறார்.

அனைத்து மனிதர்களும் சமமாகப் படைக்கப்பட்டவர்களே. அவர்களுக்கு உரித்தான உரிமைகளை அவர்களுக்குக் கிடைக்கச் செய்ய வேண்டும். அவர்களுக்கு உரிமையும், மகிழ்ச்சியும் அளித்து அவர்களிடத்துச் சக்தியைப் பெறுதலே அரசாங்கத்தின் தலையாய கடமையாகும். மக்களுடைய அடிப்படை உரிமைகளை அலட்சியப்படுத்தும் எந்த ஒரு அரசாங்கத்தையும், அதை மாற்றியோ அல்லது முற்றிலும் ஒழித்தோ, ஒரு புதிய அரசாங்கத்தைத் தோற்றுவித்தலே மக்களின் உரிமையாகும். இதுவே ஜெஃபர்சனின் கோட்பாடாகும் எனத் தெளிவிறுத்துகின்றார் டாக்டர் பாலசௌந்திரி.[42]

ரகுநாதனின் "பஞ்சும் பசியும்" நெசவாளரின் வறுமை மிக்க வாழ்க்கையையும் அவர்கள் நடத்தும் போராட்டத்தையும் சித்திரிக்கிறது.

இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப்புனல்' 1969-ஆம் ஆண்டு தஞ்சை மாவட்டத்தில் கீழ வெண்மணி என்ற கிராமத்தில் தாழ்த்தப்பட்ட மக்கள் எரிக்கப்பட்ட நிகழ்ச்சியை அடிப்படையாய்க்கொண்டு எழுதப்பட்ட நாவல்.

எனவே, நாவல்கள் சமுதாய மாற்றங்களையும், சமுதாயக் கிளர்ச்சிகளையும், சிக்கல்களையும் வெளிப்படுத்துகின்ற சமுதாய ஆவணங்கள் என்பதை ஏற்றுக் கொள்வதில் தவறில்லை.

தொழிற் சங்கத்தார் ஒற்றுமை உயர்வை சிதைந்துபோகாமல் தங்களைத் தகர்க்க நிற்கும் முதலாளித்துவம் என்ற மாபெரும் கோட்டையை இடிக்க முன்வழி காட்டினர்.

தொழிலாளர் ஊர்வலம் பற்றி ரகுநாதன் வடித்துள்ள வடிவம் தனிச் சிறப்பு பெற்ற வடிவமாகும்.

'எட்டரை மணி சுமாருக்கு, மங்கம்மாள் சாலையின் தென் கோடியில் கிணற்றுக்குள்ளிருந்து எழும்பும் குரலைப்போல் ஆரவார ஒலி கேட்டது. அந்த மங்கிய ஆரவாரம் அங்கு நின்று கொண்டிருந்த மணியின் (கைலாச முதலியாரின் மகன்) மனத்தில் ஏதோ ஒரு தெய்வீக நாதம் போல் ஒலித்து விம்மியது. அவன் கண்களை அகல விரித்துக் கொண்டு வைத்த கண் வாங்காமல் இமை தட்டாமல் மங்கம்மாள் சாலைத் தெருவில் கண்பதித்து நின்றான். சிறிது நேரத்தில், தூரத்தில் செம்மண் புழுதிப்படலம் மறைச் செறிவையும் கடந்து செக்கர் ஒளிபோல் வான மண்டலத்தில் பரவுவதை அவன் கண்டான். செக்கச் சிவந்த செம்மண் மண்டலத்தில் இருந்து யாகக் குண்டப் புகையிலிருந்து கிளம்பி வரும் பூத உருவங்களைப் போல் மனித உருவங்கள் தோன்றி முன்னேறி வருவதையும் அவன் கண்டான்' என மக்கள் எழுச்சியில் பிறந்து முன்னேறி வரும் ஊர்வலத்தின் முதன்மைக் காட்சி அவனுக்கு எந்த உணர்வை ஊட்டியது எனக் காட்டிய பின் 'அதோ வந்துவிட்டார்கள்' என்று அவனையும் அறியாமல், அவன் வாய்விட்டுக் கூறி மகிழ்ந்தான். அவனுடைய காலும் கையும் கட்டிப் போடப்பட்ட பந்தயக் குதிரையைப் போல் துறுதுறுத்தது. அவன் இதயம், அவர்களை எதிர் கொண்டு அழைக்கப்போகும் உற்சாகத்தில் நிதான கதி இழந்து படபடத்துத் துடித்தது; அவன் நிலை கொள்ளாமல் தவித்துக் கொண்டு நின்றான்.

பட்டினிப் பட்டாளம் நெருங்கி வந்து கொண்டிருந்தது. போர் முகத்தை நோக்கிச் செல்லும் முன்னணி வீரர்களைப் போல் அந்தப் பட்டாளத்தினர் முன்னேறி வந்து கொண்டிருந்தார்கள்; அவர்கள் அருகில் வந்து சேர்வதற்கு முன்பே அவர்கள் கர்ஜித்து வரும் கோஷங்களின் இடிமுழக்கம் அவர்கள் வரவைத் தூது சொல்லி எதிரொலித்தது.

"வாழப்பிறந்தோம், சாகமாட்டோம்!"

"வேலை கொடு, அல்லது சோறு போடு!"

"போராடுவோம், வெற்றி பெறுவோம்!"

"போராடுவோம், வெற்றி பெறுவோம்!"

எனப் புயலின் வரவை முன்னறிவித்து உறுமிக்கரித்து முன்னேறி வரும் சூறைக் காற்றின் ஓலத்தைப்போல் அந்தக்கோஷங்களின் முழக்க ஒலி நிமிஷத்துக்கு நிமிஷம் அதிகரித்துக் கொண்டிருந்தது; சாலைப்புறத்தில் கூடி நின்ற மக்களெல்லாம் அந்த முழக்க வொலி கேட்டுச் சுறுசுறுப்படைந்தார்கள்.

இத்தகைய புதிய உணர்வு வெள்ளம் புறப்பட்டு மக்கள் மனத்தில் புதிய உணர்ச்சியையே வேரூன்றச் செய்ததை உயிரோவியமாகத் தீட்டி விடுகிறார் ரகுநாதன்.

போராட்ட வீரர்கள் தலைநகர்க்கேப் போராடத் துணிந்து புறப்பட்ட உணர்வு நாடெங்கும் தன் ஆற்றலைப் பரப்பியது. பல தொழிற்சங்கங்கள் அவர்களுக்கு ஆதரவாக ஊர்வலம் நடத்திடத் தீர்மானம்

போட்டுத் தங்கள் ஆதரவைத் தந்தனர். இப்படி நற்பணியின் உறவு பெருகியது. அந்த உணர்வுத் தீயைத் தன் நெஞ்சினகத்துப் பதித்துக் கொண்ட மணி, திரும்பவும் தன் ஊருக்கு ராஜி என்ற தொழிற்சங்கத் தலைவருடன் சென்று வாடிக்கிடந்த மக்களிடையே போராட்ட உணர்வைத் தூண்டி நல்வாழ்வு நோக்கி நடைபோடத் தூண்டிவிடுகிறான்.

ஒரு காலத்தில் வாழ வழியற்றுத் தன்னம்பிக்கை இழந்து எல்லாவற்றையுமே வீசி எறிந்துவிட்டு ஓடிப்போன மணிதான் புதிய உணர்வுடன் நம்பிக்கையுடன் ஒளிமயமான எதிர்காலத்தைத் தொழிலாளர்க்கு உண்டாக்க அவர்கள் போராட்டத்தைக் கட்டி அமைக்க முடியும் என்ற வீறுடன் திரும்ப வருகிறான். இப்படி இழந்த நம்பிக்கையை மீண்டும் பெறவும், உணர்வுற்ற நெசவாளர் சமூகம் உணர்ச்சி பெற்றால் எப்படி எழும் என்பதையும் இதை அடக்க முயலும் எதிராளியின் வல்லமை எது எனவும் ரகுநாதன் புதிய சமுதாய மாற்றத்தை யாவரும் உணரும் வகையில் தந்துள்ளார். இவ்வகை அரசியல் நாவல் தமிழ் நாவலுலகில் கேட்கும் புதிய குரல்.

ஆயிரக்கணக்கான நெசவாளிகளின் வயிற்றுப் பிரச்சினையைப் பல நிலைகளிலிருந்து ஆராய்ந்து நாவல் வடிவில் எழுதியுள்ளவர் ரகுநாதன்.

தொடக்கத்தில், சாதாரணக் கைத்தறி நெசவாளியாக மாதாமாதம் துணிக்கடைக்காரர்களிடம் நூல் வாங்கி நெய்து கொடுத்த கூலியைக் கொண்டு தினமும் உலைப் பானையை ஏற்றிவரும் வடிவேலு முதலியார்

அன்னியத் துணி மறியல் போராட்டத்தில் 1930-ஆம் ஆண்டே ஈடுபட்டுச் சிறை சென்ற காந்தியவாதி ஆவார். அவர் பெருவாழ்வுக்கு ஆசைப் படாத அன்றாடங் காய்ச்சி வாழ்வு வாழ்ந்து வந்தார். ஆகஸ்டு தியாகி நிலம் பெறுவதற்குரிய காங்கிரஸ் கமிட்டியிடம் அவருக்கு செல்வாக்கு இல்லாததால் நிலம் கிடைக்கவில்லை. அதனால் அவர் அக்கட்சி மீது கொண்ட நம்பிக்கையிலிருந்து மீள ஆரம்பித்ததே இந்திய சமுதாயத்தின் ஒருவகை மாற்றத்தை வெளிப்படுத்துகிறது.

காங்கிரஸின் அரசியல் போராட்ட காலத்தில் அதன் பரம வைரிகளாகவும், ஆகஸ்டுச் சுதந்திர காலத்தில் அதன் விசுவாசிகளாகவும் மாறியுள்ள உள்ளூர்ப் பணக்காரர்களையும் அவர்கள் யுத்த காலத்தில் கொள்ளையாகத் திரட்டிய பணத்தையும் எண்ணும்போது அவரைப் போன்ற-வர்களால் தம்மையறியாமல் காங்கிரஸை வெறுக்கத் தொடங்கினர். இந்த நிலைமாற்றமும் நினைப்பு மாற்றமுமே 'பஞ்சும் பசியும்' காட்டும் சமுதாய மாற்றமாகும்.

கோயில் நிர்வாகத்தைக் கையில் வைத்திருந்த மைனர் முதலியாரும் ஊரில் பெரும் பணக்காரராயிருந்த தாதுலிங்க முதலியாரும் பாட்டாளிகளைக் கசக்கிப் பிழிவதில் ஒன்றுபட்டனர். அவர்கள் வாழ்ந்த அம்பாசமுத்திரம் விட்டகுறை தொட்டகுறையாகவுள்ள அரைகுறை அடிமை நாட்டின் அனுபவ சித்திரமாக விளங்கி வருகிறது.

ஒருபுறம் தர்க்க போதம் பெற்றுப் பற்பல போராட்டங்கள் நிகழ்த்தி, வெற்றி கண்டது உறார்வி மில் தொழிலாளி வர்க்கம்; இன்னொரு புறம் நெல்லிக்காய் மூட்டை போன்ற, ஊசலாட்ட மனப்பான்மை கொண்ட சிறு முதலாளிகள், கைத்தறி நெசவாளிகள், சிப்பந்திகள் முதலியோர் கூட்டம். ஒருபுறம் பகாசுரப் பசியோடு இரவும் பகலும் ஆயிரக்கணக்கான தொழிலா-ளர்களைக் கொண்டு இயங்கும் உறார்வியின் பஞ்சாலை; மறுபுறத்தில் முக்கித் தக்கி வளர முயலும் உள்நாட்டுச் சிறு முதலாளிகளின் இயந்திரத் தொழில் முயற்சி. ஒருபுறம் இயந்திர சாதனமும் மின்சார உற்பத்தியும் நிறைந்த தொழிற்சாலைகள்; மறுபுறத்தில் ஆதீன அடியார்க்கு நல்லார்களின் தரகுப் பிள்ளைமார் என்றத்தடியடித் தம்பிரான்களின் நிலப்பிரபுத்துவச் சுரண்டலுக்கு இரையாகிக் கொண்டிருக்கும் பிற்போக்கான விவசாயச்சங்கம். ஒருபுறம் அன்னிய முதலாளித்துவம்; மறுபுறம் உள்நாட்டு நிலப்பிரபுத்துவம் ... என இரு வேறுபட்ட உலகைத் தெளிவாகக் காட்டுகிறார்.

இந்தப் பழமையும் புதுமையும் கலந்த சமுதாயத்தில் முற்போக்கு மனம் படைத்த இளைஞர் கூட்டம் மணி, கமலா, சங்கர் வடிவில் வெளிப்படுகின்றது. அவர்கள் பார்வையில் ரயில்வே புத்தகக் கடையிலே ஒரே அமெரிக்கக் குப்பை இலக்கியம் குவிந்து கிடக்கிறது; அவற்றில் ரசாபாசமான படங்கள் தலைப்புகள் பார்க்கச் சகிக்காததாக இருப்பதை எண்ணி அவர்கள் அமெரிக்கா நமது நாட்டை விலைக்கு வாங்காமல் நமது ஆத்மாவையே விலைக்கு வாங்கும் என அஞ்சினர். இப்படி இளமையில் புதிய முற்போக்குக் கருத்துக்கள் தளிர்ப்பதைக்காணலாம்.

உலக அரங்க மாற்றத்தினால் இந்திய மில் துணிகளுக்குக் கிராக்கியும் பொது மக்களிடையே துணிப்பஞ்சமும் ஏற்பட்டது. வெளி நாடுகளிலும் கைத்தறித் துணிக்குக் கிராக்கி அதிகமாயிற்று. அதன் காரணமாகவும், யுத்த காலத்தில் ஏற்பட்டிருந்த பண வீக்கத்தில் கைலாச முதலியார் போன்றவர்கள் கை பலப்பட்டாலும் அவர் நெசவாளிகள் பால் கொண்ட பற்றைப் பொறுத்துக் கொள்ள முடியாத அவரைச் சார்ந்த முதலாளிகள் அவரையும் அவர் குடும்பத்தையும் பொருளாதாரச் சிக்கலில் சிக்க வைத்துத் துடிக்கச் செய்து மகிழ்ந்தனர். தற்கொலை செய்து கொள்வது, குடும்ப உறுப்பினர் ஓடிப்போவது, வீடே பிளவுபடுவது எனப் பல துன்பங்களை அது அடைகிறது. வரலாற்று நிகழ்ச்சிக்கு அடிப்படையான காரணங்கள் யாவை என்பதைச் சமுதாய அணுகுமுறைச் சிந்தனையோடு ஆராய்வது இன்றியமையாதது. இத்தகைய நோக்கத்தோடு இரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' விளக்குகிறது எனலாம். வாழ்வின் அடையாளத்தைத் தெரிந்து கொள்ளும் வண்ணம் இந்நாவல் விளங்குகின்றது. ஆசிரியர் நெசவாளர்களுடைய அடிப்படை உரிமைகளை வற்புறுத்துகிறார். தனிமனிதனுடைய நல்வாழ்வே முதன்மைக் கொள்கையானதால் அவர்களுடைய வளர்ச்சிக்காக நல்ல சூழல்களை உருவாக்க வேண்டும் என்பதை இந்நாவல் பிரதிபலிக்கின்றது. தமிழ் நாவல் வரலாற்றில் முதல் முதலாக உழைப்பாளர் வர்க்கம் ஒரு சக்தியாக விளங்குவதை இந்நாவல் சுட்டுகின்றது. செல்வராஜின் 'மலரும் சருகும்', 'தேநீர்' என்னும் இரு நாவல்களும், பொன்னீலனின் 'கரிசலும்' சின்னப்பபாரதியின் 'தாகமும்' பண்ணைகளிலும், தேயிலைத் தோட்டங்களிலும்

புரட்சிகரச் செயல்களுக்கு வழி வகுக்கின்றன. எஸ்டேட் தொழிலாளர்களின் வாழ்க்கையையும் அவர்களது வலிமையையும் இந்நாவல்கள் எடுத்துரைக்கின்றன. சோசலிச அணுகுமுறையின் மூலம் அவர்களை அணுக முடிகிறது. சாதி மதம் போன்ற தடைகளெல்லாம் இங்குப் பயனற்றுப் போகின்றன.

ஒரு நாவல் முழுமையாக இருக்க வேண்டுமெனில் அவ்விலக்கிய ஆசிரியர்க்கு முன்காலத்தையும் நன்குணர்த்தக்கூடிய உயர்ந்த கொள்கைப் பிடிப்பும் உணர்வும் இருக்க வேண்டும் என ரால்ஃபாக்ஸ் கூறியதை முழுதும் ஏற்றுக்கொண்டு 'மலரும் சருகும்', 'தேநீர்' போன்ற நாவல்களை எழுதியுள்ளார், டி.செல்வராஜ். செல்வராஜின் நாவல்கள் வயலில் பாடுபடும் உழவர்கள் படும் துன்பத்தையும் மலையிலுள்ள தேயிலைத் தோட்டத் தொழிலாளர்கள் படும் தொல்லைகளையும் வெளிப்படையாக உலகுக்கு உணர்த்துவதில் முன்னடி வைக்கின்றன. வளரும் சமுதாயத்தில் கிராம வாழ்வு கட்டுக்குலைகிறது. பழைய சாதி அடுக்கு நிலைகள் தலை குப்புறச் சாய்ந்து வீழும்படி புதிதாக எழுகின்ற பொருளாதார மாற்றங்கள் விரைவாகவும் ஆனால் அதே சமயத்தில் பிறராணைக்குக் கட்டுப்படாமலும் செயல்படுவதையும் துல்லியமாக வரையறுத்துக் காட்டுகிறார்.

<u>சமூக மாறுதல் பிரச்சனையைப் பின்புலமாகக் கொண்ட நாவல்:</u>

ரகுநாதனின் 'பஞ்சும் பசியும்' புதிய பாதையை வகுத்துக் கொடுத்த நாவல். இந்த நாவல் அம்பாசமுத்திரம் வட்டாரத்தில் கைத்தறி நெசவாளர் பிரச்சனையை மையமாகக் கொண்டு எழுதப்பட்டது.

இந்த நாவலின் கதாபாத்திரங்களை மிகத் தெளிவாக இரு வர்க்கங்களாகப் பிரித்துப் படைத்துள்ளார் ஆசிரியர். தாதலிங்க முதலியார் முழுவதுமாக வளர்ச்சி பெற்றுள்ள முதலாளி உலகநாத முதலியார் வளரும் கட்டத்தில் உள்ளவர். வடிவேலு, மணி, சங்கர், ராஜு ஆகியோர் கம்யூனிசக் கொள்கையுடைய கதாபாத்திரங்கள். இவர்கள் அனைவரும் தொழிற்சங்க-வாதிகள்.

வடிவேலு முதலியார் நெசவாளர்களின் பிரதிநிதியாக விளங்குகிறார். சக நெசவாளிகள், அவர்கள் படும் கஷ்டங்களுக்குரிய காரணங்கள் என்னவென்று புரியாமல் தவிக்கும்பொழுது, அவர்தான் தெளிவாகச் சிந்திக்கிறார். அவர் கேட்கிறார்:

"உழைக்கிறதுக்குத் தானே முதலாளி, கூலியை உசத்திக் கேக்கிறோம்? அம்மா தானமா கேட்கிறோம்?

"வரும், வரும்னு சொல்லிக்கிட்டு இருந்தா கதை நடக்காது தம்பி. மயிலே மயிலேன்னா இறகு போடுமா? நாம எல்லோரும் நமக்குள்ளே ஒத்துமையில்லாம ... இருக்கப்போய் தான் இவுக நம்மகிட்டே மச்சான் முறை கொண்டாடுறாங்க. மதுரையிலே நெசவாளர் சங்கம் வச்சி ஒன்று சேர்ந்து ஒத்துமையா இருந்ததினாலே எந்த முதலாளியும் தறிகாரகிட்டே அப்படி இப்படின்னு வாய்த்துடுக்காகப் பேசவே பயப்படுதானாம்"

வடிவேலு முதலியார் அதே நோக்கத்திற்காகப் பாடுபட்டுச் சங்கம் வைப்பதிலும் வெற்றி பெறுகிறார். வடிவேலு முதலியார் ஒரு

இயக்கத்தை அமைத்து அதைப் பலப்படுத்தும் பணியை அடக்கமாகச் செய்கிறார். அவரிடம் ஆடம்பரம் இல்லை. ஆனால் மனித நேயம் இருக்கிறது. அவர் உழைக்கும் வர்க்கத்தைச் சார்ந்த அறிவாளி; நெசவாளர்களுக்குப் பொது அறிவு அளிக்க அவர் பல விவாதங்களில் ஈடுபடுகிறார்.

வடிவேலு முதலியாருக்கும், மணிக்கும் பக்கபலமாக இருக்கும் கதாபாத்திரமாக சங்கர் வருகிறார். அவன் பிறப்பால் தாதலிங்க முதலியாரின் மகன். ஆனால் கம்யூனிச இலக்கியங்களைக் கற்கும் மேல்மட்ட சமூக அறிவாளி. நாவலில் மிக நெருக்கமான கட்டம் வரும்பொழுது அவனுடைய வீட்டை விட்டே வெளியேறுகிறான். அவனுடைய வர்க்கத்திலிருந்தே தன்னை வேருடன் பிரித்துக் கொள்கிறான். சமுதாய மாறுதல் வர்க்கப் போராட்டத்தின் மூலம்தான் நடைபெறும் என்பதை சங்கர் உறுதியாக நம்புகிறான்.

சங்கருக்கு அடுத்தபடியாக அவனுடைய நண்பன் மணி ஒரு கம்யூனிச கதாபாத்திரம். ஆரம்பத்தில் கோழையாக இருந்த மணிராஜு என்ற முழுநேர கம்யூனிஸ்ட்டின் தொடர்பால் புதிய பாதையில் அடியெடுத்து வைக்கிறான். ராஜுவின் பார்வை விசாலமானது. மிகவும் பரந்தது. ஆனால் ரகுநாதன் ராஜுவிற்கு இந்த நாவலில் முழு இடம் அளிக்கவில்லை. அதற்குக் காரணம் அவர் எடுத்துக் கொண்ட நெசவாளர் பிரச்னை ஒரு குறுகிய எல்லை படைத்ததே ஆகும். ராஜு இந்த நாவலைப் பொறுத்த மட்டிலும் ஒரு மறைமுக சக்தியாகவே செயல்படுகிறான்.

ரகுநாதன் இவர்களை யதார்த்தப் பூர்வமாகச் சித்திரிக்கிறார். இவர்களை நடைமுறையில் காணும் சாதாரண மனிதர்களாகவே படைத்துள்ளார். ஆனால் 'பஞ்சும் பசியும்' என்ற இந்த நாவல் ஒரு தொழிற்சங்க நாவலாக அமைந்துள்ளது. நெசவாளர்களுக்குரிய ஒரே ஒரு பிரச்னையை மட்டும் மையமாகக் கொண்டு இந்த நாவல் எழுதப்பட்டுள்ளது. இந்த நாவல் எழுதப்பட்ட காலத்தில் நூல் தட்டுப்பாடு ஏற்பட்டது. அதனால் கைத்தறி நெசவாளிகள் பெரிதும் பாதிக்கப்பட்டிருந்தனர். இதன் விளைவாக நெசவாளர் போராட்டம் வெடிக்கிறது. இந்தப் போராட்டத்தை விளக்கும் பொழுது கதை மாந்தர்களும் ஒரு சிறு வட்டத்திற்குள்ளேயே சுழல நேரிடுகிறது. இதன் காரணமாக இந்த நாவலில் தெளிவாகச் சிந்திக்கும் பாட்டாளி வர்க்கப் பாத்திரங்கள் இருந்தும் அவர்கள் செயல் அளவில் சற்று வேகம் குறைந்தவர்களாகவே காணப்படுகின்றனர். இதை சோஷலிச யதார்த்தவாத நாவல்களின் முன் நிலைக்கட்டம் என்று கூறலாம்.

இந்திரா பார்த்தசாரதி குருதிப்புனலில் கூறுவது வேறு விதமாகவுள்ளது. "கல்வி அறிவற்ற இந்நாட்டு மக்களை, வாய்ப்பு உள்ளவர்கள் காலம் காலமாகப் பந்தாடி வந்திருக்கிறார்கள். கைகளைக் கட்டிக்கொண்டு ஒதுங்கியிருந்து தீர்ப்பு வழங்குவதுதான், ஒரு வேளை இந்நாட்டு 'இன்டெலக்சுவல் தர்மம்?[43] என்றும் "சுதந்திரம் பெற்று இத்தனை ஆண்டுகளுக்குப்பிறகும், வல்லான் வகுத்ததுதான் வாய்க்காலாக இருக்கின்றது... தடியெடுத்தவன்தான் தண்டல்காரன்...அன்று முதல் இன்றுவரை ஆளுவது ஒரே வர்க்கந்தான்! இந்நாட்டுக்கு எதிர்காலமே கிடையாதா?[44] என்றும் கோபால், சிவா

வெளிப்படுத்துகின்ற கருத்து ஒரு பெரும் போராட்டத்திற்கு வித்திடுவதாக உள்ளது.

"சமூக ரீதியாக உணர்ச்சிப் பரிமாறல்களைத் தெரிவிக்கும் இலக்கியம், சமுதாயத்தில் மனிதச் சந்திப்பினாலோ அல்லது மோதல்களி-னாலோ ஏற்படும் அல்லது ஏற்படவேண்டிய புதிய மாற்றங்களைச் சொல்லி-யாக வேண்டும்"[45] என்பது இந்திரா பார்த்தசாரதியின் கருத்து.

அதனை அவர் முதலாளி - விவசாயத் தொழிலாளர் வர்க்கப் போராட்டக் 'குருதிப்புனலில்' காட்டுகின்றார். இப்போராட்டம் தஞ்சாவூர் மாவட்டத்தின் ஒரு கிராமத்திலே நடைபெறுவதாகச் சித்திரிக்கப் படுகின்றது. 1969-இல் கீழ வெண்மணி என்ற ஊரில் நடைபெற்ற போராட்-டத்தைக் கலையுருவமாக்கி இந்நாவலில் இந்திரா பார்த்தசாரதி தருகின்றார். கிராமப் புறத்தில் நடந்தாலும், இப்போராட்டத்திற்கு உறுதுணையாக நிற்பவர்கள் இரண்டு டெல்லி நகர இளைஞர்கள் என்ற அளவில்தான் இந்நாவல் இத்தலைப்போடு தொடர்புடையது. கதை நடக்கின்ற களம் முழுவதுமே கிராமப்புறமாக இருக்கின்றது. நிகழ்ச்சிகளையும் செயல்களையும் கோபால், சிவா என்னும் அந்த இரு நகர்ப்புற இளைஞர்கள் நகர்ப்புறக் கல்வியின் கண்ணோட்டத்திலே அணுகுகின்றனர்" வர்க்கப் போராட்டம் நிகழ ஒரு சிறிய கிராமத்திலேயே இத்தனை தடைகள், இருந்தால், இந்தப் பெரிய தேசத்தில் புரட்சி உண்டாக வழி இருக்கிறதா? வழி இல்லை என்று மனந்தளர்ந்து சும்மா இருந்துவிடுவதுதான் விவேகமா? இந்த நாட்டின் கம்யூனிஸ்ட்டுகள் (மாஜிபுரட்சி வாதிகள்!) பார்லிமெண்டரி அரசியல் அமைப்புடன் சமரஸம் செய்துகொண்டு

விட்டதற்கு இந்தச் சோர்வுதான் காரணமாக இருக்க வேண்டும்; என்றும் "புரட்சி கிராமங்களில்தான் உண்டாக வேண்டுமே தவிர, நகரங்களில் ஏற்படும் ஓரிரண்டு கிளர்ச்சிகளைப் புரட்சியாக எண்ணி மயங்கக் கூடாது. நகரத் தொழிலாளிகளிடையேயும், இடைக்கால ஊதியத்துக்குப் போராட்டம் என்ற அளவுக்குப் புரட்சிக் கருத்தையும் கொச்சைப் படுத்திவிட்டார்கள் எனக் கருதுகிறார்.[46]

இந்திய இலக்கியங்களில் உருவ, உள்ளடக்கங்களில் விளைந்திருப்பது போன்றப் புதுமைப் போக்குத் தமிழ் இலக்கியத்திலும் புகுந்துள்ளது. இப்புதுமை வரவை நோக்கி இலக்கியம் படைத்திருப்பவர்களில் இந்திரா பார்த்தசாரதியும் ஒருவர். ஜனரஞ்சக எழுத்தாளர்கள் எழுதத் தயங்குகிற எழுதியிராத பல சிக்கல்களை உள்ளடக்கி இவர் தன் நாவல்களை உருவாக்கி உள்ளார். தமிழ் நாவல் இலக்கியத்தின் புதுமைப் போக்கினை இவர் நாவல்கள் உறுதிப்படுத்துகின்றன. இந்திரா பார்த்தசாரதி அவர்களை எழில் முதல்வன் 'புதுப்புயல்'[47] என்றே குறிப்பிட்டுள்ளார்.

பங்கஜம் நடுத்தர வயதான கன்னையா நாயுடுவிடம் வைப்பாட்டியாக இருக்கிறாள். கன்னையா நாயுடு ஆண்மை இழந்தவர் என்று பங்கஜம் குறிப்பிடுகின்றாள். பங்கஜம் தன்னைவிட இளமையான கோபாலிடம் உறவினைப் பெற்றுக் கொள்வதில் ஆர்வம் காட்டுகின்றாள். பங்கஜம் - கோபால் உறவு கிராமத்தில் நடந்தாலும், கோபாலின் சிந்தனை நகரச் சூழலை வைத்தே இப்பிரச்சனையை எடை போடுகின்றது. இதைப் பற்றிப் பேசும் கோபாலின் நண்பன் சிவா, "அழகாக இருக்கக் கூடிய நடுவயதுக்-காரியின் சாகஸத்திற்கு எந்த இளைஞனும் பலியாவதில் ஆச்சரியமில்லை

பர்உறாப்ஸ் மதர் இமேஜ்! என்று குறிப்பிடுகிறாள்.[48] இங்கு மகளிரின் மனநிலையைக் காட்டுகின்றார் இந்திரா பார்த்தசாரதி.

கு.சின்னப்பபாரதியின் 'தாகம்' என்ற நாவல் நிலத்தை உழுகின்ற ஆணும் பெண்ணும் நிலத்தை நம்பியே வாழும் தன் வாழ்க்கையில் எந்தப் புதிய மாற்றத்தையும் உணராத பழமை மூடிய நிலையில் மாரப்பனும் அவன் மனைவியும் அவர்கள் வளர்த்து வந்த உயிரினங்களும் வாழ்க்கை வாழ்கின்றனர். நிலக்கிழார்கள் அந்த அறியாமையை பயன்படுத்திப் பண அறுவடை செய்வது மட்டுமின்றி மாரப்பனின் நில உடைமையைப் பறிப்பதுடன் புதுமை உணர்வு கொள்ளும் புதிய கதிர்களை மறைக்கப் பயன்படுத்தும் பழமையைக் காக்கும் கருவியாகவும் மாற்றிக் கொள்கின்றனர். இந் நிலையில் தான் மாரப்பனின் மகனே பழைய கட்டுக்களிலிருந்து வெளியேறி கீழ்ச் சாதிப் பெண்ணை மணப்பதுடன் பழைய நிலவுடைமைக்கு எதிராகக் கொடி பிடிப்பதுடன் நில அடிமை மக்களின் விலங்குகளை உடைக்கவும் முன் வருகிறான். இப்படி விடுதலைத்தாகமே சமுதாய தாகமாக மாறுகிறது. ஆளவந்தார் தெருவிலேயே அடிமைகளின் உரிமைக்குரல் எழுகிறது.

மனித வரலாற்றில் முதல் முறையாக இப்பொழுதான் உழைக்கும் வர்க்கம் தனக்கென இயக்க அடிப்படையில் ஒன்று திரண்டு தனக் கென ஒரு கொள்கையை வழிகாட்டியாகக் கொண்டு அரசியல் அதிகாரத்திற் காகப் போராடவும், போராடிக் கைப்பற்றவும் செய்திருப்பதைத் தற்காலிக நிகழ்ச்சியாகக் கருதாமல் சமூக வளர்ச்சியின் தவிர்க்க முடியாத பரிணாம

வளர்ச்சியாகக் கருதிய கு.சின்னப்பபாரதி தன் 'தாகம்' என்ற நாவலை அக்கருத்தின் வெளிப்பாடாகப் படைத்துள்ளார்.

இயற்கையைத் தன் உழைப்பின் வியர்வையால் தன் வாழ்வு உயர்வுக்குப் பாடுபட்டுப் படைத்துக் கொள்ள முயல்கிற மாரப்பனின் விவசாயக் குடும்பம். மாரப்பன் மனைவி மாரக்காள். மூத்த மகன் கந்தன். இளையவன் பழனியம்மாள். இளைய பெண் முத்தம்மாள். இந்தக் குடும்பத்தினர் உழைத்து உழைத்து கட்கத்திலும் கால் மடிப்புகளிலும் வியர்வை படிந்து காய்ந்தவிடங்களில் வளைவுக் கோடுகளாக உப்புப்படர்ந்த நிலையில் பெருமூச்சு விட்டனர்.

விடிந்தது முதல் இரவு வரை ஓயாத வேலைதான், கடலை பறிப்பதில் தான் எத்தனை வேகம்! மாரக்காளின் 'கை விரல்கள் வேகமாக இயங்க இயங்க அவள் முகத் தோற்றம் வெல்ல முடியாத ஒரு பகைவனிடம் உக்கிரமாகச் சண்டையிடுவது போலத் துலங்கியது. இப்படி இயற்கையுடன் போரிட்டு வாழ நினைக்கும் குடும்பச் சமுதாயத்தில் எத்தனையோ போராட்டங்களை எதிர்நோக்க வேண்டியிருந்தது.

பண்ணை அடிமைகள் திருமணம் மாரப்பன் வீட்டில் நடந்த திருமணத்துக்கு மாறுபட்டது. அடிமைத் தனத்தை மேலும் இறுக்கும் சங்கிலியாக அது பயன்பட்டது. பண்ணைக்காரர் கொடுங்கரம் அதிலும் நீண்டுவிட்டது: இப்படிப் பட்டவற்றையெல்லாம் எதிர்த்தனர். சாட்டையடி சாணிப்பால் இப்படிப்பட்ட கொடுமைகளை உணர்ந்து விவசாயிகள் ஒன்றாயினர். அடிமையை இரத்தம் வர அடித்து அவன் தாகத்துக்குச் சாணிப்

பாலைக் குடிக்கச் செய்தனர். வாழ்க்கைத்தாகமே சமுதாய தாகம். நிலத்தில் உழைக்கும் கட்டம் உண்மையை உணர்ந்த உரிமை பெற ஊர்வலம் ஆண்டைத் தெருவில் குரலெழுப்பி வந்தது. உரிமை வெள்ளம் பொங்கியது. அடிக்கு எதிரடி என்ற விழிப்புணர்வை தாகம் நன்கு காட்டுகிறது. பழைய கட்டுத்திட்டம் உடையும் ஒலி நன்கு இதில் கேட்கிறது. உழைப்பாளியின் வாழ்வமைப்பிற்கான, எதிர்கால வர்க்க பேதமற்ற புரட்சிக்கான தாகத்தை யாராலும் அழிக்க முடியாது என்ற உறுதியான நம்பிக்கையை உழவர் எழுச்சி வாயிலாக இந்த நாவல் காட்டுகிறது.

நிலவுடைமைச் சமுதாயத்தில் மனிதனை மண்ணாசை எப்படி-யெல்லாமோ அலைக்கழிக்கிறது. சிறு நிலக்கிழார்கள் பெருநிலக்கிழாராக மாறுவதற்குப் பெரு முயற்சிகளில் ஈடுபடுகின்றனர். பெருநிலக்கிழார்கள் சிறு உடைமையாளர்களின் நிலங்களை விழுங்கி ஏப்பம் விடுவதற்கு வேலை பார்த்துக் கொண்டிருக்கின்றனர். மண்ணாசை என்பது மனிதனை மனிதத் தன்மையற்றவனாக்கி-விடும் என்பதற்கு சின்னப்பபாரதியின் 'தாக'த்தில் வருகின்ற செங்கோடக் கவுண்டர் ஓர் எடுத்துக்காட்டு.

நிலவுடைமைச்சமுதாயத்தில் கொத்தடிமைகள் உருவாகிறார்கள் என்பதை இந்த நாவல் அம்பலப்படுத்துகிறது. தங்கள் உழைப்பையும் உரிமைகளையும் உயில் எழுதிக் கொடுத்துவிடுகின்ற இந்த கொத்தடிமைச் சமுதாயங்கள் நில உடைமைச் சமுதாய அமைப்பின் ஒரு கொடுமையான அம்சத்தை நிரூபிக்கும். கிராம சாம்ராஜ்யங்களில் நிலப் பிரபுத்துவ மன்னர்கள் மொத்தமாய் ஒரு விலை கொடுத்து உழைக்கும் மனிதர்களை

நுயுட்கால அடிமைப் பிராணிகளாக்கி விடுகிற இந்த மனித அநீதி, ஜனநாயக ஆட்சியாளர்களின் கவனத்தை எட்டுவதற்கே ரொம்பக் காலமாயிற்று.

நிலத்தின் புழுதியிலே இறங்கி வியர்வை சிந்தி உழைக்கிற விவசாயத்தொழிலாளி, கலி நெல்லை வாங்கி வந்து அரை வயிற்றுக் கஞ்சியில் தன் அடிமை வாழ்வை அனுபவித்து வந்தான். மனித உழைப்பைக் குத்தகைக்கு எடுத்துக் கொண்ட உடைமையாளர்களோ அவர்களது உழைப்பின் பலனை உட்கார்ந்து உண்டு சுகஜீவனம் நடத்தி வந்தனர். இவ்வாறு நில உடைமைச் சமுதாய அமைப்பு மனிதர்களை இரு வர்க்கங்களாகப் பிரித்து, அவர்களிடையே வர்க்க உணர்வுப் போராட்டங்களை உருவாக்கிவிடுகிறது.

மனிதர் யாவரும் பூமித்தாயின் பிள்ளைகளே! இந்த பூமியில் பிறக்கும் ஒவ்வொரு மனிதரும் இங்கு அறுவடையாகும் உணவில் பங்கு பெறும் உரிமை கொண்டவர்களே. பூமியின் நிலப்பகுதிகளை சமஸ்தானங்களாய்க் கூறு போட்டுக் கொண்டு ஒரு காலத்தில் மன்னர்கள் மன்னுரிமை செலுத்தினார்கள். மன்னர்களும் தனி மனிதர்களே! பரம்பரை பரம்பரையாக பட்டா போட்டுக் கொண்டு ஒரு சில வம்சாவளிகள் மட்டுமே அனுபோக பாத்தியம் பெற்று வருவது மனித நீதிக்குப் புறம்பானதே.

நீதிக்குப் புறம்பான இந்த நியதிகளை நில உடைமைக்காரர்களையும் கொத்தடிமைகளையும் அவர்களுக்கிடையே தார்மீக விரோதமான இடைவெளியையும் நிரந்தரப்படுத்தியது. மன்னராட்சி முறைக்கு விடைகொடுத்துவிட்ட மக்களாட்சி முறையில், இந்தப் பரம்பரை

நியதியை மாற்றி, மனிதாபிமான நீதியை அறிமுகப்படுத்தும் நடவடிக்கையின் ஆரம்ப கட்டமாக நில உச்சவரம்பு முறை கொண்டுவரப்பட்டது. இதனால் விளைந்த பயன் மிகக் குறைவே. இந்தச் சமூகச் சீர்திருத்த நடவடிக்கை யானது சமத்துவச் சமுதாயம் காண்பதற்கான நிரந்தரத் தீர்வு அல்ல.

நிலத் துண்டுகளுக்காக மனிதர்கள் ஒருவரை ஒருவர் பகைமைப் பூசல்களை வளர்த்துக் கொள்வதும், பகை நிலங்களிலே இரத்த நீர் பாய்ந்து கொலை உணர்வுகள் விளைச்சலாகி மனிதத் தலைகள் அறுவடை யாவதும், நில உடைமைச் சமுதாயங்களில் காலம் காலமாய் நிகழ்ந்து வருகிற உண்மைக் கதைகள்.

நீதி மன்றங்களில் கேஸ் கட்டுகளாய் அடுக்கப்பட்டுக்கிடக்கும் நிலத்தகராறு சம்பந்தமான சிவில் மற்றும் கிரிமினல் வழக்குகளின் எண்ணிக்கை கணிசமானது. இதன் பொருட்டு வாதி, பிரதிவாதிகளும் வக்கீல்களும் தூங்காத சிந்தனைகளில் மூளையைக் கசக்கிக் கொள்வதிலும், நீதி மன்றங் களுக்கு அலைந்து கொண்டிருப்பதிலும் ஏற்படுகின்ற காலக் கழிவுகள் அனந்த மானவை. உழைப்பதற்குப் பயன்படுகின்ற மனித சக்திகள் இவ்வாறு மாதக் கணக்கிலும் வருடக் கணக்கிலும் விரயமாகிவிடுகின்றன. நாமே சிக்கல்களை உருவாக்கிவிட்டு, நாமே சிக்கு எடுத்துக் கொண்டிருக்கிறோம்.

கிராமங்களும் அவற்றின் விளை நிலங்களுமே எல்லா மனித வர்க்கத்தினரின் உணவுத் தேவைகளுக்கும் ஆதாரமாகின்றன. பிற தேவை களுக்கு விஞ்ஞான அறிவும் எந்திர ஆலைகளும் ஆதாரமாகின்றன. இரு வகையான

ஆதாரங்களையும் மனித குலத்தின் சார்பில் நிர்வகிக்கும் இரு பெரும் சக்தி-களாம்ப் பொதுவுடைமைத் தத்துவமும், தனி உடைமைச் சுதந்திரமும் உலக நாடுகளால் பின்பற்றப்படுகின்றன. பொதுவுடைமைத் தேசங்களில் தனி மனிதத் தேவைகள் அரசாங்கத்தால் பாதுகாத்துச் சீராக வழங்கப்பட்டு-விடுகின்றன. தனி உடைமைச் சுதந்திரமுள்ள ஜனநாயக, முதலாளித்துவ தேசங்களில், மனித குலத்தின் ஆதாரத் தேவைகளை நிர்வகிக்கும் உரிமையும் வாய்ப்புகளும் தனி மனிதர்களுக்கே தரப்படுகின்றன.

வளர்ச்சியடையாத ஒரு ஜனநாயக தேசத்தில் தனி மனிதர்களின் உயர்குலப் பிரதிநிதிகள் தொழிலாள வர்க்கத்துக்கு உழைப்பின் பலன்களை நியாயமான அளவிற்குப் பங்கிட்டுத் தருவதற்குச் சாதாரணமாய் முன் வருவதில்லை. இதன் விளைவு வர்க்கப் போராட்டத்தில் வந்து முடிவது தவிர்க்க இயலாததாகி விடுகிறது. ஒற்றுமையாகப் போராடுவதே தங்கள் உரிமைகளைப் பெறுவதற்கு இவர்களுக்குக் கிடைக்கிற ஒரே வழியாகிறது.

கொத்தடிமைகளாம்ப் பணிந்து வாழுகின்ற மனிதப் பிராணிகளா-யினும், சரியான தூண்டுதலும், வழிகாட்டுதலும் கிடைத்துவிடுகிறபோது, அவர்களும், போராட்டக்குரல் எழுப்பி உரிமைகளைப் பெற்றுவிடுவது சமூக நீதியாகவும், காலத்தின் கட்டாயமாகவும் ஆகிவிடும். இந்த நீதியின் குரலுக்குச் செவி கொடுக்க மறுத்து, பாதிக்கப்பட்டவர்களின் பட்டினியோடு விளையாடுகின்ற பண்ணையார்கள் பாட்டாளி வர்க்கத்தினரால் தீர்த்துக் கட்டப்படுவது ஒரு சூழ்நிலைக் கட்டாயமாகிவிடக்கூடும்.

எந்திர ஆலைகளில் உழைக்கின்ற பாட்டாளிகள் தங்கள் உரிமைகளுக்காக முதலாளிகளை எதிர்த்து இயக்க ரீதியில் போராடுகின்ற சமூக நீதி ஏற்கனவே நடைமுறைக்கு வந்துவிட்டது. ஆனால் விளை நிலங்களில் உழைத்து வாழுகின்ற பாட்டாளிகள் தங்கள் உரிமைகளுக்காக நில உடைமைக் காரர்களை எதிர்த்துப் போராடுவதற்கு இயக்க ரீதியான வழிமுறை இன்னும் சரியான முறையில் உருவாக்கப்படவில்லை. ஆனால் இந்த சமூக நீதியும் கிராம சாம்ராஜ்யங்களில் புரட்சிகரமாய் மலர்ந்தே தீரும் என்பதைத் 'தாகம்' நாவல் முன்னோட்டமாய்ப் பிரகடனம் செய்கிறது.

மனித சமுதாயத்தில் எந்த ஒரு மட்டத்திலும் சமூக நீதிகள் காலம் காலமாய் உறங்கிக் கொண்டிருப்பதில்லை. என்றைக்கேனும் அது விழித்து எழுந்தே தீரும். தாக உணர்வுகள் ஒன்றுகூடும்போது, மனித சக்திகள் புரட்சியாய், போராட்டங்களால் வெடித்தே தீரும். அப்போது அடிமை இருள்களின் விடியலுக்கான பூபாளங்கள் ஒலித்தே தீரும் என்ற சமூக நீதியின் இலக்கணத்தை இந்த நாவல் எச்சரித்துக் கூறுகிறது.

எழுத்தாளர்கள் மனித நேயமுடன் வாழ்ந்து தான் வாழும் சமுதாயத்தில் அப்பன்பு சிறப்புற அமைய தங்கள் எழுத்தில், இவை வலியுறுத்தப்பட வேண்டும். எழில் முதல்வன் ஏழை எளியவர்கள் மீதும், சமூகத்தின் வாயில்லாப் பூச்சிகள் மீதும் கொண்டுள்ள அன்பையும் இரக்கத்தையும் நம்மால் உணர முடிகிறது. அனாதைச் சிறுமி தங்கத்தால் தனக்கு நேரும் துன்பத்தை எதிர்த்துப் போராட முடியவில்லை. ஆனால் விவசாயக்

கூலியான – தாழ்த்தப்பட்ட குலத்தில் பிறந்த பெத்தாள் சாம்பனோ தன் பண்ணை மிராசுடன் மோதுகிறான்.

'நான் முழுக்க மாடா உழைச்சிட்டுக் கூலி கேட்டா, போடான்னு சொல்றீங்களே, எத்தினி நாளைக்கு வவுத்லே ஈரத்துணியைப் போட்டுக்கிட்டு பட்டினியாகக் கிடக்க முடியும்?'[49]

ஓர் ஆண்டானைப் பார்த்து அவன் அடிமை கேட்கும் இந்தக் கேள்வியில் நம் சமுதாயத்தின் ஓர் அடிப்படைப் பிரச்சினையே ஊடுருவி நிற்பதை நம்மால் தெளிவாகக் காணமுடிகிறது. அடிமை குனிந்து கொடுக்கவில்லை; தலை நிமிர்ந்து நிற்கத் துணிந்துவிட்டான் என்பதையும் கதை சொல்லாமல் சொல்கிறது.

சமூகம் போகிற போக்கையும், அது செய்யும் அநியாயத்தையும் ஒரு ரயில்வே போர்ட்டரைக் கொண்டு ஒரு கதையில் குத்திக்காட்டுகிறார் ஆசிரியர். "டெர்லின் சட்டை போடுகிறான்; பஸ்ட்கிளாசிலே வந்து எறங்கிறான். அவன் போயி பத்துப் பைசாவுக்கு யோசிக்கிறான்னா என்ன நாயம்?" என்று கேட்கிறான் ரயில்வேக் கூலி.[50]

'அலைவாய்க்கரையில்' நாவலில் இடம் பெற்றுள்ள இளம் தலைமுறையினர் அனைவருமே பாட்டாளிவர்க்கத்தின் போர்க்குணம் மிகுந்தவர்களாக உள்ளனர். ஆனால் அவர்கள் மார்க்சியத்தைப் பின்பற்றுபவர்கள் அல்லர்; கம்யூனிஸ்டுகள் அல்லர்; வர்க்கப் போராட்டம் தவிர்க்க முடியாதபடி நிகழ்கையில் அதை உணர்ச்சி நிலையில் நின்று அணுகுபவர்கள்

இந்தக் கதை மாந்தர்கள். ஒரு சமூக அநீதி, அடக்குமுறை ஒழிய வேண்டுமானால், கலகம் வேண்டும் என்ற மனப்பான்மை இவர்களிடம் மேலோங்கி உள்ளது. வயது முதிர்ந்த பிச்சமுத்துப் பாட்டா கூறுகிறார்:

"கலகம் வந்தாத்தான் நாயம் பொறக்கும், எதுமே கலங்கித்தானே தெளியும். இப்பம் கோயில் குத்தகை இருபத்தஞ்சாந்தேதி ஏலம் விடுவாங்க. நாம இதுக்கு ஒத்துக்கலே, துவித்தெளிப்புக் குடுக்க மாட்டோம்.... அந்தக் காலத்தில்.....சாமிக்கு நாம கொடுக்க வேண்டிய நிலை. இப்பம் அதெல்லாம் மாறிப்போச்சு. துணிவெல அதிகம். அதனால நாம ஒன்னிச்சு நிக்கணும். மீனை நாம ஏலம் விட்டுப் பணம் வாங்குறாப்பல துவியையும் ஏலம் விடுவோம்".[51]

இந்த நிலை அவர்களை ஒன்று படுத்துகிறது. இந்த நிலை ஒரு அவசர கால நிலை. இந்த நாவலில் நசரேன், யோவான், மயோன், ஜான், பென்ஜமின், சந்தியாகு எல்லோரும் இந்த நிலையில் ஒன்றுபடுகின்றனர். இவர்கள் ஒரு புரட்சிகர சூழ்நிலையில் மட்டும் ஒன்றுபடுகின்றனர். உணர்ச்சி வசப்பட்ட மக்கள் என்ன செய்வார்களோ அது இயல்பாக இடம் பெற்றிருக்கிறது. இயந்திரப் படகு உரிமையாளர்கள் மீன் பரவர்களின் உழைப்பைச் சுரண்டும் பொழுது, அது உணர்ச்சிப் போராட்டமாக வெளிப் படுகிறது. தானியேல் என்ற வட்டக்காரனை பீட்டர் கொன்றுவிடுகிறான்.

"ரத்தத்தைக் கண்டு அவனுக்கு அச்சம் எவ்வாறு வரும்? ஆயிரமாயிரமாம் உயிர்கள் துடித்துச் சாவதைத் தொழிலின் வெற்றியாம் மகிழ்ந்து கொண்டாடும் பண்பில் ஊறியவனுக்கு இவன் உயிரின் அருமை எப்படித் தெரிந்திருக்கும்? வட்டக்காரன் அவன் .... வட்டக்காரன் .... இவன் உழைப்பைப் கொள்ளையிடும் அக்கிரமக்காரன்....... அவனை.......அவனை......."[52]

'அலைவாய்க்கரையில்' ராஜம் கிருஷ்ணன் கையாண்டுள்ள முறை ஒரு குறிப்பிட்ட வகையான சுரண்டல் வடிவத்தை எதிர்த்துப் போராடும் மக்கள் கூட்டம் ஒன்றையே படைத்துக் காட்டுகிறார் ஆசிரியை. இவர்களை உயர்வு நிலையில் ஒருமைப்படுத்துகிறார்.

"மாமா, சரித்திரம் பாத்திட்ருந்தா தரித்திரம் தொலைஞ்சிருமா?"[53]

"பெஞ்சமின் ஆங்காங்கு எழும் முணுமுணுப்புக்களைப் பொருட்டாக்கவில்லை, இப்ப கிருஸ்தவம் எம் மாட்டோ சொல்லுது, அடுத்தவன் கஷ்டப்பட பார்க்கக்கூடாதுன்னிருக்கு. கள்ளுக் குடிக்க காண்டாமின்னு சொல்லுது. உம் பெஞ்சாதிய விட்டு வேறு ஒரு பொன்ணைப் பார்க்கா தேன்னுது. இங்கே இருக்றவங்க எல்லாமே அப்படிப் பார்த்த கிறிஸ்துவத்திலே விதிக்கப்பட்ட நாயத்தை எல்லாம் மீறுறவங்கதா!........நம்ப கோரிக்கை

நாயமான ஒன்னு. நம்ப குடும்பங்களை நல்லபடி முன்னுக்குக் கொண்டுவர நாம பாடுபட்டுக் கொண்டு வரும் மீன் பாட்டின் உரிமையக் கேக்குறம்"....[54]

என்ற எட்வின்

இந்த உரிமைக் குரல் நசரேன், யோவான், பிச்சமுத்துப் பாட்டா போன்றவர்களைப் போர்க்குணம் மிகுந்த மனிதர்களாக மாற்றிவிடுகிறது. போராட்டம் வெற்றிபெறுகிறது. மனிதனை சுரண்டலுக்கு எதிராகப் போராடும் உழைப்பாளிகள் இயந்திரப்படகுகளுடன் போட்டியிட வேண்டியிருக்கிறது. இதன் காரணமாக போராட்டம் புதிய பரிமா-மத்தைப் பெறுகிறது.

ஒரு குறிப்பிட்ட காலத்தில் மக்களுக்கு என்ன தேவைப்-படுகிறதோ அந்தத் தேவையை - அக்கால மக்களின் குறைகளைப் போக்குவதற்காக ஏதாவது ஒன்றைப் படைப்பாளன் படைப்பான் என மேலை நாட்டறிஞர் எச்.ஜி.வெல்ஸ் என்பார் புதினத்தைப் பற்றிப் புகலும் கருத்துக்கள் ஈண்டு நினைக்கத்தக்கன.

"தற்கால உலகில் நம்மிடையே எழும் பல்வேறு சிக்கல்-களையும் இனிமேல் புதினத்தின் மூலம் தான் எடுத்துரைக்கப்போகிறோம். எதிர் காலத்தில் புதினமே சமூக இடையீட்டாளராகவும், ஒருவரை ஒருவர் நன்கு புரிந்து கொள்வதற்கு ஏற்ற வாயிலாகவும், தன்னையுணர்ந்து கொள்வதற்குரிய கருவியாகவும், சமய, சமூகத் தொடர்பான சிக்கல்களை

எடுத்து விளக்கங்களாகவும் பொது மேடையாகவும் திகழப் போகிறது" என்பதை உறுதி செய்கின்றார் எழில் முதல்வன்.[55] இக்கருத்தினால் புதின இலக்கியத்தை நடப்புக் காலக் கண்ணாடியாக மட்டுமின்றி, எதிர் கால வழிகாட்டியாகவும் விளங்கப் போவதை உணர முடியும்.

## அடிக்குறிப்புகள்

1. அகிலன், எங்கே போகிறோம்?, ப.61
2. மேலது, ப.20
3. மேலது, ப.312
4. மேலது, ப.235
5. மேலது, ப.308
6. மேலது, ப.363
7. மேலது, ப.5
8. மேலது, ப.180
9. மேலது, ப.208
10. மேலது, பக்.6-7
11. நா.பார்த்தசாரதி, சத்திய வெள்ளம், பக்.461-462
12. மேலது, ப.491
13. மேலது, ப.365-377
14. மேலது, ப.367

15. நா.பார்த்தசாரதி, சத்திய வெள்ளம், ப.381
16. மேலது, ப.361
17. மேலது, பக்.162-185
18. மேலது, பக்.221-222
19. நா.பார்த்தசாரதி, கற்சுவர்கள், பக்.99-102
20. ர.சு.நல்லபெருமாள், திருடர்கள், ப.12, 58, 238
21. ராஜம் கிருஷ்ணன், புயலின் மையம், ப.143
22. மேலது, ப.150
23. ர.சு.நல்லபெருமாள், போராட்டங்கள், ப.177, 180, 181
24. மேலது, ப.420
25. ராஜம் கிருஷ்ணன், முள்ளும் மலர்ந்தது, ப.29, 35, 36
26. மேலது, ப.46
27. மேலது, பக்.65-67
28. மேலது, ப.344
29. ராஜம் கிருஷ்ணன், வேருக்கு நீர், ப.38
30. மேலது, பக்.43-44
31. மேலது, பக்.102-105
32. மேலது, ப.45.
33. ராஜம் கிருஷ்ணன், முள்ளும் மலர்ந்தது, ப.344
34. அகிலன், எங்கே போகிறோம்? ப.10
35. G.R.Madan, and R.B.Dass, India's Social Transformation, P.221.
36. Ibid, P.308.

37. இந்திரா பார்த்தசாரதி, சுதந்திர பூமி, ப.7

38. நா.வெ.வீராசாமி, தமிழில் சமூக நாவல்கள், பக்.91, 94

39. கா.சிவத்தம்பி, நாவலும் வாழ்க்கையும், ப.50

40. Alan Swinge Wood, The novel and revolution, P.43

41. பொன்னீலன், கரிசல், ப.56

42. D.Paul Chowdhry, A Hand Book of Social Welfare, P.VII.

43. இந்திரா பார்த்தசாரதி, குருதிப்புனல், ப.64

44. மேலது, ப.84

45. இந்திரா பார்த்தசாரதி, "1973-ஆம் ஆண்டு சிறுகதைகளின் ஒரு மதிப்பீடு", தீபம், ஜூன் 1974, ப.37

46. இந்திரா பார்த்தசாரதி, குருதிப்புனல், ப.210

47. எழில் முதல்வன், புனைகதை வளம், ப.210

48. இந்திரா பார்த்தசாரதி, குருதிப்புனல், ப.128

49. மா.இராமலிங்கம், பொய்யான இரவுகள் (பிரச்சனை முடிந்தது) ப.14

50. மேலது, ப.33

51. ராஜம் கிருஷ்ணன், அலைவாய்க்கரையில், ப.80

52. மேலது, ப.332

53. மேலது, ப.77

54. மேலது, ப.79

55. மா.இராமலிங்கம், நாவல் இலக்கியம், ப.20

## 6. மதிப்புகளின் மாற்றங்கள்

### தீமை ஒழிய அமைதி வழி:

சமுதாயத்தில் அவ்வப்போது நேர்மைக்குப் புறம்பான செயல்கள் காணப்படுவது இயல்பு. நல்லெண்ணம் கொண்ட மக்கள் அத்தீய செய்கைகளைக் களைந்திடல் வேண்டும். தீமைகளைப் போக்கிட வன்முறை கூடாது. அமைதியான முறையில் சத்தியாகிரக வழியில் தீயவர்கள் மனம் திருந்திட நல்வழி காணல்தான் சிறந்த முறை.

### சத்தியாகிரகம்:

இந்திய விடுதலைக் காலத்தில் காந்தியடிகளின் தலைமையில் மக்கள் பின்பற்றிய சத்தியாக்கிரகக் கொள்கை, எந்தக் காலத்திலும், எந்த நாட்டிலும் சமூகத் தீமைகளை எதிர்த்துப் போராடுவதற்குப் பயன்படும் என்ற உண்மையைச் சில நிகழ்ச்சிகள் வாயிலாக அகிலன் தன் நாவல்களில் வெளியிடுகின்றார்.

'பால்மரக் காட்டினிலே' நாவலில் அகிலன் மலேசியத் தொழிலாளர்கள் சத்தியாக்கிரக முறையைப் பின்பற்றி வெற்றி பெறுவதைக் காட்டுகிறார். தோட்டத் தொழிலாளர்கள் வெள்ளையர் நிர்வாகத்தின் கொடுமைகளை எதிர்த்துப் போராடுகின்றனர். அப்போராட்டத்தை முன்னின்று நடத்தும் பாலன், 'உங்களோட கூட்டம் அமைதியா ஒழுங்கா கட்டுப்பாட்டோட நடக்கணும். யாரும் உணர்ச்சிவசப் பட்டுடப்படாது,

அடிதடி சண்டை கைகலப்பிலே ஈடுபடக்கூடாது. முன்னாலே மகாத்மா காந்தி நமக்கு வழிகாட்டி இருக்கிறார். அந்த முறையைக் கையாண்டு பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தையே அவர் வெளியேற்றியிருக்கிறார். நாமோ சில அடிப்படைக் கோரிக்கைகளை ஒரு வெள்ளைக்காரருக்கு முன்னாலே வைக்கப்போகிறோம்' என்று சத்தியாக்கிரக முறையை அவர்களுக்கு அறிவுறுத்துகிறான்.[1] தொழிலாளர்கள் ஐந்து கோரிக்கைகளோடு பாலன் தலைமையில் சத்தியாக்கிரகம் மேற்கொள்கின்றனர். அப்போது பாலன், 'நம்மை அவங்க அடிச்சாலும் உதைச்சாலும் ஏன் துப்பாக்கியாலே சுட்டாலும் நாம உறுதியா நிக்கணும்' என்று சத்தியாக்கிரகத்தின் உறுதியைக் கூறி அவர்களை அழைத்துச் செல்கிறான்.[2] தோட்ட முதலாளி பெரிய துரை துப்பாக்கியை எடுத்துக்கொண்டு ஓடிவரும்போது 'என் ஒருத்தனைச் சுட்ட பிறகாவது இவங்களை வாழவிடுங்க, தயவு செய்து என்னைச் சுடுங்கள்' என மார்பைத் திறந்து காட்டியபடி பாலன் அவரை நெருங்குகிறான்.[3] துரை திகைத்துப் போகிறார். பாலனை வேலைக்கு எடுத்துக் கொள்வதைத் தவிர மற்ற கோரிக்கைகளை அவர் ஏற்றுக் கொள்கிறார். துரை பாலனிடம், "நீ ஒரு பயங்கரமான பிள்ளை, இந்தியாவில் இருந்த எங்கள் ஆட்சியையே அந்தக் கிழவர் வெளியேற்றினார். உன்னை இங்கே அனுமதித்தால் நீ எங்களையே இங்கிருந்து வெளியேற்றி விடுவாய். அவர் அந்த நாட்டில் கையாண்ட அதே ஆயுதத்தை நீ இங்கே கையாளக் கற்றுக்கொண்டு வருகிறாய்' என்று கூறுகிறார். துரையின் இக் கூற்றால் சத்தியாக்கிரக முறைக்கு உள்ள வெற்றியை அகிலன் காட்டுகிறார்.[4]

மேலும் பாலன் தன்னை வேலைக்கு மீண்டும் எடுத்தக்கொள்ள வேண்டும் என்ற வற்புறுத்தாததைக் காட்டுவதன் வாயிலாக சத்தியாக்கிரகம் தன்னலத்திற்காக மேற்கொள்ளப் படுவதன்று என்னும் காந்தீயக் கொள்கையையும் உணர்த்துகிறார். பாலன் தீமையைச் சத்தியாக்கிரக வழியில் நின்று எதிர்ப்பவனாகவும் தன்னலத்தை விரும்பாத உண்மையான சத்தியாக்கிரகவாதியாகவும் ஆசிரியரால் படைக்கப்பட்டுள்ளான்.

பொருளாதாரமும் நட்புடைமையும்:

மனிதப் பண்புகளில் நட்புடைமை ஒரு அரிய செயல்; சாதி மதம் பாராதது; இன்பதுன்பத்தில் பங்கு கொள்ளச் செய்வது; எக்காலத்திலும் நிரந்தரமாக அன்பு காட்டுவது. இது கூட பொருளாதார ஏற்றத்தாழ்வு மிகும்போது விரிசல் காணக் காரணமாக உளது. சா.கந்தசாமி எழுதிய 'தொலைந்து போனவர்கள்' எனும் நாவலில் பள்ளி செல்லும் வயதில் வித்தியாசங்கள் இருந்தாலும் எப்படியோ ஓர் ஒருமையையும் உணர முடிகிறது. சண்டை போட முடிகிறது. கேலி செய்ய முடிகிறது. கனவிலும் நனவிலும் நண்பர்களையே நினைத்துக் கொண்டிருக்க முடிகிறது.

வயது கூடக் கூட இந்த ஒருமை மாறி வேற்றுமைகளே பெரிதாகிப் போய்விடுகின்றன. மெல்ல, மெல்ல ஆனால் உறுதியாக, தீர்மானமாக, ஏற்றத் தாழ்வுகள் - வர்க்கம், வகுப்பு, உலக வாழ்க்கையில் வெற்றி அல்லது தோல்வி இதெல்லாம் இந்த மனிதப் பிறவிகளை உயிருக்குயிராகப் பள்ளியில் பழகிய நண்பர்களைப் பிரித்துவிடுகிறது.

நான்கு பள்ளி நண்பர்களில் இன்னும் பள்ளி நினைவுகளும் நட்பும் மறவாத ஒருவன் இதர மூன்று பேரைத் தேடிக் கண்டுபிடித்து ஒரு பகல் விருந்துக்கு ஏற்பாடு செய்கிறான். நால்வரில் அவனே வாழ்வில் அதிக வெற்றி பெற்றவன். அந்த விருந்துக்கு அந்த நால்வரில் சகல சுய கௌரவத்தையும் இழந்து, சிரமியவே பழக்கப்பட்டவன்தான் வருகிறான். மற்ற இருவர் வருவதில்லை. முதலாமவனுக்கு வந்த ஒருவனும் அவனுடைய முயற்சியின் தோல்வியின் சின்னமாகக் காட்சி அளிக்கிறான்.

வெகு எளிமையானது போன்றதொரு கதையை எளிமையாகச் சொல்லுவது போல சா.கந்தசாமியின் 'தொலைந்து போனவர்கள்', இன்றைய சமூகம் தனி மனிதனின் இறுக்கங்களைத் தூக்கி வாரிப்போடும்படி கண்முன் நிறுத்துகிறது. பிரக்ஞையைக் கிளறும் இந்தப் படைப்பு ஒரு தலைசிறந்த தமிழ் நாவல் என்பதோடு மட்டும் இல்லாமல் இன்றைய எதார்த்த உலகைத் துல்லியமாக உணர்த்தும் ஒளியுமாகும். பொருளாதாரச் சமவாழ்வு நட்பினை வளர்க்கவும் உதவும் என்று உணர்த்துகின்றது.

மரியாதைக் குணம்:

பெற்றோர்களிடமும், பெரியோர்களிடமும், ஆசிரியர்களிடமும் மரியாதையுடன் நடந்துகொள்ளுதல் ஒரு அரிய பண்பு. குறிப்பாக, பள்ளி செல்லும் மாணவர்கள் இப்பண்புடையவர்களாய் இருத்தல் அவசியம்.

கோவி.மணிசேகரனின் 'வாத்தியாரம்மா'வில் நன்றாகப் படிக்கும் சிறுமி திலகவதி. அவளிடம் கல்வி அதிகாரி, 'இராமனின் மனைவி

பெயர் என்ன?என்று கேட்டார். அவள் பதில் சொல்லாமல் விழித்தாள். அதிகாரி சென்றதும் வகுப்பாசிரியை அவளை நன்கு அடித்தாள். அதன் பின்னர் அவள் ஒருவாரமாகப் பள்ளிக்கூடம் வரவில்லை. காரணம் புரியாமல் ஆசிரியை அவள் வீட்டிற்குச் சென்றாள். அவளுக்குக் காய்ச்சல் என்பதை அறிந்ததும், அனுதாபத்துடன் அணுகி, கல்வி அதிகாரியின் கேள்விக்குப் பதில் சொல்லாமல் இருந்தது பற்றி வினவினாள். "அப்போது, மறக்கலை டீச்சர், தெரியும், அது உங்க பெயராச்சே ... டீச்சர்! நான் எப்படி சொல்றது? வந்தவங்க என்னை மரியாதை கெட்ட பொண்ணுன்னு நெனச்சிக்க மாட்டாங்களா, டீச்சர்?"

"திலகா.........?"

"ஏன் டீச்சர் அழறீங்க? எம்மேலே தப்பா டீச்சர்? எங்கம்மாதான் பெரியவங்க பேரை வாய் கூசாமல் சொல்லக்கூடாதுன்னு சொல்லியிருக்காங்க" என்றாள். ஆசிரியை கண்கலங்கினாள். அதுவரையில் ஆசிரியைக்கும் படிப்பவர்க்கும் புரியாமல் மறைபொருளாய் இருந்த அந்த சிறுமியின் செய்கை அவளது பேச்சினால் வெளிப்படுத்தப்படுகின்றது. கதை மாந்தரின் பேச்சை இடந்தேர்ந்து கையாண்டு வலிவும் உயிரும் கொடுத்து உயர்ந்த பண்பை வெளிப்படுத்துகின்றார், கோவி. மணிசேகரன்.

மனிதனது அரிய பண்புகளில் மன்னித்தலும், தவறை மறத்தலும் முதலாவதாகக் கருதப்படும். வலியோரிடம் வலியர் குற்றம் காணாது விடுதல் பெரிதல்ல; எளியோரிடம் குறை கண்டு காணாமல்

விருதனுடன் மன்னித்தல்தான் முக்கியம்.

முனைப் பண்பு:

கோவி. மணிசேகரனின் 'நெருப்பு'வின் தணிகாசலம் கோபக்காரன்; அலுவலகத்தில் வேலை பார்ப்பவன்; அதிகாரியுடன் ஏற்பட்ட தகராறில் மூன்று நாட்களுக்கு வேலை நீக்கம் செய்யப்பட்டான். வீட்டில் இருந்தபொழுது மாமியார் இறந்த செய்தி வந்தது. இரண்டாண்டு-களாகத் தனக்கும் மைத்துனருக்கும் ஏற்பட்ட பிணக்கினால் அங்குப் போகாமல் இருந்தான். மனைவிக்காகப் பகைமையைப் பொருட்படுத்தாமல் மனைவியுடன் சென்றான். அவனைப் பெரிய மைத்துனர், 'இவன் எதற்கு இங்கு வரவேண்டும்?' என்று கேட்க, கோபத்தை அடக்கி வீடு திரும்பினான். மனைவிக்கு இது தெரிந்திருந்தாலும் துக்கத்தில் துவண்டு விட்டாள். பிறகு அண்ணனிடம் வாதாடினாள்; பால் தெளியல் முடிந்து வீடு திரும்பினாள். அவள் வருவதற்கு முன்னர் அவனுக்கு அவள் வரவில்லையே என்ற கோபம். அவள் வந்ததும் அவனுக்கு கோபம் இல்லை. அவளுடன் அன்பாய்ப் பேசி யோகியைப் போலச் சிரித்தான். அவனின் இந்தக் கதையைச் சித்திரிக்கின்ற ஆசிரியர் ஓரிடத்தில் பின்வருமாறு எழுதுகிறார்.

இலங்கை வானொலி வர்த்தக ஒலிபரப்பு ஓய்ந்தது. வானொலிப்பெட்டியினை மூடிவிட்டுச் சாய்வு நாற்காலியில் அமர்ந்தான் தணிகாசலம். இன்னும் தேவகியைக் காணவில்லை. 'அவளுக்கென்ன? ஒருவேளை நாளைக்கு நடக்க இருக்கும் பாலையும் பார்த்துவிட்டுத் திரும்ப

இருக்கிறாளா? அப்புறம் என்ன? ஏழாம் துக்கம், நடப்பு, காரியம் இவற்றையும் கண்டுவிட்டுத் திரும்பலாமே!

கோபம் மெல்ல எழுந்து அது அடங்கவும் அடங்கியது. வாசற்படியில் காலடி ஓசை, தேவகிதான் வந்து பதுமைபோல் நின்றாள். ஏன் அவள் அப்படி நிற்க வேண்டும்! "தேவகி, இப்படி நிற்பதுதான் குற்றம். நேரே வந்துவிட வேண்டியது தானே?"

அமைதியாக கோபத்தை மறந்த குன்றாக அழைப்புக் குரல் விடுத்த கணவருடைய பொறுமையை அவளால் நம்பவே முடியவில்லை. நேரே ஓடோடிச் சென்று காலில் விழுந்தாள். 'என்னை மன்னித்து விடுவீர்களா?' மெதுவாகச் சிரித்தான் தணிகாசலம். மன்னிக்கும் குணம், மனிதத் தன்மையது.

ஒரு படைப்பு தனிமனிதனால் படைக்கப்படினும் அத்தனி மனிதன் ஒரு சமுதாயத்தின் படைப்பே ஆவான். ஆதலின் அதன் எதிரொலிகள் அவன் படைப்பில் காணப்படுவது இயல்பே. சமுதாயம் என்பது கால ஓட்டத்தின் ஒரு கட்டத்தையும் மானிட வாழ்க்கையின் ஒரு படி நிலையையும் உள்ளடக்கிய ஒரு வரலாற்றுக் கூறு. எனவே அவ்வக் காலத்தின் தோற்றக் காட்சியும் (பிரதிபலிப்பு) அவ்வவ் வாழ்க்கையின் எதிரொலியும் படைப்புகளில் காணப்படுவதும் இயல்பாகின்றது.

வாழ்க்கையைப் படைத்துக் காட்டுவது இலக்கியம். அந்த

வாழ்க்கையைச் சித்திரிப்பதும் ஒரு சமூக நிகழ்ச்சிதான். இதை அறிகின்ற பொழுது, இலக்கியத்திற்கும் சமுதாயத்திற்கும் இடையே அமைந்துள்ள உறவு தெளிவாகும்.

தொழிலில் நேர்மை:

அகிலன் தன் 'கையிலும், மின்னிலும்'[5] எனும் சிறுகதையில் பள்ளித் தலைமை ஆசிரியர் சுந்தரம் பணவசதி குறைந்தவர். நேர்மையானவர். தரமற்ற புத்தகங்களைப் பதிப்பித்துப்பள்ளி நூல் நிலையங்களில் விற்பனை செய்யும் ஒருவரை, நெறியற்ற முறையில் கையூட்டுவாகச் சிறு தொகையைக் கொடுத்து புத்தகம் விற்பதைக் கண்டிக்கிறார். மாணவர்களின் நலனை ஆசிரியர்கள் மனதில் கொள்ளவேண்டும். பண்பைப் போதிக்கவும், அதன்படி நடந்து காட்டவும் வேண்டும் என்று வலியுறுத்துகிறார். முடிவெட்டுபவர் ஒருவர் நேர்மையுடன் நடக்கின்றார்; தொழிலைத் தெய்வமாகக் கருதி வாழ்கின்றார். அடுத்தடுத்து இவ்விரண்டையும் சொல்லி அகிலன் அறிவுரை தருகின்றார்.

சமுதாயப் பணி:

'எந்த ஒரு கலையும் சமுதாயத்தால் பாதிக்கப்படாமலும், சமுதாயத்தைப் பாதிக்காமலும் இருக்க முடியாது; அதுபோலவே எந்த ஒரு சமுதாயமும் கலையால் பாதிக்கப்படாமலும், கலையைப் பாதிக்காமலும் இருக்க முடியாது' என்பார் தங்க மணியன்.

படைப்பாளிகள் எப்போதும் சமுதாயத்தால் பாதிக்கப்பட்டவர்களாகவே உள்ளனர். சமகாலச் சமுதாயத்தில் காணப்படும் குறைகளைக் களையும் வகையில் சிலர் எழுதுவதுண்டு. தாம் படைக்க விரும்பும் சமுதாயத்தைத் தம் எழுத்துக்களால் படைத்துக்காட்டும் எழுத்தாளர்களும் உள்ளனர்.

நலவாழ்வு போற்றல்:

அகிலனின் 'நரகாசுர்புரம்'[6] என்னும் சிறுகதையில், குறுக்கு வழியில் பணம் சேர்த்துப் பெரிய மனிதராவாரையும், தற்போது எல்லா நகரங்களிலும் பொதுவாக நிலவும் சுகாதாரக் கேடுகளையும், சாக்கடை நாற்றம் அதிகரித்து வாழ்க்கைச் சீர்கேடு அடைவதையும் தெளிவாக விவரிப்பதைக் காணலாம். எல்லா வசதிகளும் உள்ள ஒரு ஊரில், ஒரு புத்தகக் கடை கூட இல்லாமையையும், மக்கள் அறிவு வளர்ச்சிக்கு எத்துணை முக்கியத்துவம் தருகின்றனர் என்பதையும், நகர வளர்ச்சியில் வடிகால் வசதி பெருக வேண்டும் என்பதையும் வலியுறுத்துகின்றார்.

அடிக்குறிப்புகள்

1. அகிலன், பால்மரக்காட்டினிலே, ப.208
2. மேலது, ப.210
3. மேலது, ப.214
4. மேலது, ப.216
5. அகிலன், சத்திய ஆவேசம், பக்.107-117
6. மேலது, பக்.38-49

## 7. புதிய அறிவியல் கருத்துக்கள்

உலகில் ஒவ்வொரு காலத்திலும் மாற்றங்கள் பல ஏற்படுகின்றன. அவற்றைக் கவனித்துத் தொகுத்து வகைப்படுத்தி அவற்றிடையே உள்ள அறிவுக்கூறுகளை அறிந்து, ஒழுங்கு செய்து அறிவதே அறிவியல் எனப்பெறும்.

அறிவியல் முறை என்பது விவரங்களைச் சேகரித்தல், அவற்றுள் ஒற்றுமை காண ஊகித்தல், அந்த ஊகத்தை புதிய விவரங்களைக் கொண்டு சோதித்தல் என்னும் படிகளும் உள்ளன. இவ்வாறு ஒவ்வொன்றினையும் சோதித்துக் காணும் முறை எல்லாப் பொருள்களின் மீதும் ஏற்பட்டது. அனுபவத்தில் கண்டறிந்தவற்றைக் கொண்டு, எந்த ஒன்றையும் பகுத்து அறியக்கூடிய அணுகு முறைகளைக் கொண்டதே அறிவியல் வளர்ச்சியாகும்.

இந்தியாவில் இருபதாம் நூற்றாண்டில் பல புதிய அறிவியல் கருத்துக்கள் வெளியிடப்பட்டுள்ளன. கேரளாவில் உள்ள தும்பா என்னுமிடத்தில் ராக்கெட் ஏவுந்தளம் அமைக்கப்பட்டது. ஆர்யபட்டா, பாஸ்கரா, இன்சாட் 1-ஏ, இன்சாட் 1-பி போன்ற விண்வெளிக் கலங்கள் விண்ணில் ஏவப்பட்டன. ஆந்திராவில் உள்ள ஸ்ரீஹரிகோட்டாவிலும் கர்நாடகத்தில் உள்ள ஹசன் என்னுமிடத்திலும் விண்வெளி ஆய்வுக்கூடங்கள் அமைக்கப்பட்டு இயங்கி வருகின்றன.

தொலைக்காட்சி, வானொலி போன்ற தகவல் தொடர்பு நிலையங்களும் அமைக்கப்பட்டு சீரிய முறையில் இயங்கி வருகின்றன.

நாடெங்கும் வானொலி நிலையங்களும், தொலைக்காட்சிக்கான அஞ்சல் நிலையங்களும் அமைக்கப்பட்டு வருகின்றன.

இந்திய விஞ்ஞானிகளில், குறிப்பாக சீனிவாச ராமானுஜம், சர்.சி.வி.இராமன், செகதீச சந்திரபோஸ் போன்றவர்களைக் குறிப்பிடலாம். தற்போது விவசாயத் துறையில் டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதனைக் குறிப்பிடலாம்.

இந்தியாவில் புதிய அறிவியல் கண்டுபிடிப்புக்காகவும், அதை வெளியிடுவதற்காகவும் பல கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. விலங்கியல், தாவரவியல், பௌதிகம், வானவியல், ரசாயனம், மண்ணியல், மருத்துவம், போன்றவற்றை ஆராய்ந்து பல ஆராய்ச்சிக் கட்டுரைகள் வெளியிடப்பட்டு வருகின்றன.

"நேற்று உலகம் இப்படி இருந்தது என்று கேள்விப்படுகின்றோம். இன்று உலகம் இப்படி இருக்கிறது என்று பார்க்கிறோம். நாளைய உலகம் இப்படி இருக்கும் என்று தீர்மானிக்கின்றோம். இந்த மூன்றையும் ஒன்றாகச் சேர்க்கும் போது நம்மையறியாமலே நம்முள் ஓர் எண்ணம் பிறக்கிறது. உலகம் இப்படி இருந்தால் நன்றாயிருக்குமே என்ற எண்ணந்தான் அது. இவ்வாறு எண்ணுவதே இலக்கியம்; அந்த எண்ணத்தை எழுதுவதே இலக்கியம். அதுவே எழுத்துக்கலை என்று நான் நினைக்கின்றேன்" என புனைகதைக்கு இலக்கணம் கண்டவர் ஜெகசிற்பியன். மிதமிஞ்சிய கற்பனையுடன், அளவான எதிர்பார்ப்புகளும் உண்டு: கங்கை நதி தீரத்தில் நிகழ்வதைப் பார்க்க, கேட்க கனவு கண்டார் பாரதி; அது இன்று ஒலி, ஒளிபரப்பாக நிகழ்கின்றது.

இது இப்படி இருக்கவேண்டும் என நினைப்பது புனைகதையாளர்களின் உரிமை.

தனஞ்செயன் அமெரிக்கா சென்ற விஞ்ஞானிகள் இருவரை இந்தியாவுக்குக் கொண்டுவந்து இங்குள்ள அணு விஞ்ஞானச் சோதனைக்கும், செயற்கைக் கோள்களை வானில் பறக்கவிடும் முயற்சிக்கும் துணைபோகும் வகையில் கி.ராஜேந்திரனின் 'விண்ணும் மண்ணும்' உருவாகியுள்ளது.

அனுபமா என்ற முதல் தர விஞ்ஞானியைத் தன் நாட்டிற்குக் கொண்டுவரவும் அவள் தேசிய விண்வெளி நிர்வாக நிறுவனத்தில் பெற்றுள்ள இன்றியமையாத இரகசியமான ஆராய்ச்சி அறிவைத் தன்னாட்டிற்குப் பயன்படுத்தவும் வேண்டுமென அவன் முயன்றான். அம்முயற்சியின் பல்வேறு பகுதிகளைக் கவர்ச்சியாகவும் இயல்பாகவும் காட்டிச் செல்கிறது 'விண்ணும் மண்ணும்'.

பங்களாதேஷ், காஷ்மீர், பாகிஸ்தான் ஆகியவற்றை எல்லாம் கூறிப் பாரதத்தின் பாதுகாப்பு நடவடிக்கை எவ்வளவு இன்றியமை-யாதது என உணரச் செய்து அணு விஞ்ஞான அறிவு பெறுதற்கு அவள் துணை தேவை என்பதை இந்தியாவின் பாதுகாப்பு இலாகாவில் துப்பறியும் பிரிவைச் (டி.எம்.ஐ) சேர்ந்த தன் பணியையும் வெளிப்படையாகக் கூறினான், தனஞ்செயன். ஆக்கப் பணிக்காக இந்தியா தன் அணு அறிவைப் பயன்படுத்த வேண்டிய நிலையையும் எடுத்துரைத்தான். இப்படி அனுபமாவும் தனஞ்செயனும் பேசிக் கொள்ளும் உரையாடலே விஞ்ஞானச் சூழலை உணரச் செய்கிறது.

அநுபமாவின் மனச்சாட்சி, தான் வாழும் நாட்டுக்குத் துரோகம் செய்வதை எதிர்க்கிறது. இந்நிலையில் தனஞ்செயன் தன் செயலில் சோர்வு காண்கிறான். ராக்கெட்டுகளைக் கட்டுப்படுத்தித் திசை திருப்பும் துறையில் அறிவாற்றலைப் பெற மைக்கேல் மட்டுமே உதவ முடியும். ஆனால் அவர் சம்மதிக்க மாட்டாரே என அநுபமா கூறியபோது அவன் சோர்வு மேலும் பெருகுகிறது.

இடையில் அமெரிக்க நாட்டின் நாகரிக நடவடிக்கைகள் நிகழ்ச்சிகள், ஊர்வல பஸ்கள், இவைகளெல்லாம் சிறந்த முறையில் கதைப் பின்னணியில் கலக்கின்றன. விஞ்ஞானி வாழ்க்கையில் இழுக்கு நேரா வகையில் சதிகளைத் துணைக்கு அழைப்பதாகத் தனஞ்செயன் கூறி அநுபமாவின் துணையுடன் மைக்கேலைக் கடத்தத் திட்டமிடுவது கதை வளர்ச்சிக்குப் பெருந் துணை புரிகிறது. பாகிஸ்தான் சதியைத் தனஞ்செயன் தகர்த்தெறிகிறான். இது அவன் உடல் வலிமையையும் மன வன்மையையும் காட்டுகிறது.

அமெரிக்கச் சூழலிலிருந்து பிரஞ்சுச் சூழலுக்கு கதை தொடர்கிறது. இந்திய அமெரிக்க நாடுகளின் உளவு நிறுவனங்கள் தத்தம் வலிமையைக் காட்டி விஞ்ஞானிகளைத் தம்பக்கம் திருப்ப முயல்றன.

எங்கோ அண்டப் பெருவெளியில் விரையும் ராக்கெட்டைத் திசை திருப்பும் விஞ்ஞானத்தில் நிபுணர்கள் தம் உள்ளத்தைத் தம் பக்கமாகத் திசை திருப்பும் கலை கைவராதது குறித்துக் கவலைப் படுகிறார்கள். அறிவியலும் காதலும் அணைத்துச் செல்லும் வாழ்க்கையின் கோலம் இது.

'மனிதனின் விண் ஆராய்ச்சியும்' அவனது மண்ணாசையை ஒட்டித்தான் நடக்கிறது. ஆக்க சக்திகளை வாமன உருவாக்கும் வகையில் போட்டியிட்டுக் கொண்டு அசுர சக்திகள் விசுவரூபம் எடுத்துவிடுகின்றன. உலக சமாதானம், சாந்தி, நட்புறவு ஆகியவற்றுக்கு இடமேது? சதா மரணபயம் தான். சந்தேக மயம் தான்! பனிப்போர் எந்த விநாடியில் நிஜமாக மாறி உலகையே பாலைவனமாக்குமோ என்ற அச்சம்தான்', அது நிரம்பி இருப்பதை மறைக்காமல் தனஞ்செயன் குரல் காட்டும்.

கதையில் சில திருப்பங்கள் அனுபமாவையும் அவனையும் சந்திக்கச் செய்து அவளை அவனை இந்திய அணுவளர்ச்சிக்கு உதவ வேண்டும்படி செய்கிறது. துரோகமும் காதலும் இப்படி மாறி மாறிச் சுழல்கின்றன. வாழ்க்கை என்பது தனிமையை நாடும் தனிப்படகாக மாறியது மைக்கேலுக்கு. இந்நிலையில் தங்கை சாந்தியை இழந்த தனஞ்செயன் பழிக்குப் பழி வாங்கத் தும்பா நிலையத்தை நக்ஸலைட்டுகளிடமிருந்து காப்பாற்ற முனைந்து வெற்றி பெறுகிறான். பாரத நாட்டின் ராக்கெட் சோதனை மைக்கேல், அனுபமா, தனஞ்செயன் போன்றவர்களின் சோகக் கதையின் விளைவு என்பது பலருக்குத் தெரியாது. எனினும், இந்தச் சோக நினைவை ராக்கெட் புறப்பாட்டுடன் இணைக்கிறது 'விண்ணும் மண்ணும்'.

"மெத்த வளருது மேற்கே அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை" என்ற பாரதியின் குறையைப் போக்கும் படைப்பாளியாகத் திகழ்கிறார் சுஜாதா. இன்றைய இளைஞர்களின் இதயங்களில் இவரது

புதினங்களுக்கு இடம் உண்டு. பம்பாய், டில்லி பின்னணியில் கொலைக் கதைகளைச் சொற்செறிவுடன் கலை வடிவமாக்கும் இவரை விஞ்ஞான நாவல் ஆசிரியர் என்பர். நாட்குறிப்புக் கோணம் என்ற புதிய உத்தியில் இவரது நாவல் கயிறு செல்கிறது.

அணு ஆற்றல்:

அறிவியலார் மனித மூளையுடன் போட்டி போடும் ரொபோட்ஸ் எனும் இயந்திர மூளைகளைப் படைக்கத் தொடங்கினர். அணு சக்தியால் செயல்படும் கைக்கருவிகளையும் கற்பனையில் பயன்படுத்த முனைந்தனர். பொதுவாக இத்தகைய அறிவியல் முன்னேற்றம் கண்ட பின்னரும் அத்தகைய முன்னேறிய கருவிகளால் உலகம் நாகசாகி, ஹிரோஷிமா போல அழிவு நிலையை அடைந்து விடுமோ என்ற அச்சம்தான் பெரும்பாலும் ஆட்டிப் படைக்கிறது. நல்ல வாழ்க்கை வரும் என்ற நன்னம்பிக்கை தோன்றுவதற்கு மாறாக இத்தகைய இருள் நிறைந்த துன்பக் கதைக் கருக்களே பெரும்பாலும் முளைத்துள்ளன. எனினும், அறிவியல் என்பது மனிதனின் துணை என்ற எண்ணந்தான் வேர்விட வேண்டும் என்பதில் ஐயமில்லை.

இத்தகைய எண்ணங்களின் இடையே இன்றைய சமுதாய அமைப்பு புதிய அறிவியல் கண்டுபிடிப்பால் எண்ணிப் பார்க்க முடியாத அளவுக்குப் பெருமாற்றம் பெற்றுவிடும் என நம்பி அதன் அடிப்படையில் கதை எழுத முனைந்தவர்களும் உள்ளனர். மேனாட்டார்களில் ஆர்தர் கிளார்க், அந்தோனி, பர்கெஸ், ரேபிராட்பரி, ஹென்றி ஸ்கேலர்,

தியோடர் ஸ்டர்ஜியன் போன்றவர்கள் எழுதிய புனை கதைகளை நிறையப் படித்த பின்னர், தான் பணிபுரியும் எலக்ட்ரானிக்ஸ் இன்ஜினியர் துறை அனுபவத்தையும் பயன்படுத்தியதால் சுஜாதாவின் 'சொர்க்கத்தீவு' என்ற நூல் வெளிவந்துள்ளது.

இது ஒரு கற்பனைத் தீவு. எலெக்ட்ரானிக்ஸ், மனிதன் அந்தரங்க வாழ்க்கையில் பெரிதும் குறுக்கிடும் என்பதை ஆசிரியர் உறுதியாக நம்புகிறார். அதனால் செய்தி அனுப்பும் வாயிலைக் கட்டுப்படுத்துபவர்களே உலகையும் கட்டுப்படுத்த இயலும் என்பதைக் காட்டுகிறார்.

பல்லாண்டுகளாக மனித சமுதாயத்தைக் கெடுத்துவந்த போர், பண உரிமை, உடைமை உணர்வு, அழுகை, காதல், காமம், பொய், உண்மை என்பவற்றிற்கு இடம் கொடுக்க விரும்பவில்லை. மனிதனின் அடிப்படையாக விளங்கும் மகிழ்ச்சி, அறிவியல், இளமை ஆகியவற்றைவிட்டு வைத்துள்ளது. இத்தகைய கட்டுப்பாடு கூடாது என எதிர்க்கும் எதிர்ப்பாளன் ஒருவனும் அமைகிறான். இத்தகைய நிலையில் அய்யங்கார் மாட்டிக் கொண்ட நிலையில் சொர்க்கத் தீவைக் காண முடிகிறது.

அறிவியல் மயம்:

சொர்க்கத் தீவில் இறங்கியதும் குரல் ஒலி மட்டும் அய்யங்காரைப் பரிசோதனை செய்ய அழைக்கிறது. பரிசோதனையின் போது 'வெட்கம்' என்றால் என்னவெனத் தெரியாத நிலையில் தொடங்குகிறது.

பரிசோதனையின் போது ராட்சசத் தனமான காங்கிரீட் கட்டடங்கள் தத்தம் உயரங்களை ஒப்பிட்டுப் பார்த்துக் கொண்டு தொட்டு தொட்டு நின்று கொண்டிருந்தன: எனக்கு எதிரே எண்பதடி உயரத்தில் மிகப் பெரிய எழுத்துக்களில் 'அன்பு' என்று எழுதி, அந்த அன்பு ஊசலாடி எங்களை வரவேற்றது எனக் குறிப்பிடும்போது புது உலகக் காற்று நம்மேல் படுவதை உணர்கிறோம். மதுரை மணி அய்யர் இசை இருக்கிறதா இல்லையா என்பது கூடக் கம்ப்யூட்டரைக் கேட்டுத் தெரியும் நிலையில் அந்தத் தீவு இருந்தது.

அந்தத் தீவே கம்ப்யூட்டரின் கட்டளையால் நடந்தது. மெய் உயிர் தனித்தனியாக இருக்கும் புதிய எழுத்து வடிவில் தமிழ் அங்குப் புள்ளியின்றித் தென்படுகிறது.

ஐம்பத்து நான்கு வயதானால், அங்கு ஆளைக் கொன்று விடுகிறார்கள். கீ கொடுக்கப்பட்ட பொம்மைகள் போல் இருக்கும் வாழ்க்கையைச் சுஜாதாவின் எளிய சின்னஞ்சிறு தொடர்கள் உணர்ச்சிகளை வெட்டி வெட்டித் தனியாகக் காட்டுகின்றன. காதல் தேவையில்லாத, செக்ஸ் தேவையில்லாத புது உலகம் அது. அந்தத் தீவில் பிரக்ஞை உள்ள பத்துப் பேர்கள் இருந்தனர். அவர்களில் ஒருவன் கௌதம்.

சொர்க்கத் தீவிலும் வைரமும் யூரேனியமும் இருக்கின்றன. உண்மை, பொய் சொல்வதைக் கண்டுபிடித்துத் தர வலியில்லாத மருந்து அங்கு பயன்படுத்தப்படுகிறது. உண்மையைச் சொல்ல 'ட்ருத்ஸீரம்' உதவியது.

அங்கு நகரத்தின் இருதயமான கம்ப்யூட்டரைத் தகர்க்கும் முயற்சியும் நடக்கிறது. ஒருவர் பேசுவதைக் கேட்க ரேடியோ டிரான்ஸ்மீட்டர் பயன்படுகிறது. அந்தத் தீவு கம்ப்யூட்டர் விந்தையான அமைப்பு 218 புரோகிராம்கள் இருந்தன. நான்கு நாள் முயற்சியில் தப்புக்களை குறைக்க முடிந்தது. புரட்சி எண்ணங்களை அத்தீவில் சலவை செய்கிறார்கள், என அறியும்போது வியப்பாக இருக்கும்.

இப்படிப் புதிய உலகைக் கம்ப்யூட்டர் உலகமாகக் காட்டுகிறார், சுஜாதா. இது புதிய அறிவியல் புனை கதைக்கு ஒரு நல்ல எடுத்துக்காட்டு.

*****
***
*

## பகுதி: மூன்று

## 8. எழுபதுகளில் தமிழ்ப் புனைகதைகள் - ஓர் அளவீடும் மதிப்பீடும்

நா.பார்த்தசாரதியின் ஆத்மாவின் ராகங்கள், ர.சு.நல்லபெருமாளின் போராட்டங்கள், ராஜம் கிருஷ்ணனின் ரோஜா இதழ்கள் இந்திரா பார்த்தசாரதியின் குருதிப்புனல், முதலியன அடிப்படையில் காந்தீயத்தின் நோக்கிலும், புரட்சிகர சக்திகளுக்கு எதிரான நிலைப்பாட்டுடனும் எழுதப்பட்டவை. காந்தீயத்தையும் இடதுசாரிக் கோட்பாடுகளையும் எதிரெதிராக நிறுத்திச் சிலர் "தத்துவப்" போராட்டத்தைச் சித்திரிப்பது போலவே, கிறிஸ்தவத்தையும் மார்க்சியத்தையும் முரண்படும் சித்தாந்தங்களாகக் காட்டும் ஒரு போக்கு அண்மையில் காணப்படுகிறது. ஐசக் அருமைராஜன் எழுதிய 'கீறல்கள்' இத்தொடர்பில் விதந்துரைக்கத் தக்கது. அண்மைக்காலத்தில் வந்த குறிப்பிடத்தக்க படைப்புக்களில் இது ஒன்று, "நாளைய சமுதாயப் புரட்சியில் கிறிஸ்தவன் ஈடுபடாமல் ஒதுங்கிவிட முடியாது. அதற்கு முதலில் என்னை அர்ப்பணிக்கிறேன்" என்று கூறும் புரட்சிகர இளைஞன் செல்லப்பாவும், கடுமையான சட்டத்தின் மூலமே கொடியவர்களை மாற்ற முடியும் என்று நம்பும் வேதமணி வாத்தியாரும், கிறிஸ்துவில் அசைக்க முடியாத நம்பிக்கை உடைய சாமுவேல் நாட்டையரும் பிறரும் கதை வளர்ச்சிக்கு மாத்திரமின்றி, கருத்து மோதலுக்கும் ஏதுவாயுள்ளனர்.

ஒட்டு மொத்தமாகக் கவனிக்குமிடத்து உண்மை புலனாகும். தனிமனிதவாதம், தார்மீகப் பிரச்சனை, பாலுறவுப் பிரச்சினை, உளவியல் அக்கறை முதலியன நகர வாழ்க்கையிலேயே, உயர்மட்டத்து மாந்தர்

வாழ்க்கையில் புதாகரமாய்த் தெரிகின்றன. முற்பட்ட நாவலாசிரியர்கள், லக்ஷ்மி, உதன்முக சுந்தரம், கா.சி.வெங்கடரமணி, சங்கரராம், சி.சு.செல்லப்பா, கா.ந.சுப்பிரமண்யம் போன்றோர். கிராமங்களையும் சிறு பட்டினங்களையும் களமாகக் கொண்டே நாவல்கள் எழுதினர். அண்மையில் பிரபல்யம் பெற்றுள்ளவர்களில் ஜெயகாந்தன், இந்திரா பார்த்த-சாரதி, நா.பார்த்தசாரதி, அகிலன், அசோகமித்திரன், ஆதவன், கல்பனா, ஆகியோர் சென்னை நகரத்தை மட்டுமின்றி, பம்பாய், புதுடில்லி, கல்கத்தா முதலிய பெருநகரங்களையும் கடல் கடந்த நகரங்களையும், நாவல்களுக்குக் களமாய்க் கொள்வர்.

இந்நாவல்களை எழுதும் ஆசிரியர்கள் நடமாடும் சமூகத்-தளத்தையும் இது பிரதிபலிக்கிறது எனலாம். நகர வாழ்க்கையின் வெவ்வேறு அம்சங்கள் தற்கால நாவலாசிரியர்களால் சித்திரிக்கப்பட்டுள்ளன. எடுத்துக் காட்டாக இந்தியாவில் முக்கிய உற்பத்தித் தொழில்களில் ஒன்றாக உள்ள சினிமா சிலபல நாவல்களுக்குப் பொருளாயிருக்கின்றது. அசோகமித்திரனின் 'கரைந்த நிழல்கள்' சினிமாத் தொழிலில் சம்பந்தப்பட்டோரை மையமாகக் கொண்டு எழுதப்பட்ட குறிப்பிடத்தக்க நாவல். தமிழ் நாட்டு சினிமாத்துறையின் சீரழிவை எடுத்துக் காட்டுவதாயுள்ளது ஜெயகாந்தன் எழுதிய 'சினிமாவுக்குப் போன சித்தாளு'. உண்மையான நபர்கள் சிலரை மனங்கொண்டு எழுதப்பட்ட இக்கதை கம்சலை என்ற பெண் பாத்திரத்தின் மூலம் 'இன்று நிகழும் கலாச்சாரச் சிதைவை' பிரதிபலிக்கிறது. இவற்றைவிடச் சில தொடர்கதைகளும் குறு-நாவல்களும் சினிமாத்தொழிலைப் பொருளாகக் கொண்டு எழுதப்பட்டுள்ளன.

சிற்சில புதிய போக்குகளை ஐயத்துக்கிடமின்றிப் பிரதி-பலிக்கும் தமிழ் நாவலிலக்கிய உலகம் இரு துருவங்களாகப் பிளவுண்டு கிடக்கிறது. அதீத தனிமனித நாவல்கள் ஒரு புறம். எழுந்துவரும் சமுதாய சக்திகளைக் கூட்டாக எடுத்துக்காட்டும் நாவல்கள் மறுபுறம். இவை ஒன்றற்கொன்று முரண்படுவனவே. ஆயினும் நாவலிலக்கியம் தனிமனிதரையும் சமூக இயக்கங்களையும் இணைக்க வல்லது. தனிமனிதனையும் சமுதாயத்தையும் முரண்பாட்டுச் சக்திகளாகக் காணும் பூர்ஷ்வா சிந்தனை முறையே இந்த அவலநிலைக்குக் காரணம். சமுதாய மாற்றத்திலும் சோஷலிஸ அமைப்பிலுமே மனிதன் மீண்டும் தன்னைப் பூரணமாக அறிவித்து முழுமையடைய முடியும் என்ற உண்மை உணரப்படும் பொழுதே இரு துருவங்களாகக் காணப்படும் நிலைமை இல்லாமற் போகும். அப்பொழுது நாவல் இலக்கியம் சமுதாய இலக்கியமாக முழுமை எய்தும்.

<u>அன்றாடப்பிரச்சினைகளும் தீர்வுகளும்:</u>

குறிப்பிட்ட ஒரு கூட்டமைப்புக்குள் அடக்க முடியாத எண்ணங்கள் பிரச்சனைகள் நாள்தோறும் தோன்றவே செய்கின்றன. அதற்கு, நீதி மன்றத்தில் நீதிபதிகள் முன்னுதாரணம் காட்டித் தீர்ப்புச் சொல்வது போல புனைகதை இலக்கியத்திலிருந்து பிரச்சினை தீர வழி காணலாம்.

சமுதாயத்தில் பெண்மைமதிப்பிற்குக் குறிப்பிடத்தகுந்த இடமுண்டு. மரபும் மாற்றங்களும் அப்பெண்மை மதிப்புகளை வெகுவாகப் பாதிக்கின்றன.

அப்பாதிப்புக்களைச் சரியான சமுதாயச் சூழலில் பொருத்திக் காட்டுவதுடன் கலை அழகுப் படைப்புக்களாகவும் தந்துள்ளார். பண்பாட்டுப் பிடிப்புப் பழமை மதிப்புக்களுக்குத்தான் மிகுந்த இடம் கொடுத்து நிற்கிறது. இருப்பினும் இயற்கையாயுள்ள சமுதாயமாற்றம் அப்பிடிப்பு நிலையிலிருந்து நெகிழ்வையும் கொடுக்கிறது. அவ்வகை நெகிழ்வினால் பாதிக்கப்படும் பெண்களை அணுகுவதற்குப் பலர் தயங்குகின்றனர். ஜானகிராமன் அவர்களுக்குக் கைகொடுத்து உலகிற்கு அறிமுகப்படுத்துகிறார்.

'அம்மா வந்தாளில்' வரும் அலங்காரம் வேறுபட்ட பிரச்சினைக்கு உள்ளாகிறாள். கணவன் இருக்கையிலேயே மனமறிந்து சிவசு என்பாருடம் சோரம் போகிறாள். காலப் போக்கில் உண்மையறிந்து விலகுகிறாள். இந்த விலகலினால் ஏற்படும் உளைச்சலுக்கு விதவை இந்துவின் நட்பு ஒத்தடமாக அமைகிறது. வேதபாடசாலை நடத்துவதைப் புனிதமாக நினைக்கிற பவானி கூட இந்த அப்புவின் இணைப்பைப் அங்கீகரிக்கிறாள். வேதத்தினால் அழுக்கை நீக்கிவிடவும் முடியாது. வேதப் பயிற்சியினால் உடலின் தேவையை மறைத்துவிடவும் முடியாது. பழமை மதிப்புக்களுக்கு வீழ்ச்சியையும், புதுமை மதிப்புகளுக்கு எழுச்சியையும் இங்கு உணரலாம்.

சரீர உறவென்பது அனுசுயாவைப் பொறுத்தமட்டிலும் மிகச் சாதாரண உறவு. அவளுக்கு உலகம் முழுவதையும் அணைத்துத் தழுவிப் பெருகி வெள்ளப் பெருக்காக ஓடவேண்டும் போலிருக்கிறது. இந்த அனுசுயாவை 'உயர்த்தேனில்' காணலாம். இவளின் வளர்ச்சியாக 'மரப்பசுவின்' அம்மணியைக் காணலாம். இவளுக்கு எல்லோரையும்

தொட்டுப் பேச வேண்டுமென்பதில் கொள்ளை ஆசை. இசைக்கலைகளுடன் சோரம் போகிற வாழ்விற்கு அறிமுகமாகி நாட்டியக்காரியாக வளர்ந்து உலகமெல்லாம் சுற்றிவருகிறாள். இறுதியில் இல்லற வாழ்வின் இரகசியத்தை உணர்கிறாள். கட்டுப்பாடற்ற விடுதலை பெண்களுக்குக் கூடாது. மிகையான சுதந்திரம் பெண்மையை உயர்த்தாது; அழிக்கத்தான் செய்யும். இதனை அங்கதமாக மேற்சுட்டிய இரு நாவல்களும் உணர்த்தி நிற்கின்றன. சமுதாயத்தின் அர்த்தமற்ற வாழ்வும், பொருளற்ற சடங்குகளும் அப்பெண்களுக்கு வெறுப்பைத் தந்து விடுதலை வேட்கையை வளர்க்கின்றன.

தி.ஜானகிராமன் ஏற்கனவே 'மோகமுள்','அம்மா வந்தாள்' ஆகிய நாவல்களின் மூலம் தமிழ் நாவல் துறையில் பெரும் சாதனை புரிந்தவர். இவரது நாவல்களில் முக்கியமாக இடம் பெறும் ஒரு குணம், பாலுறவு பற்றிய பிரச்சினை, நம் சமூகத்தில் இது ஒரு கடுமையான பிரச்சினை. குறிப்பாக சமூக மாறுதல் காலத்தில் இப்பிரச்சினை மிகக் கடுமையாக இருக்கிறது. மரபு முறைக்குப் பெருமை சொல்லிக் கொள்ளும் இந்தியச் சூழலில் கணவன் மனைவி ஆகியவர்களுக்கு இடையில் பாலுறவின் தொடர்பில் ஏற்படும் ஆதிக்கம் உண்மையில் ஒரு கடுமையான பிரச்சினை. இதனைக் கவர்ச்சியாக்காமல் பிரச்சினையாக்கும் முறையில்தான் தி.ஜானகிராமன் (மரப்பசு), இந்திரா பார்த்தசாரதி (ஹெலிக்காப்டர்கள்), ஜெயகாந்தன் ஆகியவர்கள் சிறந்திருக்கிறார்கள். இத்தகைய குடும்ப முறையைத் தவிர வேறு என்ன இருக்கிறது என்ற முறையில் இந்நாவல்கள் முடிவு அடைந்த போதிலும் மரபு முறை உறவின் தகர்வை இந்நாவல்கள் நியாயப்படுத்துகின்றன. மார்க்ஸ் கூறிய மாதிரி ஒரு சமூகத்தின் சிக்கலான உறவுகளை ஆண் பெண் உறவு ஒரு

சுருங்கிய வடிவில் வெளிப்படுத்துகிறது, என்பது உண்மை. இப்பிரச்சினை விரிப்புகள் இந்நாவல்களில் அடங்கியுள்ளன.[1]

ஜெயகாந்தனின் ரிஷிமூலம், ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம், ஆதவனின் காகித மலர்கள், அசோகமித்திரனின் தண்ணீர் ஆகிய நாவல்கள் இன்றைய சமூகச் சூழ்நிலையில் மனிதனின் வாழ்வியல் சிக்கலைச் சொல்லுகின்றன. இன்றைய நிலையில் மனித வாழ்வுக்குப் பொருள் உள்ளதா? அப்படியிருந்தால் அது என்ன? என்ற கேள்வியைக் கூர்மையாக இவை எழுப்புகின்றன. காலங்காலமாகச் சமயங்களும், தத்துவங்களும் கேட்டு விடைபெறத் தவிக்கும் இக்கேள்வி இன்றைய சமூகச் சூழலிலும் கேட்கப்படுகிறது. இவ்வகையில் இந்நாவல்கள் நவீன நாவல்கள் என்ற கூறத் தகுதி உடையவைகள், மனிதனுக்காக உறவுகள் சமத்துவம் உடையதாக, எவ்வகையிலும் சுரண்டலற்றதாக, அன்பின் வெளியீடாக இருக்க வேண்டும், என்பதையே இந்நாவல்களின் பாத்திரங்களும் ஏதோ ஒரு வடிவில் வெளிப்படுத்துகின்றன. வண்ண நிலவனின் கடல்புரத்தில், கம்பாநதி ஆகியவற்றில் வரும் பாத்திரங்கள் அன்பில் வார்த்தெடுக்கப்பட்டவை. சுரண்டலை எவ்வகையிலும் அனுமதிக்காத மனித நேயத்திலிருந்து மலர்பவை இப்பாத்திரங்கள். இத்தகைய மனித நேயமற்ற சமூகச் சூழலில்தான் மனிதர்கள் கடுமையான சிக்கலுக்கு உள்ளாகிச் சிதைந்து விடுகிறார்கள், என்பதை இந்நாவல்கள் விளக்குகின்றன. மனித உறவுகளின் மேன்மை சுட்டப்படும் முறையில் இந்நாவல்கள் எழுபதுகளில் தனிச்சிறப்புவாய்ந்தவையாக மதிப்பிடத்தக்கவை.

இன்றைய உலக நிலைமைகளில் சமூக நிலைமைகளில் மனித உறவுகள் பற்றிய பிரச்சினை கடுமையாகி உள்ளது. சோசலிசம் என்ற போர்வைக்குள் உடைமை உறவுகளே வெற்றி பெறுவதை அண்மைக்கால நிகழ்வுகள் தெளிவு படுத்துகின்றன.

புனைகதைகள் நூற்றுக்கணக்கில் தோன்றுகின்றன. தோன்றுவன யாவும் புரட்சிகரமான கருத்துக்களைத் தருவதில்லை. சமுதாய உணர்வுடன் பிரச்சினைகளை உற்று நோக்கித் தீர்வுக்கு வழி காண்பவர் ஒரு சில எழுத்தாளர்களே. அவர்கள் எழுத்துக்களில் தோன்றும் நல்ல கருத்துக்களை ஏற்றல் அவ்வக்கால மக்கள் கடன்.

எழுபதுகளில் தமிழ் நாவல்கள் பற்றிப் பேசும் பொழுது இந்நாவல்கள் உற்பத்தியாகும் சூழல் பற்றிக் குறிப்பிட வேண்டியிருக்கிறது. நாவல்களை வெளியிடுபவர்கள் பத்திரிகை உரிமையாளர்கள், பதிப்பக உரிமையாளர்கள். பத்திரிகைகளும் பதிப்பகங்களும் வணிக நிறுவனங்கள். நாவல் வெளியீடு, விற்பனை முதலிய செயல்கள் வணிக முறைக்கு உட்பட்டவை. இதன் விளைவாக நாவல்களில் சில போக்குகள் முதன்மைப் படுகின்றன.

எழுத்தாளர்களின் அமைப்புக்கள் தமக்குத் தேவையான வெளியீட்டு நிறுவனத்தை அமைத்துக்கொள்ளவில்லை. கல்வி நிறுவனங்கள் இலக்கியத் தரம் பற்றிய உணர்வை ஏற்படுத்தவில்லை. ஆய்வு நிறுவனங்களும் ஆய்வுத் துறைகளும் நிகழ்கால உணர்வோடு செயல்படவில்லை. சாகித்திய அகாடமி, இலக்கியச் சிந்தனை, செட்டியார் நினைவுப் பரிசு, ஞானபீடம்

ஆகியவை சில தமிழ் நாவல்களுக்குத் தாம் விரும்பும் காரணங்களுக்காகப் பரிசு அளித்து உள்ளன.[2] இவர்களில் ஒரு பகுதியினர் கலை கலைக்காகவே என்ற கோட்பாடு உடையவர்கள். தி.ஜானகிராமன், லா.ச.ரா., அசோகமித்திரன் முதலியவர்கள் இத்தகையவர். இன்னொரு சாரார் தம்மை முற்போக்கு வாதிகள் என்று பிரகடனம் செய்து கொண்டவர்கள். ஜெயகாந்தனைப் பொறுத்தவரை ஒரு தனி நிறுவனம் போல இயங்குபவர். கணையாழி என்ற ஒரே ஒரு பத்திரிகை மட்டும் உண்மையாகவே தி.ஜானகிராமன், அசோகமித்திரன், இந்திரா பார்த்தசாரதி, வண்ணநிலவன் முதலிய எழுத்தாளர்களை அவர்களின் ஆன்மா சிதைவுறாமல் காப்பாற்றி வந்துள்ளது.

வாழ்க்கையை நுணுக்கமான விவரங்களோடு சித்திரித்து அறுபதுகளில் தமிழ் நாவல்களுக்குள் நுழைந்தவர் நீல.பத்மநாபன். எழுபதுகளில் அவரது நாவல்களில் குறிப்பிடத் தக்கவை பள்ளிகொண்டபுரமும், உறவுகளும். பள்ளிகொண்டபுரத்தில் தன்னைப் பற்றிய சோகங்களிலேயே மூழ்கி அவற்றிலிருந்து மீள முடியாமல் தவிக்கும் மனிதனை விவரித்தார். உறவுகளிலும் இத்தகைய மனித சோகமே படலம் படலங்களாகத் தொடரும் விவரிப்புகளுடன் இடம் பெறுகிறது. எத்தகைய சமூக நிலைகள் இத்தகைய மனித சோகத்தை ஏற்படுத்துகின்றன என்பதற்காக விவரங்கள் இந்நாவல்களில் நிறையவே இடம் பெற்றுள்ளன.

டி.செல்வராஜின் 'தேநீர்' தேயிலைத் தோட்டத்தில் எழுந்த தன்னெழுச்சியான ஒரு போராட்டத்தைச் சித்திரிக்கிறது. சில மனிதர்களின்

அக உளைச்சல்களையும் இந்த நாவல் சித்திரிக்கிறது. ஆயினும் இறுதியில் அரசியல் மனிதனுக்கே அழுத்தம் கொடுக்கும் முறையில் நாவல் முடிவடைகிறது. சின்னப்பபாரதியின் 'தாகம்' குறிப்பாக முதல் பகுதி ஒர் உழவனின் வாழ்க்கையை நுணுக்கமான விவரங்களோடு அற்புதமாகச் சித்திரிக்கின்றது. இரண்டாம் பகுதியில் இடம் பெறும் சமூகக் கொடுமைகள் கற்பனையானவை அல்ல; இந்நாவலிலும் ஒரு அரசியல் மனிதனுக்கு ஆதிக்கம் கொடுக்கப்படுகிறது. பொன்னீலனின் 'கரிசல்' விவசாயிகளின் போராட்டத்தை விவரிக்கிறது. போராட்டத்தின்போதே ஒரு கற்பிதமான பொதுவுடைமைச் சமுதாயம் எழுவதைச் சித்திரிக்கிறார். அத்துடன் நாவலின் தலைவனாகிய ஒரு கிராமத்து ஆசிரியர் மீது ஒரு அரசியல்வாதியின் பார்வையே நாவலாசிரியர் மூலம் விழுந்திருக்கிறது. வயதான ஒரு நிலக்கிழாரின் இளம் மனைவி தன் கணவனை விட்டு இன்னொரு இளைஞனை மணந்து கொள்வது என்பது இந்த நாவலின் ஒரு சிறப்பு. பொன்னீலனின் 'கொள்ளைக்காரர்கள்' மனிதர்களை அவர்களின் கடுமையான சிக்கல்களோடு விவரிப்பதில் சிறந்திருக்கிறது. சமுத்திரத்தின் நாவல்கள் சமூக விவரிப்புகளை நிறையக் கொண்டிருந்தாலும், இந்திரா பார்த்தசாரதியின் குருதிப்புனல் பற்றி முற்போக்கு வட்டாரத்தில் எத்தகைய விமர்சனங்கள் எழுந்தபோதிலும், முற்போக்கு வட்டாரத்தவர் தொடாத, தொட விரும்பாத பிரச்சினையை நூலுக்குள் கொண்டு வந்ததற்காகப் பாராட்டப்பட வேண்டியவர் இவர்.

லா.ச.ரா.வின் 'அபிதா' தமிழ் நாவல்களில் ஒரு சிகரமாக மதிப்பிடத் தக்கது. அபிதா பற்றிய உணர்விலிருந்து எழும்

வருணனைகள் அற்புதமானவை. நாவலின் இறுதியில் அபிதா ஒரு தெய்வமாகக் காட்சியளிக்கிறாள். தெய்வம் பற்றிய பார்வைகளுக்குள்ளும் ஊடுருவிச் சென்று இறுதியில் மனிதன் தன்னையே பார்த்துக் கொள்கிறான். ராஜம் கிருஷ்ணனின் பல நாவல்களும் தமிழ் நாட்டுச் சூழலில் நடைபெற்ற சில நிகழ்வுகள், போராட்டங்கள் ஆகியவற்றை விவரிக்கின்றன. நாஞ்சில் நாடனின் 'தலைகீழ் விகிதங்கள்' நுணுக்கமான சமூக விவரிப்புகளைக் கொண்டவை. இந்த விவரிப்புகள் ஆர்ப்பாட்டமான முறையில் தரப்படுகின்றன. கி.ராஜநாராயணனின் 'கோபல்ல கிராமம்' நாயக்கமார்கள் பற்றிய சுவையான கதைத் தொகுப்பு. ஒரு நாவலுக்கான கட்டமைப்போ, படைப்புத்தரமோ இதில் இல்லை. முற்போக்கு வட்டாரத்தவராகத் தன்னைச் சொல்லிக் கொள்ளாத ஐசக் அருமைராசனின் 'கீறல்கள்' எழுபதுகளில் வெளிவந்த மிகச் சிறந்த நாவல்களில் ஒன்றாக மதிக்கத் தக்கது. ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தினுள் மதத்திற்கும் மனிதனுக்கும் நடைபெறும் போராட்டம் அற்புதமாகச் சித்திரிக்கப்படுகிறது. உண்மையான ஒரு சமயவாதி சமூகப் போராட்டத்தில் தீவிரமான அக்கறை கொள்வதின் இயல்பான தன்மையை இந்த நாவல் வெளிப்படுத்துகிறது.[3]

ஜி.நாகராஜனின் 'நாளை மற்றுமொரு நாளே' ஒரு அற்புதமான நாவல். ஆர்ப்பாட்டம் இல்லாமல் சமூகத்தில் தரமற்றவன் என்று கருதப்படும் ஒரு மனிதனை உண்மையான மனித நேயத்தோடு சித்திரிப்பதன் மூலம் கலைத்தரத்தில் இந்நாவல் சிறப்படைகிறது. கரிச்சான் குஞ்சுவின் 'பசித்த மானுடம்' தஞ்சாவூர் மாவட்டத்தில் பிராமணக் குடும்பத்தின் சிதைவை நுட்பமான விவரங்களோடு சித்திரிக்கிறது. கேவலமானவர்கள்

என்று கருதப்படும் சில மனிதர்களுக்குள்ளும் சமயச் சார்பில் சொல்லப்படும் மகான்கள் இருப்பதை இந்நாவல் இனம் காட்டுகிறது. தமிழ் நாவலாசிரியர்களில் பலரால் கவனிக்கப்படாத ஆனால் கட்டுக்கோப்பை அருமையான முறையில் உருவாக்குவதில் சிறந்தவர் எம்.வி.வெங்கட்ராம். அவரது 'அரும்புகள்' எழுபதுகளில் குறிப்பிடத் தக்க நாவல்களில் ஒன்று. சுஜாதா, இந்துமதி, பாலகுமாரன் ஆகியவர்கள் எழுபதுகளில் குறிப்பிடத் தக்க நாவலாசிரியர்களாகக் கருதப்படுபவர்கள். இவர்களின் நாவல்கள் ஒரு நவீனத் தன்மையோடும் நடைச் சிறப்போடும் அமைகின்றது. சமூக வாழ்வின் சில குறிப்பிட்ட பிரச்சனைகளில் இவர்கள் அதிகமான அழுத்தமும் தருகிறார்கள். வாசகர்களிடம் இவர்கள் ஏற்படுத்தும் பாதிப்பு இம்முறையிலேயே அமைகிறது.

எழுபதுகளின் தமிழ் நாவல்களில் சாதனை என்று பார்த்தால் ஏற்கனவே தமிழ் நாவல்களின் சிகரங்களாக விளங்கும் மோகமுள், பொய்த்தேவு, நாகம்மாள், இதயதாகம், அம்மா வந்தாள் ஆகிய நாவல்களுக்கு சிகரான சிகரங்களாக அபிதா, ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம் ஆகியவை நிமிர்ந்து நிற்க முடியும்.

பல புதியவர்கள் புதிய பிரச்சினைகளோடு தமிழ் நாவல்களுக்குள் இக்கால அளவில் நுழைந்து வெற்றி பெற்றிருக்கிறார்கள். ஆர்ப்பாட்டம் இல்லாத முறையில் நாவலை நடத்துவது என்ற முறை அசோகமித்திரன், வண்ணநிலவன், பூமணி மூலம் தமிழ் நாவலுக்குள் வந்திருக்கிறது. முற்போக்காளர் வட்டாரம் நாவல் துறையில் சாதனை நிகழ்த்த முடியும் என்பது நிரூபணமாகியிருக்கிறது. நவீன மயமான உத்திகள் சுஜாதா முதலியவர்கள் மூலம் நாவலுக்குள் இடம் பெற்றிருக்கிறது.

"நாவலாசிரியன் தன் நாவலுக்கு விஷயமாக எதைக் கையாள வேண்டுமென்று சொல்வதற்கு யாருக்கும் அதிகாரம் கிடையாது. தனக்கு விஷயம் என்று தோன்றுவதை, தனக்குத் தோன்றுகின்ற ரீதியில், தன் போக்கில் எழுதுகிறவன் தான் நல்ல நாவலாசிரியன். ஒரு விஷயம் மட்டும், பொருள் மட்டும் போதாது நாவலை உருவாக்குவதற்கு என்பதும் உண்மை. உலகில் உயர்ந்த நாவல்களில் எல்லாம் ஒவ்வொரு விஷயம் மட்டுமே கையாளப்பட்டிருக்கிறது என்று சொல்வதற்கில்லை. ஒரு விஷயத்தை ஒரே நோக்கிலிருந்து கையாள முயன்றாலும் கூட, நல்ல நாவல்கள் மூலம் அதுவே பல விஷயங்களையும் பல கோணங்களிலிருந்தும் நோக்க வாசகர்களாகிய நமக்குத் தெம்பு தருகிறது என்பதுதான் சிறப்பாகக் கவனிக்க வேண்டிய இலக்கியத் தத்துவம்" – இத் தத்துவத்தை அளிப்பவர் க.நா.சு.

## அடிக்குறிப்புகள்

1. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும், ப.147
2. மேலது, ப.142
3. மேலது, ப.151

## 9. ஆய்வு முடிபுகள்

இவ்வாய்வின் முடிவை மூன்று கூறுகளாகக் காணலாம்.

(1) எழுபதுகளிலும் அக்காலத்திற்குச் சற்று முன்பும் இந்தியாவில் நடந்த நிகழ்ச்சிகளை அடிப்படையாகக் கொண்டு எழுந்த புனைகதைகள்.

(2) இப்பத்தாண்டுகளில் வெளிவந்த புனைகதைகளைப் பற்றிய ஓர் கண்ணோட்டம்.

(3) இப்புனைகதைகளால் சமுதாயம் பெற்ற மாற்றமும் பயனும்.

(1) எழுபதுகளில் தோன்றிய புனைகதைகளில் நாட்டு நடப்பினைத் தெற்றென உள்ளடக்கிய நாவல்கள் சில. 1969-இல் நடந்த கீழ வெண்மணிக் கலகம் இந்திரா பார்த்தசாரதியின் 'குருதிப்புனலாக' வெளிவந்தது. காந்தி நூற்றாண்டு விழா, அகிலனின் 'எங்கே போகிறோம்?', 'பால்மரக்காட்டினிலே' நாவல்களை எழுதத் தூண்டியது. நெசவாளர்கள் பஞ்சாலையில் கண்ட போராட்டத்தைப் 'பஞ்சும் பசியும்' எனும் நாவலாகத் தந்தார், தொ.மு.சி. ரகுநாதன். 1972-இல் ஜெயப்பிரகாசர் முன்னிலையில் சம்பல் கொள்ளைக்காரர்கள் சரணடைந்து திருந்தியது ராஜம் கிருஷ்ணனின் 'முள்ளும் மலர்ந்தது' வாக வந்தது. 1972-இல் இந்திய-பாகிஸ்தான் போரில் நம் வீரர்களின் திறமையைக் காட்டிட சுஜாதாவின் '14 நாட்கள்' வெளிவந்தது. 1973-இல் தமிழக அரசின் அரிசிக்கட்டுப்பாடு, பொன்னீலனின்

'கொள்ளைக்காரர்கள்' வர உதவியது. 1969-இல் சென்னையில் குடிநீர் கிடைக்காத நிலையில் நமக்குத் 'தண்ணீரை'த் தந்தார் அசோகமித்திரன்.

1977-இல் அரசில் ஏற்பட்ட ஆட்சி மாற்றமும் அதன் அவலமும் இந்திரா பார்த்தசாரதியின் 'சுதந்திர பூமி'யைத் தந்தது. 1973-இல் அரிசி கடத்தல் நிகழ்ச்சி 'வேலியும் பயிரும்' வரக் கருவாகியது. கு.சின்னப்பபாரதியின் 'தாகம்' அக்காலத்தில் விவசாயிகள் பட்ட துன்பத்தை எடுத்துரைக்கிறது. 1979-இல் குழந்தைகள் நூற்றாண்டு விழா ராஜம் கிருஷ்ணனின் 'கூட்டுக்குஞ்சுகள்' வெளிவர உதவியது. இவையெல்லாம் அக்காலத்தில் ஏற்பட்ட நிகழ்சிகளை நாவல்களாகப் படைத்த வரலாற்று ஆவணங்களாகும் சிறப்புச் செய்தனர் புனை கதையாளர்கள்.

(2) எழுபதுகளில் தமிழகத்தில் புனை கதையாளர்கள் பலர் இருந்தனர். அவர்களுள் சிலர் குறிப்பிடத்தக்கவர்கள். அகிலன், அஹிம்சையையும், ஆன்மீகத்தையும் காந்தீயக் கொள்கைகளையும் நியாயத்தையும், நேர்மையையும் கடைப்பிடிக்க தனக்கே உரித்தான எளிய இனிய இயல்பான முறையில் நான்கு நாவல்களிலும் இரு சிறுகதைத் தொகுப்புகளிலும் எழுதி இந்நாட்டு மக்களுக்கு வழிகாட்ட முயன்றுள்ளார். ராஜம் கிருஷ்ணனின் பல நாவல்களும் தமிழ் நாட்டுச் சூழலில் நடைபெற்ற சில நிகழ்வுகள், போராட்டங்கள் ஆகியவற்றை விவரிக்கின்றன. இவர் சமூக விபரத்தொகுப்பினூடே கதை சொல்லுதல் சிறப்பாம் உள்ளது.

ஐசக் அருமைராசனின் 'கீறல்கள்' சிறந்த நாவல்களில் ஒன்று, உண்மையான ஒரு சமயவாதி சமூகப் போராட்டத்தில் தீவிரமான ஈடுபாடு கொள்ளும் இயல்பான தன்மையினை இது வெளிப்படுத்துகிறது.

கரிச்சான் குஞ்சுவின் 'பசித்த மானுடம்' கேவலமானவர்கள் என்று கருதப்படும் சில மனிதர்களுக்குள்ளும் சமயச் சார்பில் சொல்லப்படும் மகான்கள் இருப்பதை இனம் காட்டுகிறது. சுஜாதா, எழுபதுகளில் குறிப்பிடத் தக்க நாவலாசிரியர். இவர் நாவல்கள் நவீனத்தன்மையோடும் நடைச் சிறப்போடும் அமைகின்றன. சமூக வாழ்வின் பிரச்சனைகளுக்கு இவர்கள் அதிகமான அழுத்தம் தருகிறார்கள். எழுபதுகளில் லா.ச.ரா வின் 'அபிதா', ஜெயகாந்தனின் 'ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்' குறிப்பிடத் தக்கன. புதிய பிரச்சினைகளோடு நாவலை நடத்துவது என்ற முறை அசோகமித்திரன் மூலம் தமிழ் நாவலுக்குள் வந்திருக்கிறது; நவீனமயமான உத்திகள் சுஜாதா மூலம் நாவலுக்குள் இடம் பெற்றிருக்கிறது.

டி.செல்வராஜின் 'தேநீர்', தேயிலைத் தோட்டத்தில் எழுந்த தன்னெழுச்சியான ஒரு போராட்டத்தைச் சித்திரிக்கிறது. சின்னப்பபாரதியின் 'தாகம்' குறிப்பாக முதல் பகுதி – ஒரு உழவனின் வாழ்க்கையை நுணுக்கமான விவரங்களோடு சித்திரிக்கின்றது. பொன்னீலனின் 'கரிசல்', விவசாயிகளின் போராட்டத்தை விவரிக்கிறது. போராட்டத்தின் போதே பொதுவுடைமைச் சமுதாயம் எழுவதைச் சித்திரிக்கிறார். பொன்னீலனின் 'கொள்ளைக்காரர்கள்' மனிதர்களை அவர்களின் கடுமையான

சிக்கல்களோடு விவரிப்பதில் சிறக்கிறது. இந்திரா பார்த்தசாரதி 'குருதிப்புனல்'லில் பலர் தொட விரும்பாத பிரச்சினையை புனைகதைக்குள் கொண்டுவந்துள்ளார்.

(3) 'பொதுவாக நடப்பியல் நெறியும் குறிக்கோளியல் வகையும் ஒரே காலகட்டத்தில் இருக்க முடியாது' என்பர். எழுபதுகளில் புனைகதைகள் ஒரு தனிமனிதனைச் சுற்றியமைந்த கதையாக உருப்பெறவில்லை. அனைத்தும் நாட்டு நடப்பியலையும் சமூகச் சிக்கல்களையும் உள்ளதை உள்ள-வாறே புலப்படுத்துகின்றன. எனவே குறிக்கோளியல் சிதைவுறுகின்றது. குறிக்கோள் இல்லாத படைப்பு சமுதாய வாழ்க்கையைச் செம்மையாக்க உதவும் என்று எதிர்பார்க்க முடியாது.

மக்களின் வாழ்க்கைப் பிரச்சினைகள் பல. இப்பிரச்சினைக்கு தீர்வு காண தமிழ் நாவல்களில் தேவையான தீவிரம் காணப்படவில்லை. நாவலாசிரியர்கள் இதற்குத் தேவையான ஆய்வைச் செய்துகொள்ள வேண்டும். தற்போது இத்தகைய ஆய்வு இல்லாத நிலையில்தான் கதை பின்னுவது கற்பனை மிகை உணர்வுடன் நாவல்களாகக் காட்சி தருகின்றன. சமூக ஆய்வு வேண்டும், சமூக ஆய்வு என்பது ஒரு சரியான வரலாற்றுப் பார்வையோடு தத்துவப் பார்வையும் கலந்ததாக இருக்க வேண்டும். எழுபதுகளில் வெளிவந்த தமிழ் நாவல்கள் இத்தகைய பரிமாணத்துடன் வெளிவரவில்லை. புனைகதைகளின் செல்வாக்கினால் மக்கள் திருந்த வாய்ப்புண்டு, அப்போதுதான் புனைகதைகள் வாழ்க்கைக்கு வழிகாட்டுகின்ற பயன்தரும் இலக்கியங்களாகப் போற்றப்படும்.

## துணை நூற்பட்டியல்

### ஆய்வுக்கு உரியவையாக தெரிந்தெடுக்கப்பட்ட நூல்கள்


1. அகிலன், எங்கே போகிறோம்?
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.

2. ----, எரிமலை,
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1986.

3. ----, சத்திய ஆவேசம்,
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.

4. ----, பசியும் ருசியும்,
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.

5. ----, பால்மரக் காட்டினிலே,
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1986.

6. ----, வேலியும் பயிரும்,
பாரி புத்தகப் பண்ணை, சென்னை, 1982.

7. அசோகமித்திரன், தண்ணீர்,
சி.எல்.எஸ்., சென்னை, 1973.

8. இந்திரா பார்த்தசாரதி, குருதிப்புனல்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1983.

9. ----------------, சுதந்திர பூமி,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1975.

10. ----------------, தீவுகள்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1976.

11. இந்திரா பார்த்தசாரதி, ஹெலிக்காப்டர்கள் கீழே இறங்கிவிட்டன,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1981.

12. இராமலிங்கம், மா., பொய்யான இரவுகள்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1973.

13. ஜசக் அருமைராஜன், கீறல்கள்,
வாசகர் வட்டம், சென்னை, 1975.

14. கந்தசாமி, சா., தொலைந்து போனவர்கள்,
கலைஞன் பதிப்பகம், சென்னை, 1978.

15. கரிச்சான் குஞ்சு, பசித்த மானுடம்,
மீனாட்சி பதிப்பகம், மதுரை, 1978.

16. சின்னப்ப பாரதி, கு., தாகம்,
முற்போக்கு சிந்தனையாளர் மன்றம், நாமக்கல், 1975.

17. சீனிவாசன், ரா., அழுகை,
வாசகர் வட்டம், சென்னை, 1979.

18. சுப்ரமணியம், க., வேரும் விழுதும்,
வாசகர் வட்டம், சென்னை, 1970.

19. சுஜாதா, சொர்க்கத்தீவு,
குமரிப்பதிப்பகம், நாகப்பட்டினம், 1975.

20. -----, பதினாலு நாட்கள்,
குமரிப்பதிப்பகம், நாகப்பட்டினம், 1971.

21. சூடாமணி, ஆர்., மானிட அம்சம்,
இமயப்பதிப்பகம், நாகப்பட்டினம், 1974.

22. செல்வராஜ்,டி., தேநீர்,
கவிதா, சென்னை, 1973.

23. நல்லபெருமாள்,ர.சு., திருடர்கள்,
பாரி நிலையம், சென்னை, 1976.

24. ---------------, போராட்டங்கள்,
கிறிஸ்தவ இலக்கிய சங்கம், சென்னை, 1977.

25. பத்மநாபன்,நீல., உறவுகள்,
வாசகர் வட்டம், சென்னை, 1975.

26. -----------, பள்ளிகொண்டபுரம்,
வாசகர் வட்டம், சென்னை, 1975.

27. பார்த்தசாரதி,நா., ஒப்புரவு,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1977.

28. --------------, கற்சுவர்கள்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1977.

29. --------------, சத்தியவெள்ளம்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1973.

30. --------------, பிரதிபிம்பம்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1978.

31. பொன்னீலன், சரிசல்,
என்.சி.பி.டி., சென்னை, 1976.

32. -------, கொள்ளைக்காரர்கள்,
என்.சி.பி.டி., சென்னை, 1979.

33. மணிசேகரன், கோவி., கோவியின் சிறுகதைகள்,
வி. மாணிக்கம் கம்பெனி, சென்னை, 1973.

34. ரகுநாதன், தொ.மு.சி., பஞ்சும் பசியும்,
ஸ்டார் பிரசுரம், சென்னை, 1970.

35. ராஜம் கிருஷ்ணன், அலைவாய்க்கரையில்,
பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1978.

36. -----------, கரிப்பு மணிகள்,
தாகம், சென்னை, 1974.

37. -----------, கூட்டுக்குஞ்சுகள்,
பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1980.

38. -----------, கூடுகள்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை, 1980.

39. -----------, முள்ளும் மலர்ந்தது,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை, 1981.

40. -----------, விலங்குகள்,
பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1981.

41. -----------, வீடு,
பாரி புத்தகப்பண்ணை, சென்னை, 1980.

42. -----------, புயலின் மையம்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை, 1971.

43. -----------, வேருக்கு நீர்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை, 1972.

44. ராஜேந்திரன்,சி., விண்ணும் மண்ணும்,
தமிழ் எழுத்தாளர் கூட்டுறவு சங்கம், சென்னை, 1977.
45. ராமாமிருதம்,லா.ச., அபிதா,
வாசகர் வட்டம், சென்னை, 1970.
46. வேலாயுதம்,என்.ஏ., இருவிழிகள்,
அன்பு நிலையம், வடிவீஸ்வரம், நாகர்கோவில், 1974.
47. ஜானகிராமன்,தி., அம்மா வந்தாள்,
மீனாட்சி புத்தகநிலையம், மதுரை., 1976.
48. -----------, மரப்பசு,
ஐந்திணைப் பதிப்பகம், சென்னை, 1975.
49. செயகாந்தன்,த., இறந்தகாலங்கள்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.
50. -----------, உண்மை சுடும்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.
51. -----------, உன்னைப்போல் ஒருவன்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.
52. -----------, ஒருபிடி சோறு,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.
53. -----------, ஒரு மனிதன் ஒரு வீடு ஒரு உலகம்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1973.
54. -----------, ஒரு நடிகை நாடகம் பார்க்கிறாள்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1971.

55. செயகாந்தன்,த., கங்கை எங்கே போகிறாள்?
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1978.
56. ------------, சிலநேரங்களில் சில மனிதர்கள்,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1970.
57. ------------, பாவம் இவள் ஒரு பாப்பாத்தி,
சரோஜினி பப்ளிகேஷன்ஸ், சென்னை, 1978.
58. ------------, யுகசந்தி,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1974.
59. ------------, வாழ்க்கை அழைக்கிறது,
மீனாட்சி புத்தக நிலையம், மதுரை, 1975.
60. ஜெகசிற்பியன், ஞானக்குயில்,
வானதி பதிப்பகம், சென்னை, 1973.

## ஆ. ஆய்வுக்குப்பயன்பட்ட தமிழ் நூல்கள்

1. அசோகமித்திரன், சில ஆசிரியர்கள் சில நூல்கள்,
சுந்தர நிலையம், சென்னை, 1987.
2. அருணாசலம்,சபா., தமிழ்நாவல்களில் காந்தியத்தாக்கம்,
காளத்தி நூலகம், தேவகோட்டை, 1981.
3. இராமலிங்கம்,மா., இருபதாம் நூற்றாண்டுத் தமிழ் இலக்கியம்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1985.

4. இராமலிங்கம், மா., நாவல் இலக்கியம்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1975.

5. -------------, நோக்குநிலை,
இராசி பதிப்பகம், கும்பகோணம், 1984.

6. -------------, புனைகதை வளம்,
தமிழ் எழுத்தாளர்கள் கூட்டுறவு சங்கம், 1973.

7. கனகசுந்தரம், திருமதி, வெ., செகசிற்பியனின் சமூகப் புதினங்கள்,
வானதி பதிப்பகம், சென்னை, 1985.

8. கைலாசபதி, க., சமூகவியலும் இலக்கியமும்.
நியூ செஞ்சுரி புக் உறவுஸ், சென்னை, 1979.

9. -----------, தமிழ் நாவல் இலக்கியம்,
நியூ செஞ்சுரி புக் உறவுஸ், சென்னை, 1984.

10. சிவக்கண்ணன், அ., மு.வ.வின் நாவல்களில் சமுதாயச் சிக்கல்கள்,
மதுரா பதிப்பகம், மதுரை, 1984.

11. சிவத்தம்பி, கா., நாவலும் வாழ்க்கையும்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1978.

12. சீதாலட்சுமி, வே., தமிழ் நாவல்கள் (அகரவரிசை),
உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1985.

13. ஞானி, மார்க்சியமும் தமிழ் இலக்கியமும்,
இலஞ்சியார் பதிப்பகம், திருநெல்வேலி, 1979.

14. தமிழண்ணல், ஆய்வியல் வழிகாட்டி,
ஏரக வெளியீடு, மதுரை, 1979.

15. தட்சிணாமூர்த்தி, நாவல் ஆய்வு,
இலஞ்சியார் பதிப்பகம், திருநெல்வேலி, 1979.
16. தோத்தாத்ரி, எஸ்., தமிழ் நாவல்கள் சில அடிப்படைகள்,
அகரம், சிவகங்கை, 1981.
17. -------------, தமிழ் நாவல்கள் சில ஆய்வுகள்,
நியூ செஞ்சுரி புக் உறவுஸ், சென்னை, 1988.
18. மணிமாறன், பா.அ.ம., இந்திரா பார்த்தசாரதி ஒரு மதிப்பீடு,
விஜய் பப்ளிகேஷன்ஸ், மதுரை, 1979.
19. முத்தையா, கரு., செயகாந்தன் நாவல்களில் பாத்திரப்படைப்பு,
முத்துமீனாள் பதிப்பகம், தேவகோட்டை, 1978.
20. ராசு, த., தமிழ் நாவல்களில் இலக்கியத்தரம்,
மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1986.
21. ------, நாவல்களில் பாத்திரப்படைப்பு,
மணிவாசகர் பதிப்பகம், சிதம்பரம், 1987.
22. வீராசாமி, தா.வே., தமிழ் நாவல் இயல்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1986.
23. -------------, தமிழ் நாவல் வகைகள்,
தமிழ்ப்பதிப்பகம், சென்னை, 1979.
24. -------------, தமிழில் சமூக நாவல்கள்,
தமிழ்ப்புத்தகாலயம், சென்னை, 1978.

## இ:-- ஆய்வுக்குப் பயன்பட்ட இதழ்கள்

1. இந்திரா பார்த்தசாரதி, 1973-ஆம் ஆண்டுச் சிறுகதைகள் ஒரு மதிப்பீடு, தீபம், ஜூன் 1974.

2. சண்முகவேலன், இரா., 'கோவியின் சிறுகதைகளில் பாத்திரப்படைப்பு', தமிழ்ப் பொழில், (62:8) கார்த்திகை 1988, கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சை.

3. பாலசுப்பிரமணியன், இரா., 'தி.ஜானகிராமனின் நாவல்கள்' தமிழ்ப் பொழில், (63:6) புரட்டாசி 1989, கரந்தைத் தமிழ்ச்சங்கம், தஞ்சை.

## ஈ:-- ஆய்வுக்குப் பயன்பட்ட ஆங்கில நூல்கள்

1. Albert J., and others, Sociology, D.Van Nostrand Company, New York, 1979.

2. Balasundaram Palayam, M., An Introduction to Sociology, Macmillan India Ltd., Delhi, 1981.

3. Madan G.R. and R.B. Das, India's Social Transformation Allied Publishers (P) Ltd., New Delhi, 1984.

4. Commen T.K., Social Transformation in Rural India, Vikas Publishing House (P) Ltd., New Delhi, 1984.

5. Paul Chowdry, D., A Hand Book of Social Welfare, Atma Ram & Sons, Delhi, 1981.

6. Raja Jeyaraman, Caste and Class Dynamics of inequality in Indian Society, Hindustan Publishing Corporation, Delhi, 1981.

7. Rajendra Pandey, Sociology of Youth, Sterling Publishers (P) Ltd., New Delhi, 1984.

8. Robert K.Morton and Robert Nisbet, Contemporary Social Problems, New York, 1971.



# பின்னிணைப்பு

## எழுபதுகளில் இந்தியாவில் ஏற்பட்ட குறிப்பிடத்தக்க அரசியல் சமுதாய மாற்றங்கள்

### 1970

சனவரி - 8 தமிழ் நாட்டில் உணவு தானியங்கள் விற்பனையின்மீது இருந்த கட்டுப்பாட்டினை மாநில அரசு நீக்கியது.

மார்ச் - 24 நாட்டிலுள்ள பதினான்கு முக்கிய வங்கிகளை தேசிய மயமாக்கும் சட்டத்திற்குப் பதிலாக, வங்கி நிறுவனங்கள் மீதான (லாப நோக்கு மற்றும் இடம் மாற்றி ஏற்றுக்கொள்ளுதல்) மசோதாவை மக்களவை நிறைவேற்றியது.

செப்டம்பர் - 2 குடியரசுத் தலைவர் வி.வி.கிரி விவேகானந்தா பாறை நினைவுச் சின்னத்தை நாட்டுக்கு அர்ப்பணித்தார்.

நவம்பர் - 21 பௌதீக நிபுணரும், நோபல் பரிசைப் பெற்றவருமான டாக்டர் சர்.சி.வி.இராமன் பெங்களூரில் காலமானார்.

### 1971

சனவரி - 2 ஐந்தாவது பொதுத் தேர்தலில் காங்கிரஸ் (ஆர்)-ஐ எதிர்த்துப் போட்டியிட காங்கிரஸ் (ஓ), ஜனசங்கம் மற்றும் சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி ஆகியவை இணைந்து கூட்டணி ஒன்றை ஏற்படுத்தின.

| | | |
|---|---|---|
| மார்ச் | - 1 | ஐந்தாவது பொதுத் தேர்தலுக்கான வாக்களிப்பு நாடு முழுவதும் துவங்கியது. |
| மார்ச் | - 10 | பத்தாவது மக்கள் தொகைக் கணக்கெடுப்பு நாடு முழுவதும் துவங்கியது. |
| மார்ச் | - 18 | திருமதி. இந்திராகாந்தி தலைமையிலான மத்திய அமைச்சரவை பதவியேற்றது. |
| மே | - 13 | பொது ஆயுள் காப்பீட்டுக் கழகங்கள் பற்றி குடியரசுத் தலைவர் திரு. வி. வி. கிரி வெளியிட்ட அறிக்கையில் ஆயுள் காப்பீட்டுக் கழகங்களை தேசிய மயமாக்கும் சட்டம் இடம் பெற்றிருந்தது. |
| ஆகஸ்டு | - 2 | கர்ப்பத்தடைகளைச் சட்ட பூர்வமாக்கும், பிள்ளைப் பேற்று மசோதாவை மக்களவை ஆமோதித்தது. |
| டிசம்பர் | - 17 | நாட்டின் உயரிய விருதான பாரத ரத்னாவை குடியரசுத் தலைவர் திரு. வி. வி. கிரி, பிரதம மந்திரி திருமதி. இந்திராகாந்திக்கு வழங்கிச் சிறப்பித்தார். |

## 1972

| | | |
|---|---|---|
| சனவரி | - 5 | அமெரிக்காவிலிருந்து வரும் உணவு தானியங்கள் மீதான இறக்குமதித் தொடர்பை, பி.எல். 480-இன் கீழே இந்தியா துண்டித்தது. |

| | | |
|---|---|---|
| மார்ச் | - 5 | மாநில சட்டப் பேரவைகளுக்கான பொதுத் தேர்தல் நாடு முழுவதும் நடைபெற்றது. |
| ஜூன் | - 2 | வானவியல் ஆராய்ச்சிக்கான அமைப்பு ஒன்றை மத்திய அரசாங்கம் நிறுவியது. |
| ஆகஸ்டு | - 12 | வானவியல் ஆராய்ச்சிக்கென ஏற்பட்ட அமைப்பால் உருவாக்கப்பட்ட முதல் ஏவுகணை, தும்பா ஏவுகணை செலுத்து தளத்தில் இருந்து ஏவப்பட்டது. |
| டிசம்பர் | - 25 | "ராஜாஜி" எனப்படும் சக்கரவர்த்தி டி.இராஜகோபாலாச்சாரியார் சென்னையில் காலமானார். |

1973

| | | |
|---|---|---|
| சனவரி | - 27 | பாரதத்தின் மிகப்பெரிய ஏவுகணையான ரோஉறினி-560 ஆந்திரப் பிரதேசத்தின் ஸ்ரீஉறரிகோட்டாவிலிருந்து விண்ணை நோக்கிச் செலுத்தப்பட்டது. |
| பிப்ரவரி | - 5 | பிரதம மந்திரி திருமதி.இந்திராகாந்திக்கு எ.ஃப்.ஏ.ஒ. விருது வழங்கப்பட்டது. |
| மார்ச் | - 6 | தொலைக்காட்சி நிகழ்ச்சிகளைப் பரிவர்த்தனை செய்துகொள்ளும் ஒப்பந்தத்தின் முதற்குறிப்பில் அனைத்திந்திய வானொலியும், ஜி.ஆர்.டி. தொலைக்காட்சியும் கையொப்பமிட்டன. |

ஏப்ரல் - 20 "கோடா"விற்கு அருகிலுள்ள "ராவட்-பாடா"வில் அமைக்கப்பட்ட அணுசக்தி நிலையம் செயற்படத் துவங்கியது.

ஏப்ரல் - 1 இந்தியப் புலிகளைப் பாதுகாப்பதற்கென ரூபாய் நாற்பது மில்லியன் செலவில் திட்டமொன்று துவக்கப்பட்டது.

ஏப்ரல் - 24 அடிப்படை உரிமைகளை உள்ளடக்கிய நாட்டின் சட்ட திட்டங்களில், தேவைப்படும் திருத்த வரைவுகளைச் செய்வதற்கான பாராளுமன்றத்தின் உரிமையை, உச்ச நீதிமன்றம் ஏற்றுக்கொண்டது.

## 1974

மே - 8 இரயில்வே ஊழியர்களின் வேலை நிறுத்தம் நாடெங்கிலும் துவங்கியது.

மே - 18 பூமிக்கடியிலான முதலாவது அணுகுண்டு வெடிப்பு சோதனையை ராஜஸ்தானிலுள்ள, "போக்ரான்" என்னுமிடத்தில் இந்தியா நிகழ்த்தியது.

மே - 23 பாரதத்திற்கு அளித்துவந்த அணுசக்தி ஆராய்ச்சிக்கான உதவியை, கனடா நிறுத்திக்கொண்டது.

மே - 28 இருபது நாட்களாக நடைபெற்றுவந்த இரயில்வே ஊழியர்களின் வேலை நிறுத்தம் விலக்கிக் கொள்ளப்பட்டதைத் தொடர்ந்து, கைது செய்யப்பட்ட ஜார்ஜ் ஃபெர்னாண்டஸும், மற்ற இதர தலைவர்களும் விடுவிக்கப்பட்டனர்.

ஜூன் - 27 கச்சத்தீவை இலங்கைக்கு அளிப்பதற்கான ஒப்பந்தம் டெல்லியில் கையெழுத்தானது.

செப்டம்பர் - 7 சிக்கிம் மாநில மக்களுக்கு, மக்களவையில் பிரதிநிதித்துவம் அளிப்பதற்கான 35-ஆவது திருத்த சட்ட மசோதா நிறைவேற்றப்பட்டது. மிசா சட்டத்தின் கீழ் கடத்தல்காரர்களைச் சிறைப்படுத்தும் சட்டம் அமலாக்கப்பட்டது.

செப்டம்பர் - 19 பொருளாதார மற்றும் தொழிற்துறைக்கான திட்டங்களைப் பற்றிய ஒப்பந்தத்திற்கான, முதற் குறிப்பில், பாரதமும், சோவியத் யூனியனும் கையொப்பமிட்டன.

## 1975

ஏப்ரல் - 19 சோவியத் யூனியனிலுள்ள விண்வெளி ஆய்வுக்கூடத்திலிருந்து 'ஆர்யபட்டா' செயற்கைக்கோளைச் செலுத்தியதன் மூலம் இந்தியா வானவியல் ஆராய்ச்சியில் புதிய சாதனை படைத்தது.

மே - 11 ஸ்ரீஹரிகோட்டாவிலுள்ள தரைக் கட்டுப்பாட்டு நிலையம், ஆர்யபட்டாவிற்குக் கட்டளைகளை வழங்கத் துவங்கியது.

மே - 12 இந்தியாவின் 22-ஆவது மாநிலமாக சிக்கிம் இணைந்தது.

ஜூன் - 12 திருமதி. இந்திராகாந்தியின் தேர்தல் வழக்கில், அலகாபாத் உயர்நீதி மன்றம் ஊழல் குற்றங்கள் இரண்டினை ஏற்றுக்கொண்டு அவர் பதவியில் 20 நாட்கள் இருக்க தடை விதித்தது.

ஜூன் - 20 பிரதம மந்திரியைத் தன்னிச்சையாகப் பதவி விலகக் கோரும் அலகாபாத் உயர்நீதி மன்றத்தின் உத்தரவை நிறுத்தி வைத்து, பிரதம மந்திரியின் முறையீட்டைக் கவனிக்கும் ஒரு சிறப்பான ஏற்பாட்டிற்கு உச்சநீதி மன்றம் ஒப்புக்கொண்டது.

ஜூன் - 24 உச்சநீதி மன்றத்தின் நீதிபதி திரு. வி. ஆர். கிருஷ்ண அய்யர் அலகாபாத் உயர்நீதி மன்றத்தின் தீர்ப்பை நிபந்தனையுடன் நீடிக்கும் வகையில் ஏற்றுக் கொண்டார்.

ஜூன் - 26 நாட்டின் பாதுகாப்புக்கு உள்நாட்டிலிருந்து அபாய-மேற்படும் நிலைமை உண்டாவதால், நாட்டில் அவசர நிலை பிறப்பிக்கப்படுவதாகக் குடியரசுத் தலைவர் ஆணை பிறப்பித்தார். இதனையொட்டி மொரார்ஜி தேசாய், ஜெயப்பிரகாஷ் நாராயணன் மற்றும் சில

எதிர்க்கட்சித் தலைவர்களும், காங்கிரஸின் அதிருப்தியாளர்களும் கைது செய்யப்பட்டனர்.

ஜூன் - 27 நடமாடும் நீதி மன்றங்களில் கைது செய்வதற்குக் குடியரசுத் தலைவர் ஆணை தடைவிதித்தது.

ஜூலை - 1 திருமதி. இந்திராகாந்தி இருபது அம்சத் திட்டத்தை அறிவித்தார். இதன்படி, கடத்தல்காரர்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும்வகையில், சட்டத்திலிருந்த குறைபாடுகளை அகற்ற புதிய சட்டம் பிறப்பிக்கப் பட்டது.

ஜூலை - 4 ஆர். எஸ். எஸ்., ஆனந்த் மார்க், ஜமத்-இ-இஸ்லாம் மற்றும் 23 அமைப்புகள் தடை செய்யப்பட்டன.

ஜூலை - 24 அரசியல் சட்டத்தின் 38-ஆவது திருத்தத்தை மக்களவை அங்கீகரித்தது.

ஜூலை - 25 மாற்றமெதுவுமில்லாத அன்னிய செலாவணிக்கான மசோதாவையும், கடத்தல் நடவடிக்கைகளைத் தடை செய்யும் மசோதாவையும் மக்களவை ஆமோதித்தது.

ஜூலை - 29 "மிசா" மசோதாவை மக்களவை நிறைவேற்றியது.

ஆகஸ்டு - 7 அரசியல் சட்டத்தின் 39-ஆவது திருத்த வடிவை ஏற்றுக்கொண்ட பின்பு, மக்களவை, காலவரையின்றி, ஒத்திப்போடப்பட்டது.

ஆகஸ்டு - 8 குடியரசுத் தலைவர், குடியரசுத் துணைத் தலைவர் பிரதம மந்திரி மற்றும் மக்களவை சபாநாயகர் ஆகியோரின் தேர்தல் முடிவு நீதி மன்றத்தின் சட்ட திட்டங்களுக்கு உட்படாது எனக்கூறும் அரசியல் சட்டத்தின் 39-ஆவது திருத்த மசோதா, மக்களவையால் ஏற்றுக்கொண்ட பின்பு, மாநிலங்களவையாலும் அங்கீகரிக்கப்பட்டது.

ஆகஸ்டு - 9 சமூக மற்றும் குற்றவியல் நடவடிக்கைகளின்றும் பிரதம மந்திரிக்கு விலக்கு ஏற்படுத்துவதை நீடிக்கும் அரசியல் சட்டத்தின் 41-ஆவது திருத்த மசோதாவை மாநிலங்களவை ஏற்றுக்கொண்டது.

ஆகஸ்டு - 25 திருமதி. இந்திராகாந்தியின் தேர்தல் வழக்கு சம்பந்தமான விசாரணை உச்சநீதி மன்றத்தில் துவங்கியது.

அக்டோபர் - 9 திருமதி. இந்திராகாந்தியின் தேர்தல் வழக்கில் அரசியல் சட்டம் மற்றும் தேர்தல் சட்ட திருத்தங்கள் மீதான தன்னுடைய தீர்ப்பை உச்ச நீதி மன்றம் நிறுத்தி வைத்தது.

அக்டோபர் - 24 புதிய சட்டத்தின் மூலம் "கொத்தடிமை முறை" ஒழிக்கப்பட்டது.

நவம்பர் - 7 திருமதி காந்தியின் தேர்தல் வெற்றியினை உச்ச நீதிமன்றம் உறுதிப்படுத்தியது.

நவம்பர் - 12 இவ்வழக்கில் அடிப்படை விவாதங்களைச் செவிமடுத்த பெஞ்ச் அமைப்பு உச்சநீதி மன்றத்தால் கலைக்கப்பட்டது.

திசம்பர் - 4 ஜெயப்பிரகாஷ் நாராயணன் சுதந்திரமாக விடுவிக்கப்பட்டார்.

திசம்பர் - 8 ஆட்சேபகரமான செய்திகள் பத்திரிக்கைகளில் வெளிவருவதைத் தடுக்க சிறப்பு அதிகாரங்களைப் பயன்படுத்தப்போவதாகவும், பாராளுமன்ற நடவடிக்கைகளைப் பற்றிய பத்திரிக்கைச் செய்திகளைத் தடை செய்யப் போவதாகவும், புதுவருடப் பிறப்பு தினத்திலிருந்து பத்திரிக்கை ஆலோசனை சபையைக் கலைத்துவிடப் போவதாகவும் அரசாங்கம் முடிவு செய்தது.

## 1976

சனவரி - 4 காங்கிரஸ் (ஓ), ஜனசங்கம், பாரதீய லோக்தளம் ஆகிய கட்சிகளை உள்ளடக்கிய ஜனதா கூட்டணி துவக்கப்படுவதாக சோஷலிஸ்ட் கட்சியின் தலைவர் திரு. என். ஜி. கோரே அறிவித்தார்.

சனவரி - 8 தனிமனிதர்கள் தங்களது உரிமைகளுக்காக, நீதி மன்றங்களை அணுகுவதற்கான தடைச்சட்டம், இன்று குடியரசுத் தலைவரால் கொண்டுவரப்பட்டது.

சனவரி - 15 பர்மாசெகல்லை ஏற்றுக்கொள்வதற்கான மசோதா மக்களவையில் அறிமுகப்படுத்தப்பட்டது.

சனவரி - 20 கடத்தல்காரர்கள் மற்றும் அந்நிய செலாவணி ஏய்ப்பாளர்கள் ஆகியோர் சட்ட விரோதமாகச் சேர்த்த சொத்துகளுக்கு அபராதம் விதிக்கும்-வகையில் கொண்டுவரப்பட்ட மசோதா மக்களவையில் நிறைவேற்றப்பட்டது.

சனவரி - 24 பழைய மிசா சட்டங்கள் இரண்டுக்குப் பதிலாக, உள்நாட்டுப் பாதுகாப்பைக் கவனிக்கும்பொருட்டு கொண்டுவரப்பட்ட புதிய மசோதாவை மக்களவை ஏற்றுக்கொண்டது.

சனவரி - 25 'பாரத ரத்னா' விருது திரு. காமராசருக்கு மரணத்துக்குப்பின்பு வழங்கப்பட்டது.

சனவரி - 28 நகர நிலங்களைப் பற்றிய விதிமுறைகளை உள்ளடக்கிய மசோதா மக்களவையில் கொண்டுவரப்பட்டது.

சனவரி - 31 தமிழ்நாடு, குடியரசுத் தலைவரின் ஆட்சியின் கீழ் வந்தது.

பிப்ரவரி - 4 புதிய போனஸ் சட்டம் மக்களவையால் அங்கீகரிக்கப்பட்டது.

பிப்ரவரி - 5 வேலை நிறுத்தம், செலவினங்களைக் குறைத்தல், தொழிற்சாலைகளை மூடுதல் ஆகியவற்றைத் தடுக்கும் மசோதா மக்களவையில் நிறைவேற்றப்பட்டது.

| | | |
|---|---|---|
| மார்ச் | - 1 | மத்திய, மாநில அளவுகளில் கணக்கு வழக்குகளைத் தணிக்கை முறையிலிருந்து பிரிப்பதற்கான வழிமுறைகளை எளிமைப் படுத்துவதற்கான சட்டங்கள் இரண்டை, குடியரசுத் தலைவர் பிறப்பித்தார். |
| மார்ச் | - 12 | குஜராத் மாநிலத்தில் குடியரசுத் தலைவர் ஆட்சி அமல் படுத்தப்பட்டது. |
| மார்ச் | - 27 | நாடெங்கிலும் நடைபெற்ற இடைத்தேர்தல் முடிவடைந்தபின்பு ஆளும் காங்கிரஸ் கட்சிக்கு, மாநிலங்களவையில் மூன்றில் இரண்டு பங்கு பெரும்பான்மை கிடைத்தது. |
| ஏப்ரல் | - 16 | பெண்களின் திருமண வயதை 15-இலிருந்து 18-க்கு உயர்த்தவும், ஆண்களுக்கான திருமண வயதை 18-இலிருந்து 21-க்கு உயர்த்துவதற்குமான தேவைப்படும் சட்டத்தைக் கொண்டுவர அரசாங்கம் முடிவு செய்தது. |
| ஜூலை | - 17 | சிறந்த கல்வியாளரும், பெரும் தொழிலதிபருமான டாக்டர் ஏ.ராமசாமி முதலியார் சென்னையில் காலமானார். |
| செப்டம்பர் | - 25 | பொதுமக்களுக்கு 3,93,300 மில்லியன் ரூபாய் பணம் ஒதுக்கும் ஐந்தாவது நிதித் திட்டத்தை தேசிய வளர்ச்சிக் கவுன்சில் ஏற்றுக்கொண்டது. |

| | | |
|---|---|---|
| அக்டோபர் | - 10 | அரசியல் சட்டதிருத்த மசோதாவின் மீதான ஒட்டெடுப்புக்கு சட்ட அமைச்சர் கோகலே அனுமதி மறுத்தார். |
| நவம்பர் | - 1 | அரசாங்கத்தின் சில திருத்தங்களை ஏற்றுக்கொண்ட பின்பு, அரசியல் சட்டத்தின் 59 பிரிவுகளை உள்ளடக்கிய, (44வது சட்ட திருத்த) மசோதாவை ஏற்றுக்கொண்டதாக மக்களவை ஆமோதித்தது. |
| திசம்பர் | - 10 | ஒரிஸா மாநில முதன் மந்திரி திருமதி. நந்தினி சத்பதி பதவி விலகியதைத் தொடர்ந்து அம்மாநிலம் குடியரசுத் தலைவரின் ஆட்சியின் கீழ் வந்தது. |
| திசம்பர் | - 20 | திருமதி. காந்தி தம்முடைய அமைச்சரவையை மாற்றியமைத்தார். அமைச்சரவையில் உறிதேந்திர தேசாய் சேர்த்துக்கொள்ளப்பட்டார். திரு. டி. பி. சட்டோபாத்யாயாவுக்கு அந்தஸ்து உயர்வு கிடைத்தது. |
| திசம்பர் | - 24 | குஜராத் மாநிலத்தில் மாதவசிங் சோலங்கி புதிய அமைச்சரவையை அமைத்ததையொட்டி குடியரசுத் தலைவர் ஆட்சி முடிவுக்கு வந்தது. |

1977

சனவரி - 12 மாநிலங்களவையின் உறுப்பினரான திரு. சந்திரசேகரும் மக்களவையில் உறுப்பினரான திரு. மோகன்தாரியாவும் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டனர்.

சனவரி - 18 மக்களவையைக் கலைப்பதாக குடியரசுத்தலைவர் அறிவித்தார். மொரார்ஜி தேசாய், எல்.கே. அத்வானி ஆகியோர் சிறையில் இருந்து விடுதலை செய்யப்பட்டனர்.

சனவரி - 19 பிரகாஷ்சிங் பாதல் விடுதலை செய்யப்பட்டார். தமிழக முன்னாள் முதல்வர் திரு. மு. கருணாநிதிக்கு எதிரான அறிக்கையை சர்க்காரியா கமிஷன் மத்திய அரசாங்கத்திடம் சமர்ப்பித்தது.

சனவரி - 20 அவசர நிலையின் விதிகளைத் தளர்த்துவது என்றும், பத்திரிக்கைத் தணிப்பை அமுல்படுத்துவதில்லை என்றும் அரசு முடிவு செய்தது.

காங்கிரஸ் (ஓ), ஜனசங்கம், பாரதீய லோக்-தளம், சோசலிஸ்ட் கட்சி ஆகியவை இணைந்து ஜனதா கட்சியைத் தோற்றுவிப்பதென முடிவெடுத்தன.

சனவரி - 23 ஜனதா கட்சி தேசிய கமிட்டியின் தலைவராக மொரார்ஜி தேசாய் அறிவிக்கப்பட்டார்.

| | | |
|---|---|---|
| பிப்ரவரி | - 2 | மத்திய அமைச்சரவையில் விவசாய மற்றும் நீர்ப்பாசனத்துறை அமைச்சராக இருந்த ஜெகஜீவன்ராம் அமைச்சர் அவையில் இருந்து விலகியவுடன் ஜனநாயகக் காங்கிரஸை ஆரம்பித்தார். |
| பிப்ரவரி | - 11 | குடியரசுத் தலைவர் பக்ருதீன் அலி அகமது காலமானார். துணைக் குடியரசுத் தலைவர் பி.டி.ஜாட்டி தற்காலிகக் குடியரசுத் தலைவ-ராகப் பொறுப்பேற்றார். |
| மார்ச் | - 1 | பீஹாரில் அரசியல் தலைவர்கள் மற்றும் தொண்டர்களுக்கு எதிராகத் தொடரப்பட்டு முடிவு தெரியாத நிலையில் தேங்கிக் கிடக்கும், மிசா வழக்குகளை விலக்கிக் கொள்வதாக அம்மாநில அரசு அறிவித்தது. |
| மார்ச் | - 16 | 15 மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசங்களில், பரவிக்கிடக்கும் 300 மக்களவைத் தொகுதிகளுக்கான வாக்கெடுப்பு தொடங்கியது. |
| மார்ச் | - 18 | இரண்டாவது சுற்று வாக்கெடுப்பு துவங்கியது. |
| மார்ச் | - 19 | மூன்றாவது சுற்று வாக்கெடுப்பு நடைபெற்றது. |
| மார்ச் | - 20 | நான்காவது சுற்று வாக்கெடுப்பு நடைபெற்றது. ரேபரேலி தொகுதியில் திருமதி.இந்திராகாந்தியும், |

அமேதி தொகுதியில் திரு. சஞ்சய் காந்தியும்,
பிலாவி தொகுதியில் திரு. பன்சிலாலும்
தோற்கடிக்கப்பட்டனர்.

மார்ச் - 21 1975 ஜுன் 25-ஆம் தேதியன்று பிறப்பிக்கப்பட்ட உள் நாட்டு அவசர நிலைப் பிரகடனம் விலக்கிக் கொள்ளப்பட்டது. பத்திரிகைத் தணிப்பு முறையும் ஒழிந்தது. கேரளாவில் ஆளும் கூட்டணிக் கட்சி மொத்தமுள்ள 140 சட்டப்பேரவைத் தொகுதிகளில் 111-ஐக் கைப்பற்றியது.

மார்ச் - 22 ஜனதா கட்சிக்கு மக்களவையில் அறுதிப் பெரும்பான்மை வலு கிட்டியது. திருமதி. இந்திராகாந்தி பதவி விலகினார். ஆர். எஸ். எஸ். மற்றும் 26 அமைப்புகள் மேலிருந்த தடை விலக்கிக்கொள்ளப்பட்டது. திரு. ஒய். பி. சவான் மக்களவையில் காங்கிரஸ் கட்சித் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

மார்ச் - 24 ஜனதா கட்சித் தலைவராக மொரார்ஜி தேசாய் தேர்ந்தெடுக்கப்பட்டதையொட்டி, அவர் பிரதம மந்திரியாகப் பொறுப்பேற்றார்.

மார்ச் - 25 19 உறுப்பினர்களடங்கிய மத்திய அமைச்சரவை அறிவிக்கப்பட்டது. ஆறாவது மக்களவைக் கூட்டத் தொடர் துவங்கியது. திரு. கருணாகரனைத் தலைவ-ராகக் கொண்ட அமைச்சரவை கேரளாவில் பதவியேற்றது.

மார்ச் - 26 மக்களவையின் சபாநாயகராக திரு. நீலம் சஞ்சீவரெட்டி தேர்ந்தெடுக்கப்பட்டார்.

பரோடா வெடிகுண்டு வழக்கு விலக்கிக்கொள்ளப்பட்டது.

மார்ச் - 27 1971, டிசம்பர் 3-ஆம் தேதியன்று பிறப்பிக்கப் பட்ட வெளிநாட்டு அவசரநிலைப் பிரகடனம் ரத்து செய்யப்பட்டது.

மத்திய அமைச்சரவையில் ஜெகஜீவன்ராம் சேர்ந்தார். அனைத்திந்திய அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் தனது நிபந்தனையற்ற ஆதரவை ஜனதா கட்சிக்குத் தெரிவித்துக்கொண்டது.

மார்ச் - 28 ஜெகஜீவன்ராம், பகுகுணா, ராஜ்நாராயணன், ஜார்ஜ் ஃபெர்னாண்டஸ், மற்றும் பிரிஜ்லால்வர்மா ஆகியோர் காபினெட் அந்தஸ்து பெற்ற அமைச்சர்களாகப் பதவியேற்றனர்.

ஏப்ரல் - 11 குஜராத்தில் திரு. பாபுபாய்படேலின் தலைமையிலான ஜனதா கூட்டணி அமைச்சரவை பதவியேற்றது.

ஏப்ரல் - 12 உள் மாநிலங்களுக்கிடையே இருந்த கோதுமைப் போக்குவரவு மீதான தடை புதிய ரேஷன் கொள்கையின் மூலம் ஒழிக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| ஏப்ரல் | - 13 | காங்கிரஸ் கட்சியின் தலைவர் பதவியிலிருந்து திரு. டி. கே. பருவா விலகினார். |
| ஏப்ரல் | - 14 | காங்கிரஸ் கட்சியின் புதிய தலைவராக திரு. ஸ்வரன்-சிங் தேர்ந்தெடுக்கப்பட்டார். |
| ஏப்ரல் | - 16 | மஹாராஷ்டிரா மாநிலத்தின் முதல்வராக திரு. எஸ். பி. சவானுக்குப் பதிலாக திரு. வசந்த்ராவ் பட்டீல் தலைமையேற்றார். |
| ஏப்ரல் | - 20 | கேரள முதலமைச்சர் பதவியிலிருந்து திரு. கருணா-கரன் விலகியதை ஒட்டி திரு. ஏ. கே. அந்தோனியின் தலைமையில் புதிய அமைச்சரவை பதவியேற்றது. |
| | | கோவா சட்டசபை கலைக்கப்பட்டது. |
| ஏப்ரல் | - 29 | மாநில சட்டசபைகளைக் கலைப்பதற்கான உத்தேசத்தை எதிர்த்து சில மாநில அரசுகள் தொடுத்திருந்த வழக்குகள் மற்றும் தடை உத்தரவுகளை உச்ச நீதி மன்றம் தள்ளுபடி செய்தது. |
| மே | - 1 | தன்னுடைய முதலாவது பொதுக்கூட்டத்தை, டில்லியிலுள்ள பிரகதி மைதானத்தில் ஜனதா கட்சி நடத்தியது. இக் கூட்டத்தில் சந்திரசேகர் அக்கட்சியின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். |

மே - 5 புது டில்லியில் நடைபெற்ற கூட்டத்தில், ஜனநாயகக் காங்கிரஸ்கட்சி ஜனதா கட்சியுடன் இணைந்து விடுவதென முடிவு செய்தது.

மே - 8 சிக்கிம் காங்கிரஸ் கட்சியின் உறுப்பினர்களனைவரும் கூட்டுமொத்தமாக ஜனதா கட்சியில் சேர்ந்தனர்.

மே - 13 திரு. ஆர். கே. தொரேந்திர சிங் தலைமையிலான மணிப்பூர் அமைச்சரவை பதவி விலகியது.

மே - 16 மணிப்பூர் குடியரசுத் தலைவர் ஆட்சியின் கீழ் வந்தது.

மே - 19 நெருக்கடி நிலையின்போது நடைபெற்றதாகக் கூறப்படும் அக்கிரமங்கள் பற்றி விசாரிக்க ஜே. சி. ஷா கமிஷன் நியமிக்கப்பட்டது.

மே - 20 அங்கீகரிக்கப்பட்ட தேசியக் கட்சிகள் தங்களுடைய கருத்தை வானொலி, தொலைக்காட்சி ஆகியவற்றின் மூலமாகத் தெரிவிப்பதற்கு முதன்முறையாக அனுமதி-யளிக்கப்பட்டது.

மே - 24 அருணாசலப் பிரதேச காங்கிரஸ் கமிட்டி, ஜனதா கட்சியுடன் இணைந்துகொள்வதென முடிவெடுத்தது.

மே - 28 மாருதி நிறுவன விவகாரங்கள் பற்றி விசாரிப்பதற்கு, அலகாபாத் உயர்நீதி மன்றத்தின் ஓய்வு பெற்ற நீதிபதி திரு. டி. எஸ். மாத்தூர் நியமிக்கப்பட்டார்.

ஜூன் - 7 திருமதி. சசிகலா கக்கோட்கர் தலைமையிலான நான்கு உறுப்பினர் அமைச்சரவை கோவாவில் பதவியேற்றது.

ஜூன் - 14 அரியானா, இமாசலப் பிரதேசம், ஒரிஸா ஆகிய மாநிலங்களில் நடைபெற்ற சட்டப் பேரவைத் தேர்தல்களிலும், டெல்லி மாநகராட்சி சபைக்கு நடைபெற்ற தேர்தலிலும் ஜனதா கட்சிக்கு அறுதிப் பெரும்பான்மை வலு கிட்டியது.

ஜூன் - 15 உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், ஒரிஸா ஆகிய மாநிலங்களில் நடைபெற்ற தேர்தல்களிலும் ஜனதா கட்சிக்குப் பெரும்பான்மை வலு கிட்டியது.

ஜூன் - 16 பீஹாரில் ஜனதாகட்சிக்கும், மேற்கு வங்கத்தில் மார்க்சீஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கும் அறுதிப் பெரும்-பான்மை வலுகிட்டியது.

ஜூன் - 20 திரு. பிரகாஷ் சிங் பாதல் பஞ்சாப் மாநிலத்தின் முதலமைச்சராக பதவியேற்றார்.

ஜூலை - 3 திரு. ஷேக் அப்துல்லா ஜம்மு காஷ்மீர் மாநிலத்தின் முதலமைச்சராக மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

ஜூலை - 13 தமது மக்களவை சபாநாயகர் பதவியை விட்டு விலகிய பின்பு, குடியரசுத் தலைவர் பதவிக்கு போட்டியிட திரு. நீலம் சஞ்சீவரெட்டி வேட்பு மனு தாக்கல் செய்தார்.

| | |
|---|---|
| ஜூலை - 21 | இந்தியாவின் குடியரசுத் தலைவர்பதவிக்கு திரு. நீலம் சஞ்சீவரெட்டி போட்டியின்றி தேர்ந்தெடுக்கப்பட்டார். |
| | திரு. கே. எஸ். ஹெக்டே மக்களவையில் சபாநாயகராக ஒரு மனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். |
| அக்டோபர் - 3 | ஊழல் குற்றங்களுக்காக திருமதி. இந்திராகாந்தி சி. பி. ஐ. யினரால் புதுதில்லியில் கைது செய்யப்பட்டார். மற்றும் கே. டி. மாளவியா, ஹெச். ஆர். கோகலே, டி. பி. சட்டோபாத்யாயா, பி. சி. சேத்தி ஆகியோரும் கைது செய்யப்பட்டனர். |
| அக்டோபர் - 4 | திருமதி. இந்திராகாந்தி நிபந்தனையின்றி விடுவிக்கப் பட்டார். |
| நவம்பர் - 5 | திரிபுரா மாநிலம் குடியரசுத் தலைவர் ஆட்சியின் கீழ் வந்தது. |
| நவம்பர் - 12 | தமிழகத்திலேற்பட்ட புயல், வெள்ளத்தினால் தஞ்சை மாவட்டத்தில் 500க்கும் மேற்பட்டவர்கள் உயிரிழந்தனர். |
| நவம்பர் - 19 | புயல் ஆந்திரப் பிரதேசத்தின் கடற்கரையோரத்தைக் கடக்கையில் ஆயிரத்துக்கும் மேற்பட்டவர்கள் உயிரிழந்தனர். |

டிசம்பர் - 18 காங்கிரஸ் கட்சியின் செயற்குழுவிலிருந்து திருமதி. இந்திராகாந்தி விலகினார்.

## 1978

சனவரி - 3 திருமதி. இந்திராகாந்தி இந்திய தேசிய காங்கிரஸை உடைத்து இந்திரா காங்கிரஸ் கட்சியைத் தோற்று- வித்து அதன் தலைவராக ஆனார். இதனைத் தொடர்ந்து, காங்கிரஸ் கட்சியின் செயற் குழு திருமதி. இந்திராகாந்தியையும், அவருடைய ஆதரவாளர்- களையும் கட்சியிலிருந்தும் வெளியேற்றியது.

சனவரி - 16 கறுப்புப் பணத்தை வெளிக் கொணரும் நடவடிக்கைகளுள் ஒன்றாக, ஆயிரம் ரூபாய் நோட்டுக்களை செல்லாத வையாக ஜனதா அரசாங்கம் அறிவித்தது.

பிப்ரவரி - 25 ஆந்திரப் பிரதேசம், அஸ்ஸாம், கர்நாடகா, மஹாராஷ்டிரா, மேகாலயா ஆகிய மாநிலங்கள் மற்றும் யூனியன் பிரதேசமான அருணாசலப்பிரதேசம் ஆகியவற்றின் சட்டப் பேரவைகளுக்கான தேர்தல் நடைபெற்றது.

ஏப்ரல் - 13 நெருக்கடி நிலையின் போது பயன்படுத்தப்பட்ட அரசியல் சட்டத்தின் 42-ஆவது திருத்த சட்டம் ரத்து செய்யப்பட்டது.

ஏப்ரல் - 30 உள்துறை அமைச்சர் சரண்சிங் ஜனதா கட்சியின் செயற்குழுவிலிருந்தும், பாராளுமன்ற விவகார ஆலோசனைக்குழுவிலிருந்தும் விலகினார்.

மே - 5 "கிஸா குர்ஸிகா" வழக்கில், திரு.சஞ்சய் காந்தி விண்ணப்பித்திருந்த முன் ஜாமீன் மனுவை ரத்து செய்ததோடு மட்டுமல்லாமல், அவரை திஹார் ஜெயிலில் அடைக்கவும் உத்தரவிட்டது.

மே - 12 தமிழ்நாட்டின் முன்னாள் முதல்வர் திரு.கருணாநிதி தம்முடைய அதிகாரத்தைத் தவறான வழியில் பயன்படுத்தியதாக, சர்க்காரியா கமிஷன் தாக்கல் செய்திருந்த அறிக்கை தெரிவித்தது.

மே - 15 நீதி மன்றத்தின் தீர்ப்பு தமக்கெதிராக அமைந்த போதிலும் தாம் ஆட்சியில் நீடிப்பதற்கு, வகை செய்யும் பொருட்டு, வேறு வழியில்லாத நிலையில் தவிர்க்க முடியாமல், நம்பிக்கை அற்ற ஒரு நிலையிலேயே திருமதி.இந்திராகாந்தி நெருக்கடி நிலையைப் பிரகடனப்படுத்தியதாக ஷா கமிஷன் அறிக்கை கூறியது.

ஜுன் - 29 மத்திய அமைச்சரவையிலிருந்து விலகுமாறு சரண்சிங்கும், ராஜ்நாராயணனும் கேட்டுக் கொள்ளப்பட்டனர்.

| | | |
|---|---|---|
| ஜூன் | - 30 | சரண்சிங், ராஜ்நாராயணன் மற்றும் நான்கு உறுப்பினர்கள் மத்திய அமைச்சரவையிலிருந்து விலகினர். |
| ஜூலை | - 11 | நெருக்கடி நிலை அக்கிரமங்களில் திருமதி. இந்திரா-காந்தி, திரு. சஞ்சய் காந்தி மற்றும் பலரின் பங்கைப்பற்றி விசாரிக்க ஆறு வழக்குகள் புதுதில்லி உயர்நீதி மன்றங்களில் தொடரப்-பட்டன. |
| ஜூலை | - 19 | "மிசா" சட்டத்தை மக்களவை ரத்து செய்தது. |
| அக்டோபர் | - 1 | திருமணத்திற்கான குறைந்தபட்ச வயது பெண்டிருக்கு 15-இலிருந்து 18 எனவும், ஆடவருக்கு 18-இலிருந்து 21-ஆகவும் உயர்த்தப்பட்டது. |
| நவம்பர் | - 7 | கர்நாடகத்தின் சிக்மகளூர் தொகுதியிலிருந்து திருமதி. காந்தி மக்களவைக்குத் தேர்ந்தெடுக்கப்-பட்டார். |
| நவம்பர் | - 11 | "மிசோரம்" குடியரசுத்தலைவர் ஆட்சியின் கீழ் வந்தது. |
| திசம்பர் | - 7 | அரசியல் சட்டத்தின் 45-ஆவது திருத்த மசோதா மக்களவையால் ஏற்றுக்கொள்ளப்பட்டது. |
| திசம்பர் | - 19 | சபையில் உரிமை மீறல் குற்றத்துக்காக திருமதி. இந்திராகாந்தி மக்களவையிலிருந்து வெளியேற்றப்பட்டு சிறையிலடைக்கப்பட்டார். |

| | | |
|---|---|---|
| டிசம்பர் | - 23 | டெல்லியில் கிஸான் சம்மேளனம் ஏற்பாடு செய்திருந்த மாபெரும் பொதுக்கூட்டத்தில் சரண்சிங் உரையாற்றினார். |
| டிசம்பர் | - 26 | தில்லி திஹார் சிறையிலிருந்து திருமதி. இந்திரா-காந்தி விடுதலை செய்யப்பட்டார். |

1979

| | | |
|---|---|---|
| சனவரி | - 24 | மத்திய அமைச்சரவையில் ஜெகஜீவன்ராம், சரண்சிங் ஆகியோர் உதவி பிரதம மந்திரிகளாகப் பதவியேற்றனர். |
| சனவரி | - 30 | சிக்மகளூர் பாராளுமன்ற தொகுதி உறுப்பினர் பதவியிலிருந்து திருமதி. இந்திராகாந்தி நீக்கப்பட்டார். |
| பிப்ரவரி | - 27 | "கிஸா குர்ஸிகா" திரைப்படச்சுருளை அழித்தமைக்காக சஞ்சய்காந்தி, மற்றும் முன்னாள் செய்தி-ஒலி பரப்புத்துறை அமைச்சர் வி.சி.சுக்லா ஆகியோருக்கு இரண்டாண்டுகள் சிறைவாசம் விதிக்கப்பட்டது. |
| பிப்ரவரி | - 28 | கிராமப்புறங்களுக்கு நன்மையளிக்கும் வகையில் தயாரிக்கப்பட்ட மத்திய அரசின் ஆண்டு வரவு-செலவுத் திட்டத்தை சரண்சிங் மக்களவையில் சமர்ப்பித்தார். |

ஏப்ரல் - 16 மாருதி நிறுவன விவகாரங்கள் குறித்து விசாரணை நடத்திய நான்கு அதிகாரிகள் மீது பொய் வழக்குகள் தொடர்ந்தமைக்காக திருமதி.இந்திரா காந்தி, ஆர்.கே.தாவன், டி.சென் ஆகியோர் மீது குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டது.

ஏப்ரல் - 22 நாடு முழுவதும் பசுவதைத் தடைச் சட்டத்தை அமல்படுத்துவதற்காக ஆசார்ய வினோபாபாவே உண்ணாவிரதம் மேற்கொண்டார்.

ஏப்ரல் - 26 பசுவதைத் தடுப்புச் சட்டத்தை நாடுமுழுவதும் அமல் செய்யும் வகையில் அரசியல் சட்டத்தில் திருத்தமேற்படுத்தப்போவதாக மத்திய அரசு தந்த உறுதிமொழியைத் தொடர்ந்து வினோபா- பாவேயின் உண்ணாவிரதம் முடிவுக்கு வந்தது.

ஏப்ரல் - 30 நாட்டின் நெருக்கடி நிலை மாறுதல்களை உண்டாக்குவதற்கு மக்களவையில் நிறைவேற்றப் பட்ட சட்டங்களை ஒழிப்பதற்கு ஏற்படுத்தப்பட்ட அரசியல் சட்டத்தின் 44-ஆவது திருத்த மசோதாவிற்கு குடியரசுத் தலைவர் ஒப்புதல் அளித்தார்.

மொரார்ஜி தேசாய், சரண்சிங் ஆகியோருடைய குடும்பங்களுக்கு எதிராகக் கூறப்பட்டுள்ள ஊழல் குற்றச்சாட்டுகளைக் குறித்து விசாரிப்பதற்கென நீதிபதி வைத்தியலிங்கம் நியமிக்கப்பட்டார்.

மே - 20 நெருக்கடிநிலையின் போது நடைபெற்றதாகக் கூறப்படும் அக்கிரமங்களை விசாரிப்பதற்காக சிறப்பு நீதி மன்றங்கள் ஏற்படுத்தப்பட்டன.

மே - 31 மாருதி நிறுவன விவகாரங்களில், ஊழல் குற்றத்துடன் சம்பந்தப்பட்டிருப்பதாக சஞ்சய் காந்தி மற்றும் பலரின் மீது குப்தா கமிஷன் தீர்ப்புகூறி அறிக்கை சமர்ப்பித்தது.

ஜூன் - 12 மாருதி நிறுவன ஊழல் விவகாரங்கள் குறித்து விசாரணை நடத்திய அதிகாரிகளைத் தமது கடமையைச் செய்ய விடாது தொல்லை கொடுத்ததற்காகவும், தேர்தல் சுவரொட்டிகளைத் தயாரிப்பதற்காக அரசாங்க வரைபட நிபுணர்களைப் பயன்படுத்தியதற்காகவும், திருமதி.காந்தி மற்றும் வி.சி.சுக்லா ஆகியோரின் மீது சிறப்பு நீதி மன்றங்களில் வழக்குகள் தொடரப்பட்டன.

ஜூன் - 13 ஜனதா கட்சியிலிருந்து ராஜ்நாராயணன் விலகினார். இந்திரா காங்கிரஸிலிருந்து வெளியேற்றப்பட்ட தேவராஜ் அர்ஸ் "கர்நாடக காங்கிரஸ்" என்னும் புதிய கட்சியைத் துவக்கினார்.

ஜூலை - 10 காங்கிரஸ் மக்களவையில் பிரதான எதிர்க்கட்சி ஆனது. ஜனதா (எஸ்) என்னும் புதிய கட்சிக்கு ராஜ்நாராயணன் தலைவரானார்.

| | | |
|---|---|---|
| ஜூலை | - 11 | ஜனதா அரசுக்கெதிரான நம்பிக்கையில்லாத் தீர்மானத்தைக் காங்கிரஸ் கட்சி கொண்டு-வந்தது. |
| ஜூலை | - 15 | பிரதம மந்திரி பதவியை விட்டு மொரார்ஜி தேசாய் விலகினார். |
| ஜூலை | - 16 | ராஜ் நாராயணனால் தோற்றுவித்த ஜனதா (எஸ்) கட்சிக்குத் தலைமை ஏற்ற சரண்சிங் மத்திய அரசாங்கத்திலிருந்து ராஜினாமா செய்தார். |
| ஜூலை | - 27 | 544 மொத்த உறுப்பினர்கள் எண்ணிக்கையைக் கொண்ட மக்களவையில் 205 உறுப்பினர்களைக் கொண்ட வலுவான ஜனதாக் கட்சியின் தலைவர் பதவியைச் செகஜீவன்ராம் ஏற்பதற்காக தலைமைப் பொறுப்பிலிருந்து மொரார்ஜி தேசாய் விலகினார். |
| ஜூலை | - 28 | ஒன்பது உறுப்பினர்களைக் கொண்ட மத்திய கூட்டணி அமைச்சரவைக்கு சரண்சிங் தலைமையேற்றார். |
| ஆகஸ்ட் | - 2 | ஜீப் ஊழல் வழக்கில் திருமதி.இந்திரா காந்திக்கு ஜாமீன் கிடைத்தது. |
| ஆகஸ்ட் | - 20 | சரண்சிங் அமைச்சரவைக்குத் தாம் அளித்துவந்த ஆதரவை திருமதி.இந்திரா காந்தி விலக்கிக் கொண்டதையொட்டி 24-நாள் சரண்சிங் மந்திரிசபை கவிழ்ந்தது. |

| | | |
|---|---|---|
| ஆகஸ்ட் | - 21 | மக்களவையைக் கலைத்து, வருட முடிவில் பொதுத் தேர்தலுக்கு ஆணை பிறப்பித்த குடியரசுத் தலைவர் அதுவரை இடைக்கால அமைச்சரவைக்குத் தலைமை வகிக்குமாறு சரண்சிங்கைக் கேட்டுக்கொண்டார். |
| ஆகஸ்ட் | - 31 | பாரதத்தின் துணைக் குடியரசுத் தலைவராக திரு. எம். இதயதுல்லா பதவியேற்றார். |
| செப்டம்பர் | - 12 | பெங்களூரில் நடைபெற்ற 2 நாள் ஆலோசனைக் கூட்டத்திற்கு பிறகு, பிளவுபடாத இந்திய தேசிய காங்கிரஸ் கட்சியின் தலைவராக திரு. தேவராஜ் அர்ஸ் ஆனார். |
| செப்டம்பர் | - 14 | திரையுலகத்தின் ஆதரவோடு "தேசியக்கட்சி" என்னும் புதிய கட்சியை நடிகர் தேவ் ஆனந்த் துவக்கினார். |
| செப்டம்பர் | - 26 | புதிதாக உருவாக்கப்பட்ட "லோக்தளம்" என்னும் கட்சிக்கு தலைவராக சரண்சிங்கும், அதன் செயற்குழுவின் தலைவராக ராஜ்நாராயணனும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். |
| அக்டோபர் | - 8 | சர்வோதய தலைவர் ஜெயபிரகாஷ் நாராயண் காலமானார். |
| அக்டோபர் | - 18 | சிக்கிமில் இரண்டு மாத குடியரசுத் தலைவர் ஆட்சிக்குப்பின் என். பி. பண்டாரி தலைமையில் புதிய அமைச்சரவை பதவியேற்றது. |

அக்டோபர் - 25 அங்கீகரிக்கப்படாத, கீழ்மட்டக் காவல்துறைச் சங்கத்தின் தலைவரான திரு.நைனார்தாஸ் தலைமையில் தமிழகத்தில் காவல்துறையினர் பத்து நாட்களாக மேற்கொண்ட வேலைநிறுத்தம் ஒரு முடிவுக்கு வந்தது.

அக்டோபர் - 28 அனைத்திந்திய விற்பனைவரி ஒழிப்பு கமிட்டியினரால் ஒருநாள் "பாரத் பந்த்" நடத்தப்பட்டது.

நவம்பர் - 13 ரெயில்வே ஊழியர்களுக்கு உற்பத்தியுடன் தொடர்பு கொண்ட ஊக்கத்தொகை அறிவிக்கப்பட்டது.

நவம்பர் - 15 இந்தியன் ஏர்லைன்ஸின் கட்டணத் தொகை உயர்வு அமலுக்கு வந்தது.

நவம்பர் - 21 சி.எஃப்.டி. காங்கிரஸ் கட்சியுடன் இணைந்தது.

நவம்பர் - 23 காங்கிரஸ் (யு) கட்சியிலிருந்து விலகிய திரு.கே.பிரமானந்த ரெட்டி இடைக்கால அமைச்சரவையில் தமது தொழிலமைச்சர் பதவியையும் ராஜினாமா செய்தார்.

நவம்பர் - 27. இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர் பதவியிலிருந்து திரு.எஸ்.ஏ.டாங்கே விலகினார்.

நவம்பர் - 30 கேரள சட்டப் பேரவை கலைக்கப்பட்டது.

| | | |
|---|---|---|
| திசம்பர் | - 3, 4 | அஸ்ஸாம் மாநில வாக்காளர் பட்டியலிலுள்ள வெளிநாட்டவர் பெயரை நீக்கக் கோரி, அம்மாநிலத்தில் நடந்த 34 மணி நேர வேலை நிறுத்தத்தைத் தொடர்ந்து அம்மாநில சட்டப்பேரவை செயலிழந்தது. |
| திசம்பர் | - 20 | உஷா கமிஷனின் முன்பு வாக்குமூலமளிக்க மறுத்தமைக்காக திருமதி. காந்தி மற்றும் திரு. பி. கே. முகர்ஜி ஆகியோரின் மீது தொடரப்பட்ட வழக்கை புதுடில்லி உயர் நீதிமன்றம் தள்ளுபடி செய்தது. |

*********
*****
***
*